# வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும்

முனைவர் பி. சரசு



International Institute Of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# வெள்ளுடை வேந்தர்
# தியாகராயரின் வாழ்வும் பணியும்

முனைவர் பி. சரசு

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title | : | **Vellutai vēntar tiyākarāyarin vālvum paniyum** |
| Author | : | **Dr. P. SARASU** |
| Publisher | : | **International Institute of Tamil Studies**, C.I.T. Campus, Taramani, Chennai - 600 113. |
| Publication No | : | 292 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper Used | : | TNPL 16kg Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No.of Pages | : | 296 |
| Price | : | Rs. 65/- (Rupees Sixty Five Only) |
| No.of Copies | : | 1000 |
| Printed by | : | Parkar Computers and Publications 293, Royapettah High Road, Chennai - 600 014. |
| Subject | : | Life History of Thiyagarayar. |

**ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

## அணிந்துரை

"தியாகராயர் திராவிட சமூகத்தில் ஒரு பெரிய விழிப்புணர்ச்சியை உண் டாக்கினார். அரசியலிலே நம்மவர்கள் முதலிடம் பெறவேண்டுமென்று அவர் விரும்பினார். தியாகராயர் போக போக்கியத்தை விடடுத் தாமாகவே கல்லும் முள்ளும் காட்டாறும் கருங்குழியும் நிரம்பிய பாதை வழியே செல்லத் தொடங் கினார். அவர் காலத்திலே தூவிய விதை நன்றாக வளர்ந்திருக்கிறது. அவர் அன்று பறக்கவிட்ட சமுதாயப் புரட்சிக் கொடியின் கீழ் நின்றுதான் நாம் இன்று பணியாற்றி வருகிறோம்" என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் நீதிக் கட்சியை உருவாக்கிய தலைவர்களுள் ஒருவரான தியாகராயர் திராவிட இயக் கத்திற்கு விதைநெல்லாகிய பாங்கினை விளக்கியுள்ளார்.

திராவிட இயக்கப் பெருந்தகை தியாகராயர் தனக்கென வாழாமல் பிறர்க் கென வாழ்ந்தவர். பொது வாழ்வில் நேர்மையையும் தூய்மையையும் கடைப் பிடித்த அவர், காட்சிக்கு எளியவராகவும் கடுஞ்சொல் அற்றவராகவும் விளங் கினார். அவருடைய பண்பு நிறைந்த வாழ்வு மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கத்தக்கது.

"தியாகராயர் வாழ்வு, பின்வருவோர்க்குப் பேரிலக்கியம் போன்றது. அவரது வாழ்வு பெரிதும் பரோபகார வாழ்வாகவே நடந்து வந்தது. இல்லத் தில் இருந்து இத்துணைத் தொண்டு செய்த ஒருவர் வாழ்வு பின்வருவோர்க்கு இலக்கியம் போன்றதென்பது மிகையாகாது'' என்று 'தமிழ்த்தென்றல்' திரு. வி. கலியாணசுந்தரனார் அவர்கள் தியாகராயர் வாழ்வு மக்கள் அனைவரும் பின் பற்றக்கூடிய நல்வாழ்வு என்று குறிப்பிட்டிருப்பது இங்குச் சுட்டத்தக்கது.

நீதிக்கட்சித் தலைவராக விளங்கிய தியாகராயர் தொடக்கக் காலத்தில் காங்கிரசுப் பேரியக்கத்தில் இருந்தவர். தந்தை பெரியாரைப் போன்று சமூக நலனுக்காகக் காங்கிரசு இயக்கத்தில் இருந்து பின்னர் விலகினார்.

காங்கிரசு இயக்கத்தில் இருந்து வெளியேறிய தியாகராயர் டாக்டர் நடேசன், டாக்டர் நாயர் ஆகியோருடன் இணைந்து தென்னிந்திய நல உரிமைச் சங்கம் எனும் நீதிக் கட்சியை 1916-இல் உருவாக்கினார். 1920-ஆம் ஆண்டு நவம்பர்த்

திங்கள் சென்னை மாநிலச் சட்ட மன்றத்திற்குத் தேர்தல் நடைபெற்றது. தேர்தலில் நீதிக்கட்சி வெற்றி பெற்றது. அப்போது சென்னை மாநில ஆளுந ராக இருந்த வெல்லிங்டன் பிரபு தியாகராயரை அழைத்து முதல் அமைச்சர் பதவியை ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். ஆனால் தியாகராயர் மறுத்து விட்டார். அவருக்குப் பதிலாக சுப்பராயலு ரெட்டியார் அவர்களை முதல்வராக்கப் பரிந்துரை செய்தார். அதிகாரப் பலம் கொண்ட இடங்களுக்கு ஆசைப்படாதவர் தியாகராயர். அவரது பதவி ஆசை அற்ற பண்பைக் குறித்து "தியாகராயர் செயல் அவரது சுயநலமின்மையை வலியுறுத்தும்" என்று திரு.வி. கலியாணசுந்தரனார் அவர்களும், "அதிகாரப் பலம் கொண்ட இடங்களுக்கு இச்சைப்பட்டவரல்லஃ் தியாகராயர் என்று அவரது செயல் இவ் வுண்மையை மெய்ப்பித்துக் காட்டிவிட்டது" என்று வ. சர்க்கரை செட்டியார் அவர்களும் பாராட்டினர்.

நீதிக்கட்சித் தலைவராக இருந்த தியாகராயர் எதிர்க்கட்சியான காங்கிரசில் இருந்த திரு.வி. கலியாணசுந்தரனார் அவர்களை மிகவும் மதித்தார். 1921-ஆம் ஆண்டு பக்கிங்காம் கர்நாட்டிக் பஞ்சாலையில் பணிபுரிந்த தொழிலாளர் கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். தமிழ்த்தென்றல் திரு.வி. கலியாண சுந்தரனார் அவர்கள் அத் தொழிற்சங்கத்திற்குத் தலைவராக விளங்கினார். தொழிலாளர் வேலை நிறுத்தம் உச்சக் கட்டத்தை அடைந்தபோது திரு.வி. கலியாணசுந்தரனார் அவர்களை நாடு கடத்துவது என்று ஆங்கில அரசு முடிவு செய்தது. அச்செய்தியை அறிந்த தியாகராயர் திரு.வி. கலியாண சுந்தரனாரை நாடு கடத்தினால் நீதிக்கட்சி அமைச்சரவை பதவியில் இருந்து விலகும் என்று ஆளுநர் வெல்லிங்டன் பிரபுவிடம் அறிவித்தார். அதன் விளை வாக ஆங்கில அரசு தமிழ்த்தென்றல் திரு.வி. கலியாணசுந்தரனாரை நாடு கடத்தும் திட்டத்தைக் கைவிட்டது. நீதிக்கட்சிக்கு எதிரான காங்கிரசுக் கட்சி யில் திரு.வி. கலியாணசுந்தரனார் இருந்தாலும் மொழி, இன உணர்வு மிக்க நல்லவர். எனவே அவரை, நாடு கடத்தப்படுவதில் இருந்து தியாகராயர் தடுத்தார். 'நம்மவர் எங்கிருந்தாலும் நம்மவரே' எனக் கருதிச் செயல்பட்ட தியாக ராயரின் பெரும் பண்பு இதன் மூலம் புலப்படுகிறது.

1882-ஆம் ஆண்டு சென்னை நகராட்சி உறுப்பினராகத் தியாகராயர் தேர்வு செய்யப்பட்டார். 1923-வரை பணியாற்றினார். இவர் ஒருவரே 40 ஆண்டுகளுக்கு மேல் நகராட்சி உறுப்பினராக இருந்தார். அவர் நகராட்சித் தலைவராக இருந்தபோது 1920-இல் முதன்முதலாகச் சென்னை நகராட்சியில் பயிலும் பள்ளி மாணவர்களுக்கு மதிய உணவு வழங்கும் திட்டத்தைத் தோற்றுவித்தார். முதற்கண் ஆயிரம் விளக்குப் பகுதியில் தொடங்கிய இத் திட்டம் 1921-இல் மேலும் விரிவுபெற்று நான்கு நகராட்சிப் பள்ளிகளுக்கும் செயல்படுத்தப்பட்டது. நீதிக்கட்சி செய்த அரிய பெரிய சாதனைகளுக்கு அடித்தளமாக விளங்கியவர் தியாகராயர்.

இந்து சமய அறநிலையத்துறை தோற்றுவிப்பதற்குக் காரணமாகவும் ஆந்திரப் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முதலியன உருவாவதற்குப் பின்புலமாகவும் தியாகராயர் விளங்கினார். தியாகராயர் இறைப் பற்றாளர். இந்து சமயத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவர். ஆனால் கோயில்களில் வடமொழியில் வழிபாடு செய்வதை எதிர்த்தார். மேலும், "கோயில்களில் எல்லா சாதியினரும் குருக்களாக இருக்க வேண்டும்" என்று வலியுறுத்தினார். அக்காலத்தில் மருத்துவக்கல்லூரியில் சமசுகிருதம் ஒரு பாட மாக இருந்தது. அதனால் தமிழ் மாணவர்கள் தொல்லையுற்றனர். தியாகராயர் மருத்துவக் கல்லூரியில் சமசுகிருதம் ஒரு பாடமாக இருப்பதை நீதிக்கட்சி ஆட்சி வழி நீக்கம் செய்ய வழி செய்தார். இங்ஙனம் தமிழகப் பொது வாழ்வில் ஒரு கலங்கரை விளக்கமாக விளங்கிய தியாகராயரைப் பற்றி முனைவர் சரசு அவர்கள் முழுமையாக இந்நூலில் ஆய்வு செய்துள்ளார்.

முனைவர் சரசு அவர்கள் விளக்கமுறை ஆய்வும் கள ஆய்வும் மேற் கொண்டு இவ்வாய்வை நிறைவு செய்துள்ளார். 'தமிழ்ச் சமுதாய விழிப் புணர்ச்சியில் சர்.பிட்டி தியாகராயரின் பங்கு' என்ற முனைவர் பட்ட ஆய்வுத் தலைப்பு நீளம் கருதி சுருக்கமாக 'வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும்' என்று திருத்தம் பெற்றுள்ளது. முனைவர் சரசு அவர்கள் மறைந்தாலும் அவர் கடினமாக உழைத்து உருவாக்கிய இந்நூல் நிலைத்து நிற்கும் வல்லமை பெற்றது.

தமிழக மக்களுக்கு உழைத்த வரலாற்று நாயகர்களான மறைந்த முதல்வர் காந்தியப் பெருந்தலைவர் காமராசர், சி. ப. ஆதித்தனார், செக்கிழுத்த செம்மல் வ. உ. சிதம்பரம்பிள்ளை, விடுதலைப் போராட்ட வீரர் வ.வே.சு. அய்யர், சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் ஆகியோரைப் பற்றி ஏற்கனவே இந்நிறுவனம் நூல்களை வெளியிட்டு உள்ளது. அந்த வரிசையில் முனைவர் சரசு அவர்கள் எழுதிய 'வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும்' என்ற இந்நூல் வெளிவருகிறது. முனைவர் சரசு அவர்களின் குடும்பத்தாரிடமிருந்து பெற்று இந்நிறுவனம் இவ்வாய்வேட்டை வெளியிடக் காரணமாக இருந்த பேராசிரியர் பரமேசுவரன் அவர்களுக்கும் நன்றி தெரி விக்கக்கடமைப் பட்டுள்ளோம்.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும், ஊக்கமும் காட்டிவருகின்ற நிறுவனத் தலைவர், தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க் குடிமகன் அவர்களுக் கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி. இந்நூலி னைச் சிறப்பான முறையில் நூலுருவாக்கம் செய்த திரு. வே. கருணாநிதி அவர்கட்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# நன்றியுரை

"தமிழ்ச் சமுதாயத்தின் விழிப்புணர்ச்சியில் சர்.பிட்டி. தியாக ராயரின் பங்கு" என்னும் இவ்வாய்விற்கு நெறியாளராக அமைந்து வழிகாட்டிய பூ.சா.கோ. கலை, அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர் க. வெள்ளிமலை அவர்களுக்கு எனது உளங் கனிந்த நன்றி மலர்களைப் படைக்கிறேன்.

எனது ஆய்விற்கு இசைவு தந்த பூ.சா.கோ. கலை, அறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர் வி. நாராயணசாமி அவர்களுக்கும், கல்லூரியின் செயலர் டி.கே.பி. வரதராசன் அவர்களுக்கும், தலைப்பைத் தேர்ந்தெடுப்பதில் உதவிய தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் ஈ.கோ. பாஸ்கரதாஸ் அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்விற்குப் பலவகையிலும் உறுதுணையாகவிருந்த தவத் திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார், எம் கல்லூரி முதல்வர் டாக்டர் இரா. வையாபுரி அவர்கள் ஆகியோருக்கு என் நன்றி.

ஆய்வேட்டினைச் செப்பம் செய்ய உதவிய உடன் பணியாற் றும் பேராசிரியர்கள் திருமதி. மனோன்மணி, திருமதி. டாக்டர் சுசீலா அவர்களுக்கும் நன்றி.

ஆய்விற்குப் பொருளுதவியும், தக்க அறிவுரையும் தந்து உதவிய என் அன்பு அண்ணன் திரு. கே. வி. கிருஷ்ணராஜ் அவர் களுக்கு என் நன்றி.

மேலும், இவ்வாய்விற்குப் பல்லாற்றானும் துணை நின்று உதவிய சமூக, அரசியல் தலைவர்களுக்கும், தியாகராயரைப் பற்றிய செய்திகளும், படங்களும் நல்கிய சான்றோர்களுக்கும், ஆய்வுக்குப் பயன்பட்ட ஆவணங்களைப் படிக்க உதவிய நூலகங்கள், சங்கங்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித் தாக்குகிறேன்.

**பி. சரக**

# உள்ளடக்கம்

# பின்னிணைப்புகள்

**பின்னிணைப்பு - 1**



**பின்னிணைப்பு - 2**



## சுருக்கக் குறிப்பு விளக்கம்

| | |
|---|---|
| ஆ.பெ.இ. | ஆசிரியர் பெயர் இல்லை |
| உ.ஆ. | உரையாசிரியர் |
| த.ஆ.ஆ. | தமிழாக்க ஆசிரியர் |
| தொ.ஆ. | தொகுப்பாசிரியர் |
| ப.ஆ. | பதிப்பாசிரியர் |
| ப. | பக்கம் |
| பக். | பக்கங்கள் |
| Ed. | Editor |
| M.L.C.P. | Madras Legislative Council proceedings |
| M.C.M.P. | Municipal Council Meeting proceedings |
| N.M.R. | Native Newspaper Reports |

**Madras Presidency**

1. Ganjam
2. Visagapatnam
3. East Godavari
4. West Godavari
5. Krishna
6. Guntur
7. Nellore
8. Guddappa
9. Kurnool
10. Bellary
11. Ananthapur
12. Chittoor
13. Chinglepat
14. North Arcot
15. Salem
16. South Arcot
17. Coimbatore
18. Tanjore
19. Trichinapoly
20. Madura
21. Ramnad
22. Trinelvely
23. Nilgiris
24. Malabar
25. South Kanara



# முன்னுரை

## 0.0. முன்னுரை

இலக்கியம் வாழ்க்கையின் கண்ணாடியாக அமைவதுடன் சமுதாயத்திற்கு வழிகாட்டியாகவும் திகழ்கிறது. ஆகவே மக்கட்சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் இலக்கியத்திறன், பொருளாதாரம், சமுதாயம், வரலாறு, அறிவியல், பண்பாடு என்னும் பன்னோக்குடன் இலக்கிய ஆய்வுகள் மேற்கொள்ளப் பெறுகின்றன. தனிமனிதர் சிலரின் வாழ்வும், மனித சமுதாயத்திற்குப் பயன் படும் - வழிகாட்டும் இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அவர்கள் சிறிதும் தன்னலமின்றித் தம் வாழ்வைச் சமுதாய நலனுக்கென்றே ஒப்படைக்கின்றனர். அத்தகைய மாமனிதர்களின் வாழ்க்கை வரலாற்றையும் அவர்கள் ஆற்றிய பணிகளையும் ஆய்வது வருங்காலச் சமுதாயத்தின் நல்வாழ்விற்குத் துணை செய்யும்.

சர்.பிட்டி. தியாகராயர் தன்னலம் சிறிதுமின்றிப் பொதுத்தொண்டாற்றினார். குறிப்பாகப் பிராமணரல்லாதாரிடையே விழிப்புணர்வூட்டினார். அவரது வாழ்வு தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டியெழுப்பிய வாழ்வு. அவரது வாழ்வும் பணியும் அறிந்து பயனுற வேண்டியதொன்று என்பதால் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

## 0.1. ஆய்வின் நோக்கம்

தியாகராயரின் வாழ்க்கை வரலாறு இதுகாறும் முற்றிலும் ஆராயப் பெற வில்லை. கீழ்க்காணும் நூல்களில் அவரைப் பற்றிய ஒருசில செய்திகளே கொடுக்கப் பெற்றுள்ளன.

கோ. குமாரசாமியின் 'திராவிடப் பெருந்தகை தியாகராயர்' எனும் நூலிலும், அவரது கையெழுத்துப்படியிலும் தியாகராயரின் பண்பு நலன்கள் மிகச் சுருக்கமாகவே இடம் பெற்றுள்ளன. 'அறிஞர் அண்ணா கண்ட தியாகராயர்', தியாகராயரின் பெருந்தன்மையையும் அவர் பிராமணரல்லாதாருக்காகக் குரல் கொடுத்த முதல்வர் என்பதையும் மிகச்சுருக்கமாகக் கூறுகிறது.

கனராவின், 'நீதிக்காட்சியை நினைப்போம்', சந்திரனின், 'நீதிக்கட்சி வரலாறு', முத்துசாமிப் பிள்ளையின் 'நீதிக்கட்சி வரலாறு', பரமசிவத்தின், 'நீதிக் கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும்' ஆகிய நூல்களில் நீதிக்கட்சி தொடங்கப் பெற்ற நிலை விளக்கப் பெறுகிறது. அதனைத் தோற்றுவித்த முன்னவர்களில் தலையாயவர் தியாகராயர் என்ற அளவில்தான் தியாகராயரைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

'ஆந்திரமகாப்யுதயமு' என்னும் தெலுங்கு நூலில் அவரது வரலாறு சுருக்கமாகச் செய்யுள் வடிவில் காணப்படுகிறது. தியாகராயரின் ஒருசில பண்பு நலன்களும், காந்தியடிகளுடன் அவருக்கிருந்த தொடர்பும் விளக்கப் பெறுகின்றன.

Eugene F. Irshich-க்கின் Political and Social Conflict in South India, நீதிக்கட்சியின் தோற்றத்தையும், அதில் தியாகராயரின் பங்கையும் விளக்குகிறது. மேட்டுக்குடியினருக்கே அக்கட்சி பாடுபட்டதாக இந்நூல் கூறுகிறது.

Indu Rajagopal - இன் The Tyranny of castes - The Non Brahmin Movement and Political Development in South India, பிராமணரல்லாதாரின் எழுச்சியைக் குறிப்பிட்டுத் தியாகராயர் அதற்காகப் பாடுபட்ட நிலையைச் சுருங்கிய அளவில் விளக்குகிறது.

Kasinath Kavlekar - இன் Non-Brahmin Movement in South India, பெல்காமில் நடைபெற்ற பிராமணரல்லாதார் மாநாட்டில் தியாகராயர் கலந்துகொண்ட நிலையைப் பாராட்டுமளவில் அமைந்துள்ளது.

டி.எம். குமரேசனின் Sir. Pitti Theagaraya Chettiar - A Study என்னும் எம்.ஃபில் ஆய்வேடு தியாகராயரின் சமுதாய, அரசியல், கல்விப் பணிகளைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுகிறது.

லோகநாதனின், Social reforms of South India and their Economic Thought: A case study of Sir Pitti. Theagaraya Chettiar என்னும் மேனிலைப் பட்ட ஆய்வேடு பொருளாதாரத்துறையிலும், தொழிற்துறையிலும் தியாகராயர் ஆற்றிய பணிகளைச் சிறப்பித்துக் கூறுகிறது.

இராசாராமின் 'The Justice Party' - A Historical Study (1916-1937) முனைவர் பட்டத்திற்களிக்கப் பெற்ற ஆய்வேடு, நீதிக்கட்சியின் பணிகளை மிக விரிவாகக் கூறுகிறது. அதில் தியாகராயரின் பங்கு பற்றிய செய்திகள் மிகச் சுருக்கமாக இடம் பெற்றுள்ளன.

ஆந்திரபத்திரிகா, சமதர்சினி, பாரதி என்னும் தெலுங்கு இதழ்கள் தியாக ராயரின் மறைவையொட்டி அவர்தம் வாழ்க்கைக் குறிப்புக்களாகச் சில செய்தி களை வெளியிட்டுள்ளன.

Hayanana Rao, Sen. S.P. ஆகியோர் தொகுத்த 'The Indian Biographical Dictionary', 'Dictionary of National Biography', சென்னை அரசு வெளியிட்ட 'Who is Who' என்னும் வாழ்வியல் அகராதி களில் தியாகராயரின் வாழ்க்கைக் குறிப்புகள் ஒரு பக்க அளவில் இடம் பெற்றுள்ளன.

மேலும் சில ஆய்வுகள் தொடங்கப் பெற்றதாக அறிந்து, அவ்வாய்வாளர் களைச் சந்தித்ததில், அவர்கள் அனைவரும் தங்கள் ஆய்வுத்தலைப்புகளை மாற்றிக் கொண்டதாகத் தெரிகிறது. எனவே, அவர்தம் வாழ்வும், புணியும், பண்புநலன்களும் முழுமையாக ஆராயப் பெறவில்லை என்பது தெளிவா யிற்று. ஆகவே, 'தமிழ்ச் சமுதாயத்தின் விழிப்புணர்ச்சியில் சர்.பிட்டி. தியாக ராயரின் பங்கு' என்னும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

அவர் தோன்றிய காலம் நம்நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டிருந்த காலம். அன்று அரசியல், பொருளாதாரம், சமூகம், கல்வி, தொழில், வாணிகம் ஆகிய பல துறைகளிலும் நாடு பின்தங்கியிருந்தது. இச்சூழலில் தோன்றிய தியாகராயர் இத்துறைகளிளெல்லாம் நம் நாடு முன்னேற வேண்டும்; மீண்டும் பண்டைய பெருமையை அடையவேண்டும் என்று கருதினார். அதற்காகத் தம் வாழ்நாள் முழுவதும் அருந்தொண்டாற்றினார். அக்காலத்தில் ஆள்வோர் ஆங்கிலேயராக இருந்தாலும், பிராமணர்கள் எல்லாத் துறைகளிலும் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். இந்நிலையை நன்குணர்ந்த தியாகராயர் முதலில் நாடு பிராமணீயத்தின் ஆதிக்கத்திலிருந்து விடுபடவேண்டும்; பிராமணரல்லாத மக்களும் பிராமணர்களுக்குச் சரிசமமாக எல்லாத் துறைகளிலும் முன்னேற வேண்டும் என்று எண்ணினார். 'ஆங்கில அரசுடன் ஒத்துழைத்து, முதலில் கல்வி, சமூகம், தொழில், வாணிகம், பொருளாதாரம் ஆகிய துறைகளில் தமிழ்ச் சமுதாயம் முன்னேற வேண்டும். அதுவே நாம் பெறவேண்டிய முதல் சுயாட்சி; அரசியல் சுயாட்சி அதற்கடுத்ததுதான்' என்பது அவரது கொள்கை. எனவே, அதற்காக அவர் அயராது உழைத்தார். அதனால் அவர் ஆங்கிலே யரின் அடிவருடி என்றும், சுயாட்சியை வெறுத்தவர் என்றும் தூற்றப்பட்டார். இக்கருத்து இன்றும் சிலரிடையே நிலவி வருகிறது. தியாகராயரின் உண்மை நிலையும், அவரது நாட்டுப்பற்றும் மறைக்கப்பட்ட நிலையில் உள்ளன. எனவே, அவற்றை நன்கு ஆய்ந்து உண்மையைக் காண்பதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 0.2. ஆய்வுமுறை

இதில் விளக்கமுறை ஆய்வும், கள ஆய்வும் மேற்கொள்ளப் பெற்றுள் ளன. தியாகராயர் பதவி வகித்த நிறுவனங்களில் காணப்படும் நிர்வாக அறிக் கைகள், சென்னைச் சட்டமன்றக் குறிப்புக்கள், சென்னை மாநகராட்சிக் குறிப் புக்கள், தமிழக ஆவணக்காப்பகக் குறிப்புக்கள், சென்னை மாநில அரசு ஆணை கள், சென்னை மாநில அரசிதழ், சென்னை மாநில அரசின் மாதமிருமுறை அறிக்கைகள், சென்னை மாநிலப் புலனாய்வுத்துறை அறிக்கைகள், டெல்லி நாடாளுமன்றக் குறிப்புக்கள், கல்கத்தா தேசிய நூலகக் குறிப்புக்கள், 1880 முதல் 1925 வரை வெளியான நாளிதழ்க் குறிப்புக்கள், பம்பாய் மாநில ஆவணக் காப்பகக் குறிப்புக்கள், பம்பாய் மாநில நூலகக் குறிப்புக்கள், இலண்டன் நூலகக் குறிப்புக்கள், இலண்டனிலுள்ள இந்திய அலுவலக நூலகக் குறிப்புக் கள், இலண்டன் அருங்காட்சியகக் குறிப்புக்கள் ஆகியன சிறப்பாக ஆய்வுக் குரிய முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

கள ஆய்வு முறையில் தியாகராயரின் இல்லத்தாரையும், உறவினர்கள், அவருடனுறைந்த நண்பர்களின் சந்ததியார்கள் ஆகியோர்களையும் நேரிற் கண்டு செய்திகள் திரட்டப் பெற்றுள்ளன. ஆய்வாளர் சந்தித்த பெரியார்களின் உரையாடல்கள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. அவர்தம் புகைப்படங்களும் எடுக்கப் பெற்றுள்ளன.

## 0.3. ஆய்வின் வரையறை

தியாகராயரின் வாழ்க்கை வரலாறும் தமிழ்ச் சமுதாயத்திற்கு எழுச்சிப் புணர்ச்சியூட்ட அவர் தோற்றுவித்த நீதிக்கட்சியின் பணிகளும் இவ்வாய்வில் ஆராயப் பெறுகின்றன. தியாகராயர் ஆற்றிய அரசியல், கல்வி, சமூகப் பணி களும், நம் நாட்டுத்தொழில், வாணிக வளர்ச்சிக்கு அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகளும் அவற்றின் வழியாக நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கு அடி கோலிய தன்மையும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெறுகின்றன. பிராமணீ யத்தை எதிர்த்தாலும் வைதிக இந்து என்ற நிலையில் அவர் ஆற்றிய அறப் பணிகள் விளக்கப்படுகின்றன. தியாகராயரின் ஆளுமைத்திறம் இவ்வாய்வில் விரிவாக விளக்கப்படுகிறது. தியாகராயருடன் தொடர்புகொண்ட அக்காலத் தலைவர்கள் பற்றிய செய்திகள், ஆய்வுக்குப் பயன்படுமளவில் மிகச் சுருக்க மாக எடுத்தாளப் பெறுகின்றன.

## 0.4. ஆய்வுப் பொருள்

கீழ்க்காணும் உட்பிரிவுகளில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. இயல் ஒன்றில், தியாகராயர் தோன்றிய காலச் சூழல் ஆராயப்படுகிறது. அக்கால

அரசியல், பொருளாதார, சமூக, கல்வி நிலைகள் விளக்கப்படுகின்றன. தியாக ராயரின் வாழ்க்கை வரலாறு சுருங்கிய அளவில் கொடுக்கப்படுகிறது.

இயல் இரண்டில், தியாகராயரின் அரசியற்பணி விளக்கப்படுகிறது. சென்னை மகாசனசபை, அனைத்திந்தியக் காங்கிரசுப் பேரவை ஆகியவற்றில் அவர் ஆற்றிய பணிகளும், அவ்வமைப்புக்களிலிருந்து அவர் விலகிச் சென்று, தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் (நீதிக்கட்சி) தோற்றுவித்ததன் காரணமும் விளக்கப்படுகின்றன. சென்னைத் திராவிட சங்கத்துடன் அவர் கொண்டிருந்த தொடர்பு விளக்கப்படுகிறது. தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் தோற்ற மும், 'பிராமணரல்லாதார்', 'ஜஸ்டிஸ்', 'திராவிடன்', 'ஆந்திரப் பிரகாசிகா' எனும் இதழ்களை நடத்தி, அவற்றின் மூலம் அவர் மக்களிடையே விழிப்புணர் வூட்டிய நிலையும் விளக்கப்படுகின்றன. மாவட்டங்கள் தோறும் பிராமண ரல்லாதார் மாநாடுகள் நடத்திப் பிராமணரல்லாதாரிடையே விழிப்புணர்வு உண்டாக்கிய நிலை விளக்கப்படுகிறது.

இயல் மூன்றில், தியாகராயர் சென்னை மாநகராட்சி மன்றத்தில் உறுப்பின ராகவும், தலைவராகவும் இருந்து, விளக்கு, தண்ணீர், நகரத் தூய்மை, பொதுச் சுகாதாரம், கழிவுநீர் வயல்கள், பெண்கள், குழந்தைகள் நலம், பூங்காக்கள், தெருக்கள், டிராம் வண்டி வழித்தடங்கள், அங்காடிகள், கூவம் சீரமைப்பு, வரி விதித்தல், மக்கள் நலம் பேணல், நகர விரிவாக்கத் திட்டங்கள் ஆகிய அனைத்துத் துறைகளிலும் கருத்துச் செலுத்தி உழைத்த பாங்கு விளக்கப் படுகிறது. பொதுத் தொண்டில் அவர் காட்டிய நேர்மைத்திறம் ஆராயப் பெறுகிறது. உலகப்பொதுப் பற்றாளர் கழகம், சென்னபுரி ஆயுர்வேத பிரசாரணி சபை, சென்னை ஆரீயன் கிளப் ஆகிய பல சமூக நிறுவனங்களில் பங்கு கொண்டு அவர் செய்த அரும்பணி ஆராயப்படுகிறது.

இயல் நான்கில், தியாகராயர் மாநாடுகள், சட்ட மன்றம் இவற்றின் மூலமா கவும், சென்னை மாநகராட்சி மன்ற உறுப்பினராகவும், தலைவராகவும் இருந்து ஆற்றிய கல்விப்பணி, மதியவுணவுத் திட்டம் வகுத்தமை ஆகியவை பற்றி ஆராயப்படுகின்றன. அவர் முயற்சியால் தோன்றிய வடசென்னை இந்துப் பெண்கள் பள்ளி வாயிலாக அவர் ஆற்றிய தொண்டு விளக்கப்படுகிறது. தமது சொந்தச் சொத்தைக் கொண்டு அவர் நிறுவிய கல்வி நிறுவனங்கள் பற்றிய விளக்கம் அளிக்கப்பெறுகிறது. தொழிற்கல்வி வளர்ச்சிக்காக அவர் மேற்கொண்ட முயற்சிகள் பற்றி விளக்கப்படுகிறது. அஞ்சுமான்-இ-முஃபித்-இ-அல்லா-இ- இசுலாம் என்னும் இசுலாமியக் கல்விக் கழகத்தின் உறுப்பின ராக இருந்து, இசுலாமியர்களின் கல்வி வளர்ச்சிக்காக அவர் ஆற்றிய பணி யின் சிறப்பு எடுத்துக் காட்டப்படுகிறது.

மேலும், பச்சையப்பன் அறக்கட்டளையின் உறுப்பினராகவும், தலைவராக வும், பச்சையப்பன் கல்லூரி முன்னாள் மாணவர் சங்கத் தலைவராகவும் இருந்து பிராமணரல்லாதார் கல்வி வளர்ச்சிக்குத் துணை புரிந்தமை, விக்டோரியா தொழில் நுட்பப்பள்ளி, நுண்கலைக்கூடம் ஆகியவை அமைய மேற் கொண்ட முயற்சிகள், நுண்கலை வளர்ச்சிக்காக ஆற்றிய பணிகள் ஆராயப் படுகின்றன. குறிப்பாக, தாழ்த்தப்பட்டோர், தொழிலாளர் கல்வி வளர்ச்சிக்காக மேற்கொண்ட முயற்சிகள் பற்றி ஆராயப்படுகிறது. இவற்றால் அவரது கல்விப்பணியால் விளைந்த பயன்கள் விளக்கப்படுகின்றன. பல்கலைக் கழகங்களின் தோற்றம், வளர்ச்சி, சட்ட வரன்முறைத் திருத்தங்கள் ஆகிய வற்றில் அவரது பங்கு, வேளாண்மைக் கல்வி, மொழிக்கல்வி ஆகியவற்றில் அவரது கொள்கை, 'தெலுகு அகாடமி' வாயிலாகத் தெலுங்கு மொழிக்கு ஆற்றிய தொண்டு ஆகியவை விரிவாக ஆராயப்படுகின்றன.

இயல் ஐந்தில், தியாகராயர் தொழில், வாணிக வளர்ச்சிக்காக ஆற்றிய அரும்பணிகள் ஆராயப்படுகின்றன. வேளாண்மை, பிற தொழில் வளர்ச்சிக் காக மேற்கொண்ட முயற்சிகள் விளக்கப்படுகின்றன. தாமே முன்னின்று கைநெசவுத் தொழில், சாயத்தொழில், தோல்பதனிடும் தொழில் நடத்தியமை, கைத்தறி நெசவுச் சங்கம் அமைத்தமை ஆகியவை விளக்கப் படுகின்றன. தொழில் வளர்ச்சி மாநாடுகளில் பங்கு கொண்டு கருத்துரைகள் வழங்கியமை பற்றி ஆராயப்படுகிறது. இந்திய மருத்துவத் தொழில் வளர்ச்சிக்கு உதவியமை, போக்குவரத்துச் சாதனங்களின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டமை, தென்னிந்திய வர்த்தக சங்கம் தோற்றுவித்தமை, சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழகத்தின் உறுப்பினராக இருந்து வணிகர்களுக்குற்ற இடையூறுகளைக் களைந்தமை, கூட்டுறவு முறையின் சிறப்புணர்த்தித் தொழிலாளர் நலனுக் குழைத்தமை ஆகியவை ஆராயப்படுகின்றன.

அவரது தொழிலியற் சிந்தனை விளக்கம் பெறுகிறது. அவற்றின் வாயி லாக அவரது சுதேசிய உணர்வின் வெளிப்பாடு ஆராயப்படுகிறது.

இயல் ஆறில், தியாகராயரின் முன்னோர் செய்த அறங்களும், தொடர்ந்து தியாகராயர் செய்த அறப்பணிகளும் விளக்கப்படுகின்றன. விக்டோரியா மன்றத்திற்கு நன்கொடை அளித்தமை, தாது ஆண்டுக் (1876-ஆம் ஆண்டு ஏற்பட்ட கொடிய பஞ்சத்தைத் தாது ஆண்டுக் கருப்பு என்று நூல்கள் குறிப் பிடுகின்றன) கருப்பு என்னும் கொடிய பஞ்சகாலத்தில் தியாகராயர் குடும்பம் செய்த அறங்கள், தியாகராயர் மாணவர்க்களித்த உதவிகள், திருமணவுதவி, ஏழைப் பிராமணர்க்கு உதவி, வீரபத்திரசாமி கோயில் முதலான கோயில்களுக்கு வழங்கிய நன்கொடைகள் குறித்து விளக்கப்படுகின்றன. தொழிலாளர்கள்,

உற்றார் உறவினர்களுக்கு உற்றுழி உதவிய பாங்கும், தரும அன்னசாலை வாயிலாக அன்னதானம் செய்தமையும், இந்து அறநிலையங்களுக்குப் பாது காப்பு அளித்தமையும் அவர்தம் அறப்பணி களாக இடம் பெறுகின்றன.

இயல் ஏழில், தியாகராயரின் ஆளுமைத்திறம் விளக்கப்படுகிறது. ஆளு மைக்கு இலக்கணங்கூறித் தியாகராயரின் தோற்றப்பொலிவு, பழக்க வழக்கங் கள், உளப்பாங்கு என்ற முறையில் அவர்தம் ஆளுமைப் பண்புகள் விளக்கப் படுகின்றன. அவரது சான்றாண்மை, பகைவரும் பாராட்டுந்தகைமை, தன்னல மின்மை, நட்புடைமை, பதவிப்பற்றின்மை, எளிமை, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத் தூய உள்ளம், கொள்கைப் பிடிப்பு, அஞ்சாமை, நாட்டுப் பற்று, சுதேசிய உணர்வு ஆகிய பண்புகள் ஆராயப்படுகின்றன. தியாகராயர் பிற தலைவர்களுடனும், ஆங்கிலேயருடனும் கொண்ட தொடர்பின் வழி நின்று, அவர்தம் பண்புகள் வெளிப்படும் நிலை சுட்டிக்காட்டப்படுகிறது. அவரது பண்பின் விளைவாக அவர்பால் ஈர்க்கப்பட்ட பிற தலைவர்கள், மற்ற உறுப்பினர்கள், ஆங்கிலேயர்கள் ஆகியோர் வழங்கிய பாராட்டுரைகளும், புகழஞ்சலிகளும் எடுத்துரைக்கப்படுகின்றன. தமிழ்ச் சமுதாயத்தினர் அவரைத் தமது முன்னோருள் ஒருவராகக் கருதிப் படையலிட்டு வணங்குந் தன்மையும் சுட்டப்படுகிறது.

முடிவுரையில், ஒவ்வொரு இயலிலும் கண்ட முடிவுகள் நிரல்படத் தொகுத்துரைக்கப்படுகின்றன. அம்முடிவுகளின் வழிநின்று தியாகராயரின் வாழ்வு தமிழ்ச் சமுதாயத்தின் விழிப்புணர்ச்சிக்கென்றே தம்மை ஒப்படைத் துக் கொண்ட பெருவாழ்வு என்னும் முடிவு இவ்வாய்வில் உணர்த்தப் பெறுகிறது.

முடிவுரைக்குப் பின்னர்ப் பின்னிணைப்புக்கள் இணைக்கப் பெற்றுள்ளன. இவ்வாய்வாளர் சந்தித்த பெரியோர்களின் முகவரிகள், புகைப்படங்களுடன் இடம் பெறுகின்றன. தியாகராயரின் கொள்கையறிக்கை (Non - Brahmin Manifesto) நீதிக்கட்சியின் சட்டதிட்டங்கள், நீதிக்கட்சித் தொடர்பான சில செய்திகள், தியாகராயர் சட்டமன்றத்தில் வாக்களித்த நிலைபற்றிய அட்டவணை, தெலுங்கு நூல்களின் படிகளும் அவற்றின் மொழி பெயர்ப்பும், அவர்தம் நினைவுச் சின்னங்களின் படங்கள், அன்னாரின்மறைவிற்காகச் செலுத்தப்பட்ட புகழஞ்சலிகள் என்றின்னோரன்ன செய்திகள் பின்னிணைப்பில் இணைக்கப் பெற்றுள்ளன.

அதன்பின்னர் இவ்வாய்விற்குத் துணை நின்ற நூல்களின் பட்டியல் கொடுக்கப்பெற்றுள்ளது. அது முதன்மைச் சான்றுகள், துணைச்சான்றுகள் என இரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளது.

# பொது விளக்கம்

சட்டமன்றக் குறிப்புகள், சென்னை மாநகராட்சிக் குறிப்புகள், நாளிதழ்கள், நாளிதழ்க் குறிப்புத் தொகுப்பு அறிக்கைகள் (Native Newspaper Reports) ஆகியவைகளில் வெளியிடப் பெற்றுள்ள நாட்கள் அவ்வற்றில் உள்ளவாறே எண் விளக்கத் தில் கொடுக்கப் பெற்றுள்ளன. எண் விளக்கம், பயன்படுத்திய நூல்களின் பட்டியல் ஆகியவற்றை அமைப்பதில் டாக்டர். தமிழண்ணலின் விளக்கமுறை மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

தியாகராயரின் பெயரைச் சர். பிட்டி. தியாகராயர், பிட்டி. தியாக ராய செட்டிகாரு, பிட்டி. தியாகராய செட்டியார், பி. தியாகராய செட்டியார் என்று நூலாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இக் கட்டுரையில் மேற்கோளாகப் பயன்படுத்துமிடத்து அவை அவ்வந் நூல்களில் உள்ளவாறே குறிப்பிடப் பெற்றுள்ளன. ஆய்வு முன்னுரையில் ஓரிடத்தில் மட்டும் சர். பிட்டி. தியாக ராயர் என்றும் ஏனையவிடங்களில் தியாகராயர் என்றும் அவரது பெயர் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைப் பிராமணரல்லாதார் இயக்கம், நீதிக்கட்சி, ஜஸ்டிஸ் கட்சி என்று நூலாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இக்கட்டுரையில் மேற்கோளாகப் பயன் படுத்துமிடத்து அவை அவ்வந் நூல்களில் உள்ளவாறே குறிப் பிடப் பெற்றுள்ளன. தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், பிராமண ரல்லாதார் இயக்கம், நீதிக்கட்சி, ஜஸ்டிஸ் கட்சி என்பன ஒரு பொருள் குறிப்பன. ஆகவே, இக்கட்டுரையிலும் ஏற்ற வகை யில் இப்பெயர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன.

# 1

# சர் பிட்டி தியாகராயர் தோன்றிய காலச் சூழலும் வரலாறும்

## 1.0. முன்னுரை

இந்திய நாடு பண்டு தொட்டுப் பண்பாடு, அரசியல், பொருளாதாரம், சமுதாயம், தொழில் என்றின்னோரன்ன துறைகளில் சிறந்து விளங்கி வந்தது. குறிப்பாகத் தமிழ்ச் சமுதாயமும், தமிழ் நாடும் சங்க காலத்தில் அனைத்துத் துறைகளிலும் மேம்பட்டிருந்தன என்பதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்து கின்றன. காலப் போக்கில் நம் நாடு அன்னியர் ஆட்சிக்குட்பட்டது. பதினெட் டாம் நூற்றாண்டின் இறுதியில் இந்திய நாடு பெரும்பாலும் ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டது; பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இங்கிலாந்து மன்னரின் ஆளுகைக்குட்பட்டது.[1] அக்காலத்து அரசியல் நிலை, கல்வி நிலை, பொருளாதார நிலை, சமுதாய நிலை எவ்வாறிருந்தன என்பதைக் காணல் நலம்.

## 1.1. அரசியல் நிலை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இராணுவத்தில் பணி யாற்றி வந்த சிப்பாய்களின் மனதில் ஆங்கிலேய எதிர்ப்புணர்ச்சி தோன்றியது. அவ்வுணர்ச்சி 1857-ஆம் ஆண்டு புரட்சியாக வெடித்தது. இப்புரட்சியே 'சிப்பாய்க் கலகம்' என்று வரலாற்றாசிரியர்களால் விளக்கப் பெறுகிறது. இந் நிகழ்ச்சியினால் இந்திய அரசியலில் ஒரு பெருமாற்றம் ஏற்பட்டது. இதுவரை 'கிழக்கிந்தியக் கம்பெனி'யின் ஆட்சிக்குட்பட்டிருந்த இந்தியா, ஆங்கிலேய ரின் நேரடி ஆட்சிக்குக் கீழ் வந்தது. ஆங்கிலப் பேரரசி விக்டோரியா 1858-ஆம் ஆண்டில் வெளியிட்ட ஓர் அறிக்கையில், இந்தியக் குடிமக்களுக் குப் பலதுறைகளிலும் முன்னேற்றம் காணக் கூடிய சீர்திருத்தங்களைத் தம் அரசு செய்ய முனைந்திருப்பதாகவும் இந்தியாவில் ஆங்காங்குச் சுதந்திரமாக ஆண்டு வந்த மன்னர்களின் ஆட்சியிலோ, ஆட்சி வரம்பீட்டிலோ தம் அரசு தலையிடாது என்றும், சாதி, நிறம், சமயம் ஆகிய வேறுபாட்டினால் அரசாங் கத்தில் பணிபுரிய யாருக்கும் உரிமை மறுக்கப்படாதென்றும் உறுதியளித்தார்.

இவ்வுறுதி மொழியின் பயனாக 1861-ஆம் ஆண்டிலிருந்து இந்திய நிர்வாகப் பணித்துறை (Indian Civil Service) என்ற உயர் பணிகளில் ஓரளவு இந்தியருக்கும் இடம் ஒதுக்கப் பெற்றது.[2]

பின்னர், ரிப்பன்பிரபு (Lord Rippon) அரசப் பிரதிநிதியாக இருந்த காலத்தில் (1880-1884) 'தல சுய ஆட்சிச் சட்டம்' நடைமுறைக்கு வந்தது. அதன் காரணமாக நகராட்சி மன்றங்களும், ஊராட்சி மன்றங்களும் ஏற்படுத்தப் பெற்றன. பல சீரமைப்புக்களுக்குப் பிறகு 1899-ஆம் ஆண்டில் சென்னை மாநகராட்சியாயிற்று.

இதுகாறும் பண்டைய அரசர்களிடம் அமைச்சர்களாகவும், அரச குருக்களாகவும் இருந்த பிராமணர்கள் ஆங்கில ஆட்சியின் தொடக்கத்தில் செல்வாக்கிழந்திருந்தனர். அதனால் அவர்கள் தாம் இழந்த செல்வாக்கை மீண்டும் பெறுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டனர். அவர்கள் மிக விரைவில் ஆங்கில மொழியைக் கற்றது அம்முயற்சியின் முதற்படியாகும். நாளடைவில் அவர்கள் ஆங்கிலேய அலுவலர்களிடம் மொழி பெயர்ப்பாளராயினர். பின்னர்ச் சிறிது சிறிதாக அவ்வாங்கிலேயர்களின் முழு நம்பிக்கையைப் பெற்று அரசுப் பணிகளில் இடம் பெறலாயினர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடையில் இந்திய நிர்வாகப் பணித்துறை (Indian Civil Service) தொடங்கப் பெற்றபொழுது, பிராமணர்கள் பெருமளவில் மாவட்டத் துணை ஆட்சியாளர்களாகவும் (Deputy Collectors) வட்டாட்சியர்களாகவும் (Tahsildars) பணியாற்றும் நிலை ஏற்பட்டது எனலாம். அதே சமயம் பிராமணரல்லாத மக்கள் பின்தங்கி நிற்க வேண்டிய சூழல் உருவாகி விட்டது.

## 1.2. கல்வி நிலை

ஆங்கில அரசு, 1854-இல் நாட்டின் கல்வி வளர்ச்சிக்காக ஒரு திட்டத்தை அமைத்தது. அதன்படி மாவட்டங்களில் தாய்மொழியில் பயிற்சிப் பள்ளிகள் திறக்கவும், கல்வி வாய்ப்பைப் பெருக்கவும், மாநிலத்தில் கல்வித்துறை ஒன்றை அமைக்கவும், சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய மூன்று நகரங்களில் பல்கலைக் கழகங்கள் தொடங்கவும், சாதி, சமய வேறுபாடின்றி எல்லாப் பள்ளிகளுக்கும் அரசாங்கம் பொருளுதவி வழங்கவும் விதிகள் வகுக்கப் பெற்றன. அவ்வடிப்படையில் பள்ளிகளிலே கீழ் வகுப்புகளில் தமிழும், மேல் வகுப்புகளில் ஆங்கிலமும் பயிற்சி மொழியாக்கப் பெற்றன. சென்னை அரசில் கல்வித்துறை தொடங்கப் பெற்று, இயக்குநர் ஒருவர் நியமிக்கப் பட்டார்.[3] 1857-ஆம் ஆண்டில் 'சென்னைப் பல்கலைக்கழகம்' தொடங்கப் பெற்றது.

படிப்படியாகப் பயிற்சி பெற்ற இந்திய மக்கள் வெளியுலகத் தொடர்பு கொண்டனர். ஐரோப்பாவில் பதினெட்டாம் நூற்றாண்டில் நடைபெற்ற பிரெஞ்சுப் புரட்சியாளர்கள் எழுப்பிய 'சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்' என்ற குரலும் இந்தியரின் இதயத்திலும் சுதந்திர வேட்கையைத் தூண்டி விட்டது. மூடப் பழக்க வழக்கங்களுக்கும், சாதி நீதிகளுக்கும் கட்டுப்பட்டுக் கிடந்த இந்தியர் விழிப்புற்று எழுந்தனர். அதனால் எதையும் அப்படியே நம்பி விடாமல் ஆய்ந்து சீர்தூக்கிக் காணவேண்டும் என்ற ஓர் உணர்ச்சியும் படித்த இந்தியரிடம் ஓங்கி வளரலாயிற்று.[4]

சமயம், தத்துவம், சடங்குகள், கோயில்கள் ஆகியவற்றின் பெயரால் ஆட்சி புரிந்து வந்த பிராமணர், ஆங்கிலேய ஆட்சியில் ஆங்கிலப் படிப்புக்கும், அதனால் கிடைத்து வந்த பதவிகளுக்கும் ஏற்பட்ட மதிப்பை நன்குணர்ந்தனர். ஆனால், உயர்கல்வித் துறையில் பிராமணரல்லாதார் நுழைந்து இடம் பெறுவது குதிரைக் கொம்பாகி விட்டது. உயர்நிலைப் பள்ளிகளில் வட மொழிப் பயிற்சி பெறப் பிராமணர்களே சேர்த்துக் கொள்ளப் பெற்றனர். அறிவியல் வகுப்புகளிலும் பெரும்பாலும் பிராமணர்களே இடம் பெற்றனர். ஏனையோருக்குத் தகுதியிருந்தும் இவ்வாய்ப்பு மறுக்கப்பட்டது எனலாம்.

## 1.3. பொருளாதார நிலை

தொன்மைக் காலத்திலிருந்தே கைத்தொழில், நெசவுத் தொழில், கடல் வாணிகம் ஆகியவற்றில் இந்தியா சிறந்த இடத்தைப் பெற்றிருந்ததை அறிய முடிகிறது. இந்திய நாட்டின் இச்சிறப்பைக் கேள்வியுற்று, வாணிகம் செய்ய வந்த ஆங்கிலேயர்கள் மெல்லமெல்ல இந்தியக் கடல் வாணிகம் முழுவதையும் தமதாக்கிக் கொண்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நம் நாட்டில் சுதேசித் தொழிற்சாலைகள் மறைந்து, பெருமளவு உற்பத்தித் தொழிற்சாலைகள் தோன்றின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குள்ளாக நூற்றுத் தொண்ணூற்று நான்கு பருத்தி ஆலைகளும், முப்பத்தாறு சணல் ஆலைகளும் உருவாகின. இத்தகைய தொழில் வளர்ச்சி ஏற்பட்ட போதிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரிசி, பருத்தி, சணல், எண்ணெய் வித்துக்கள் ஆகியவற்றை ஏற்றுமதி செய்யும் விவசாய நாடாக இந்தியா மாறி விட்டது.[5] (அட்டவணை பக். 22ல் காண்க)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொழில் வளர்ச்சிக்கு ஆங்கிலேய முதலாளிகளே காரணமாவார்கள். தாய் நாட்டில் அவர்கள் பெற்ற அனுபவ அறிவால் துணிந்து செயலாற்றும் திறன் உடையவராயினர். பார்சி வகுப்பினர், ஆங்கிலேயரின் வர்த்தக முறைகளைப் பின்பற்றிச் சில தொழிற்சாலைகளை அமைத்தனர். ஆயினும், அவர்கள் பணத்தை வட்டிக்குக் கொடுப்பதிலே மிகுந்த

### * பருத்தி ஏற்றுமதி

1913-14 வருஷத்தோடு முடிவாகிற 5 வருஷத்திய அட்டவணை கீழ் வருமாறு தெரிவிக்கிறது

| தேசங்கள் | சராசரி அந்தர் எடை | சராசரி தொகை ரூபாய் |
|---|---|---|
| ஜப்பான் | 3,51,090 | 1,41,25,000 |
| இத்தாலி | 47,515 | 19,47,000 |
| யுனைடெட்ராஜ்ஜியம் | 1,54,139 | 6,43,000 |
| சீனா | 16,694 | 6,67,000 |
| ஸ்பெயின் | 10,673 | 4,41,000 |
| பிரான்ஸ் | 29,355 | 11,00,000 |
| இந்துசீனா | 2,140 | 87,000 |
| இலங்கை | 3,325 | 1,21,000 |
| பெல்ஜியம் | 1,80,531 | 67,82,000 |
| ஜெர்மனி | 1,65,980 | 25,72,000 |
| ஆஸ்ட்ரிய அஸ்கேரி | 45,950 | 17,70,000 |
| ருஷியா | 299 | 12,000 |
| ஹாலண்டு | 16,420 | 6,09,000 |
| மற்ற தேசங்கள் | 2,866 | 1,19,000 |
| மொத்தம் | 10,26,977 | 3,09,95,000 |

- திராவிடன், டிசம்பர் 5, 1917.

### 1913-14 இல் எண்ணெய் வித்துக்கள் ஏற்றுமதி

| | அந்தர் வெயிட் | தொகை |
|---|---|---|
| வேர்க்கடலை | 3,44,49,000 | 39,46,362 |
| கொப்பரை | 1,55,46,000 | 7,61,726 |
| ஆமணக்கு | 13,40,000 | 1,88,576 |
| முக்கியமான எண்ணெய்கள் | 3,33,000 | 55,236 |
| எள் | 6,66,000 | 65,411 |
| பருத்திக்கொட்டை | 3,22,000 | 83,932 |
| மற்ற வகைகள் | 6,34,000 | 77,878 |
| மொத்தம் | 8,32,90,000 | 51,79,121 |

- திராவிடன், டிசம்பர் 5,1917.

நாட்டங் கொண்டிருந்தனர். எனவே, பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியா, தேவையான தொழில் வளர்ச்சி அடைந்தது என்று கூற இயலாத நிலை இருந்தது.[5] நெசவுத் தொழிலைப் பொருத்தவரை இந்தியா பெரு வீழ்ச்சியுற்றது என்றே கூறலாம். நெய்த ஆடைகளுக்கு மாற்றாக இந்தியாவிலிருந்து பருத்தியே ஏற்றுமதியாகத் தொடங்கிற்று. அப்பருத்தி லங்காஷயரில் துணிகளாக நெய்யப்பெற்றது; மீண்டும் அந்த ஆடைகள் இந்தியாவிற்கே விற்பனைக்காக அனுப்பபெற்றன. அத்துணிகளுக்கு விற்பனைக் களமாக இந்தியா அமைந்தது. இறக்குமதியான லங்காஷயர் துணிகளை விடக் குறைந்த விலையில் உள்நாட்டுத் துணிகள் விற்பனையாகி இறக்குமதிக்கு ஊறு விளைவிக்கக் கூடாதென்பதற்காக உள்நாட்டுத் துணிகளின் மேல் சுங்கவரி விதிக்கப் பெற்றது. இதனால் இந்தியா நெசவுத் தொழில் நைந்து வரலாயிற்று.[6] தவிர, வாணிகக் கப்பல்களும், இந்தியப் புகை வண்டிப் பாதைகளும், ஆங்கிலேய முதலாளிகளின் உடைமைகளாகவே இருந்தன.[7]

சனல், பருத்தி, எண்ணெய் வித்துக் கள், புகையிலை போன்றவை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப் பெற்றமையால், அவைகளைப் பயிரிடுவதிலே உழவர்கள் ஊக்கம் காட்டினர். அதனால் உணவு உற்பத்தி குறையலாயிற்று. இரும்புக் கனிவளம் நிரம்ப இருந்தும் இந்தியாவில் இரும்புத் தொழிற்சாலை ஒன்று கூடத் தொடங்கப் பெறவில்லை. இவ்வாறு, தொழில் வளம் குன்றியதால் நெசவு, உழவு பிற கைத்தொழில்களை மேற்கொண்டிருந்த பிராமணரல்லாத மக்களின் வாழ்வு மிகவும் நலிவுற்றது. அவர்கள் வறுமையுற்று வருந்தினர். அதே நேரத்தில் பிராமணர் ஆங்கிலக் கல்வி வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொண்டு முன்னேற்றங் கண்டனர்; அரசுப் பணிகளில் சிறந்த இடத்தைப் பெற்றனர். பிராமணரல்லாத இனத்தாரோ தொழில், வாணிகத்தையே தம் வாழ்க்கை வழியாகக் கொண்டிருந்ததால் கல்வியில் கருத்துச் செலுத்த இயலாதவராயினர். எனவே, அவர்தம் நிலை மிகவும் பிற்பட்டதாயிற்று. அவர்களுள் செல்வக் குடும்பத்தினர் சிலரே தங்கள் குழந்தைகளைக் கல்விச் சாலைகளுக்கு அனுப்ப முடிந்தது. இப்பொருளாதார வீழ்ச்சியே கல்வி வீழ்ச்சிக்கும் அடிகோலியது எனலாம்.

## 1.4. சமுதாய நிலை

ஆங்கில ஆட்சிக்கு முன்னரே பன்னெடுங்காலமாகவே இந்திய சமுதாயம் பிராமணக் குருமார்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. பிராமணர்கள் பிறப்பினால் உயர்ந்தவர்கள் என்றும் அவர்களே வேதம் ஓதத் தக்கவர் என்றும் கருதப்பட்டு வந்தனர். அவர்களையடுத்து அரச பரம்பரையினர் நாடாள்வதற்குரியவர் எனப்பட்டனர். ஆயினும், அரசனையும் அடக்கி யாளும் வல்லமை

படைத்தவர்களாகவே பிராமணக் குருமார் இருந்தனர்; வணிகரும், வேளாளரும் அடுத்த நிலையில் வைத்து எண்ணப் பெற்றனர். உடலுழைப்பை மேற்கொண்ட வேளாளர் முதலியோர் பிராமணர்களால் 'சூத்திரர்' என்று அழைக்கப் பெற்றனர். நாளடைவில் பிராமணரல்லாதார் அனைவருமே 'சூத்திரர்' என்று வழங்கப்படும் நிலை உண்டாயிற்று.

பண்டைக் காலத்தில் தொழில் காரணமாக வழங்கப்பெற்ற பெயர்களும், பிரிவுகளும் பிறப்புக் காரணமானவையாகக் கருதப்பட்டு ஏற்றத் தாழ்வு கற்பிக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில், இசுலாம் சமயம் இந்தியாவில் பரவத் தொடங்கியபோது பலர் அச்சமயத்தின் சகோதரத்துவக் கொள்கையால் கவரப்பட்டு, முகம்மதியர்களாயினர். இவ்வகையில் அவர்கள் பிராமணர்களின் ஆதிக்கத்தினின்றும் விடுபட்டவராயினர். ஆனால், இந்துக்களாக இருந்தவர்கள் மட்டுமே சமுதாயக் கொடுமைகளுக்குட்பட்டு அல்லலுற வேண்டியதாயிற்று. 'ஆங்கிலக் கம்பெனி'யாரும், நாட்டில் தலைமைப் பீடத்திலிருந்த பிராமணர்களையே தமது நம்பிக்கைக்குரியவர்களாகக் கருதி, அவர்களையே நாட்டு நிர்வாகப் பதவிகளிலும், வணிகத் துறைப் பணிகளிலும் அமர்த்திக் கொண்டனர். இந்நிலையைக் கண்ட ஆபே டுபாய்ஸ் (Abbe Dubois) என்னும் அறிஞர் ஆங்கிலேயரின் இப்போக்கைக் கண்டித்து எச்சரித்தார்.[8]

கோயில்களில் பிராமணர்களின் ஆதிக்கமே ஓங்கியிருந்தது. ஆங்கிலேயர்களின் வருகைக்குப் பின்னரும் அந்நிலையில் எவ்வித மாற்றமும் நிகழவில்லை. குறிப்பாகத் தென்னகத்தில் பேரரசர்களால் கட்டப்பெற்ற பெருங்கோயில்களின் சொத்துக்களையெல்லாம் கேட்பாரின்றிப் பிராமணர்களே தங்கள் நலனுக்குப் பயன்படுத்தி வந்தனர். தவிர, கோயிலுக்கு வழங்கும் பொருள்களையும் அவர்களே தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர். இந்து சமயக் கொள்கைப்படி அவர்களே அதற்குத் தகுதி படைத்தவர்கள் என்று கருதப்பட்டதால், ஆங்கிலேயரும் இதனைப் பொறுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.[9]

பிராமணர் நிலை இவ்வாறிருக்கத் தாழ்த்தப்பட்ட மக்களோ சொல்ல முடியாத துன்பத்தில் உழன்றனர். தீண்டாமை தலைவிரித்தாடியது. பிராமணர்கள் வாழும் பகுதிகளில், கீழ்ச்சாதி எனக் கருதப்பட்டவர்கள் நடமாடுவதும் குற்றம் என்று கருதும் நிலை இருந்தது.

இத்தகைய சூழலில் பழமையும், பெருமையும் வாய்ந்த தேவாங்க மரபில் தோன்றினார் சர் பிட்டி தியாகராயர்.

## 1.5. தேவாங்க மரபு

தேவாங்கர்கள் நெசவுத் தொழிலைத் தம் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர்கள். 'தேவாங்கர்' என்ற பெயர் அவர்களின் குலப் பெயராகும். 'தேவாங்க' என்ற சொல் தேவ, அங்க என்ற இரண்டு சொற்கள் சேர்ந்த பெயராகும். தேவர்களுக்கு ஆடை நெய்து கொடுத்த தேவல முனிவன் 'தேவாங்கன்' என்று அழைக்கப் பெற்றான். அவன் மரபினர் 'தேவாங்கர்' எனப் பெற்றனர். அவர்கள் வழிபடும் சவுடாம்பிகையின் பெயரிலும் 'ஒளி பொருந்திய திருமுடி அணிந்தவள்' என்னும் பொருள் இருப்பதனால், அவளை வணங்கிய அம்மரபினர் 'தேவாங்கர்' எனப் பெற்றனர் என்றும் கருதலாம்.[10]

சிலப்பதிகாரத்தில் 'துகில்' என்னும் சொல்லுக்குப் பொருளாகப் பல்வகை ஆடைகளின் பெயர்கள் காணப்படுகின்றன. அவற்றுள் 'தேவாங்கு' என்பதும் ஓர் ஆடை வகை என , தெரிகிறது.[11] எனவே, 'தேவாங்கு' என்னும் வகையைச் சார்ந்த ஆடைகளை நெய்தவர்கள் 'தேவாங்கர்' எனப்பட்டனர் என்று கொள்ளுவதே சாலப் பொருத்தமுடையது.[12]

இத்தகு சிறப்பு மிக்க தேவாங்கர்கள், தமது தொழிலில் மிகவும் மேம்பட்டிருந்தனர். அக்காலதது்ச் சென்னை மாநிலத்தில் மிகுதியான தொகையுடைய இனத்தவராகவும் இருந்தனர். இவர்கள் வடமேற்கே பம்பாய் வரையிலும், வட கிழக்கே கல்கத்தா வரையிலும் பரவியிருந்தனர். இவர்கள் மராட்டி, கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளைப் பேசுவோராவர். பெரும்பான்மை கன்னடமும், தெலுங்குமே இவர்களால் பேசப்பட்டு வருகின்றன.[13]

தேவாங்கர் குலம், பல குலப்பிரிவுகளையும் கோத்திரங்களையும் உடையது. அவற்றுள் 'பிட்டிவாளு' என்னும் குலப்பிரிவையும், தபன மகாரிஷி கோத்திரத்தையும் சார்ந்த ஒரு செல்வக்குடியில் தியாகராயர் தோன்றினார். ஆனால், டாக்டர்.எக்னின் எஃப் இர்ஷிக் (Dr. Eugene F. Irshick) தமது நூலில் தியாகராயரைத் தெலுங்கு 'பெரிசெட்டி' என்று குறிப்பிடுவது[14] உண்மை நிலைக்கு மாறுபட்டதாகும்.

எண்ணிக்கையில் மிகுந்தும், தொழிலில் தேர்ந்தும் இருந்தபோதிலும், தேவாங்கர்கள், பத்தொன்பதாம் நூற்றாண்டில் கல்வியில் பின்தங்கியவர்களாகவே இருந்தனர். சிறுவர்களும் இளம் பருவத்திலேயே நெசவுத் தொழிலில் பயிற்சி பெற்று விடுவதால், தொழிலிடத்துள்ள ஈடுபாடு கல்வியில் இல்லாது போயிற்று. பொதுவாகக் கணக்கெடுத்தால் இக்குலத்தார் படிப்பில் பின்தங்கியவரென்றே வகுக்கப் பட்டிருக்கின்றனர்.[15] இவ்வாறு கல்வியில் பின் தங்கிய நிலையில் இருந்த குலத்தில் தோன்றினார் தியாகராயர். இருப்பினும் செல்வக்

குடியில் தோன்றினமையால் உயர்கல்வி பெறும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது எனலாம்.

### 1.6. தியாகராயர்

சென்னையிலும், சென்னையின் சுற்றுப்புறத்திலும், பெருமளவு நிலமும், செல்வமும் பெற்றிருந்த குடும்பத்தில் அய்யாசாமி செட்டியாருக்கு மூன்றாவது மகனாகத் தியாகராயர் 1852-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ஆம் நாளன்று தோன்றினார்.

இவர் பிறந்த ஊர் சென்னைக்கு அருகிலுள்ள எகத்தூர் என்னும் கிராமம்.[16] இவருக்கு முனுசாமி செட்டி, தியாகராய செட்டி என்னும் இரண்டு தமையன்மார் இருந்தனர். எனவே, இவர்தம் தமையனார் 'சீனியர்' தியாகராய செட்டி என்றும், இவர் 'ஜூனியர்' தியாகராய செட்டி என்றும் அழைக்கப் பெற்றனர் இவர்களின் குழந்தைப் பருவத்திலேயே இவர்களுடைய குடும்பம் சென்னையில் குடியேறி விட்டதாகத் தெரிகிறது. இவர்கள் சென்னைக்கு வந்ததும் புதிய வண்ணாரப் பேட்டையில் ஆறுமுக முதலித் தெருவில் இருக்கும் இல்லத்தில் இருந்தனர். இன்றும் அவ்வில்லம் பழைய பிட்டி வீடு என்றே அழைக்கப் பெறுகிறது[17]

### 1.7. இளமையும் கல்வியும்

தியாகராயர் சிறுவனாக இருக்கும் போதே கூர்த்த மதி படைத்தவராகவும், கல்வியில் மிகுந்த நாட்டமுடையவராகவும் இருந்தார். இவரது இவ்வியல்புதான் இவருக்கு உயர்கல்வியளிக்க இவர்தம் பெற்றோர்களைத் தூண்டியது எனலாம். இளமையில் 'ஜார்ஜ் டவுனில்' இருந்த சிறந்த ஒரு பள்ளியில் பயின்று மிகச் சிறப்பாகப் பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வில் (Matriculation) வெற்றி பெற்றார். பின்னர், சென்னை மாநிலக் கல்லூரியில், கணிதத்தை விருப்பப் பாடமாகக் கொண்டு தேர்ந்து 1876-ஆம் ஆண்டில் இளங்கலைப் பட்டத்தைப் பெற்றார்.[18] எஸ். பி. சென் அவர்களால் தொகுக்கப் பெற்ற 'நாட்டுப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாற்று அகராதியில்' (Dictionary of National Biography) இவர் இளங்கலைப் பட்டம் பெற்ற ஆண்டு 1873 என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[19]

ஆனால், சென்னைப் பல்கலைக் கழகத்தின் இளங்கலைப் பட்டதாரிகளின் பட்டியலிலிருந்து, தியாகராயர் பட்டம் பெற்ற ஆண்டு 1876 என்பது தெளிவாகிறது.[20]

மாணவ வாழ்க்கையில் தியாகராயர் தலைமாணக்கராக விளங்கினார்; மாணவப் பருவத்தில் பல்வேறு மொழிகளிலும் எழுதப்பட்ட சிறந்த நூல்களை

இடையறாது படித்து வந்தார். இதுவே பிற்காலத்தில் அவர் மேற்கொண்ட பொதுப்பணிகளுக்குப் பேருதவியாக இருந்தது எனலாம். அத்துடன் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் என்று பல மொழிகளிலும் சிறப்பாகவும், சரளமாகவும் பேசும் வன்மை பெற்றிருந்தார்.[21]

## 1.8. மணவாழ்க்கை

தியாகராயர் தாம் பெருஞ் செல்வராக இருந்தும் மாநெல்லூர் என்னும் கிராமத்தில் 'தேவுவாளு' என்றழைக்கப் பெற்ற குலத்தில், எளிய குடும்பத்தில் தோன்றிய வள்ளியம்மை என்னும் பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டார். இவருக்கு ஓர் ஆண் மகவும், ஏழு பெண் குழந்தைகளும் பிறந்தனர். இவர் மகன் சுப்பிரமணியத்திற்கு இரண்டு ஆண் மக்களும், ஒரு மகளும் இருந்தனர். அவர்களின் மூத்த மகன் இளமையிலேயே இயற்கை எய்தினான். இளைய மகன் இந்திரசேனுவுக்கு, ஐதராபாத்தைச் சேர்ந்த நீலாவதி என்னும் பெண்ணை மணமுடித்து வைத்தனர். அவர்களுக்கு மக்கட்பேறு இல்லை. சுப்பிரமணியம், தம் தந்தை தியாகராயருடன் நல்லிணக்கம் கொள்ளாதவராகவும், தனிமையை விரும்புபவராகவும் இருந்ததால் பிற்காலத்தில் தந்தையாரின் பொதுத் தொண்டுகளிலும், தொழிலிலும் மனம் பற்றாதவராக இருந்தார். எனவே, தியாகராயருடைய குடும்பம் ஆண் சந்ததியின்றியும், அவருக்கேற்ற சந்ததியினரின் தொடர்ச்சியின்றியும் மறைய நேரிட்டது. அவர் தம் பெண்வழிச் சந்ததியினர் இன்றும் அப்பகுதியில் வாழ்ந்து வருகின்றனர்.[22]

## 1.9. தொழிலும் வாணிகமும்

தியாகராயர் தம் தமையன்மாருடன் சேர்ந்து தமது குலத் தொழிலாகிய நெசவுத் தொழிலை மேற்கொண்டார். நெசவாலை ஒன்றையும் தமது இல்லத்திலேயே நிறுவினார். தம் குடும்பத்தார் நடத்தி வந்த தோல் பதனிடும் தொழிலையும், தோல் ஏற்றுமதி வாணிகத்தையும் சிறப்புற நடத்தினார். 'சீனியர்' தியாகராயர், தம் தொழில்களைக் கருத்துடன் நடத்தி வந்ததுடன், பிற்காலத்தில் தம் தம்பி அரசியலிலும், பொது வாழ்விலும் ஈடுபட்ட போது, மிகுந்த ஊக்கம் தந்து உற்சாக மூட்டினார். நாள்தோறும், இரவில் இரண்டு சகோதரர்களும் ஒருங்கிருந்து, தமது வாணிகக் கணக்கு வழக்குகளைச் சரிபார்த்த பின்னரே உறங்கச் செல்வர்.[23] இவ்வாறு, தமையனார் செல்வத்தைச் சேர்க்கத், தம்பியார் புகழை வளர்த்தார் எனலாம். ஆகவே, பிட்டி குடும்பம் செல்வச் சிறப்பும், புகழும் நிறைந்ததாகத் திகழ்ந்தது.

## 1.10. பொது வாழ்வு

தியாகராயர் இளங்கலைப் பட்டம் பெற்ற ஓரிரு ஆண்டிலேயே பொது வாழ்வில் இறங்கினார். சென்னை மாநகராட்சியில் மாநகராட்சி மன்ற

உறுப்பினராக ஏறக்குறைய நாற்பதாண்டுகள் பணியாற்றினார். பின்னர், 1919-ஆம் ஆண்டில் அம்மன்றத்தின் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றார். தொடர்ந்து நான்காண்டுகள் அப்பதவியை வகித்தார்.[24]

1910-1912 ஆண்டுகளில் மாநகராட்சியின் பிரதிநிதி என்ற முறையில் சென்னை மாநிலச் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுத் தொண்டாற்றினார். மேலும், சென்னை மகாசனசபை, அகில இந்திய காங்கிரசுப் பேரவை ஆகியவற்றிலும் உறுப்பினராக இருந்தார். மணியக்காரர் சத்திரத்திற்குச் சிறப்புச் செயலாளராகத் தொடர்ந்து இருபத்து நான்காண்டுகள் இருந்தார். சென்னை உலகப் பொதுப்பற்றாளர் கழகத்தின் (Madras Cosmopolitan Club) உறுப்பினராகவும், தலைவராகவும் இருந்தார். சுருங்கக்கூறின், தியாக ராயர் பல பொது நிறுவனங்களிலும், சமூக நல இயக்கங்களிலும் பங்கேற்றார் எனலாம்.

1916-ஆம் ஆண்டின் இறுதியில் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைத் தோற்றுவித்தார். அதுவே பின்னர் நீதிக் கட்சியாக வளர்ந்து, ஆட்சியையும் ஏற்றது. அச்சமயம் தமக்களிக்கப்பட்ட முதலமைச்சர் பதவியை ஏற்க மறுத்து, தியாகத்தின் சின்னமாகத் திகழ்ந்தார். பிராமணரல்லாதாரின் முன்னேற்றத்திற்காகப் 'பிராமணரல்லாதார்' (Non-Brahmin), 'ஜஸ்டிஸ்' (Justicc) என்ற ஆங்கிலச் செய்தித் தாள்களையும், 'திராவிடன்' என்னும் தமிழ்ச் செய்தித் தாளையும், 'ஆந்திரபிரகாசிகா' என்ற தெலுங்கு இதழையும் நடத்தினார். இவ்வண்ணம், அவருடைய வாழ்க்கை பிறர் நலத்துக்காகவே கழிந்ததை உணர முடிகிறது. தியாகராயரின் பொது நலத் தொண்டினைப் பாராட்டும் வகையில் அரசு அவருக்கு 'இராவ் பகதூர்' பட்டமும் (1909), 'திவான்பகதூர்' பட்டமும் (1919) 'சர்' பட்டமும் (1920) அளித்துச் சிறப்பித்தது.

## 1.11. தியாகராயரின் மறைவு

ஏறக்குறைய ஐம்பதாண்டுகள் பொது நன்மைக்காகவென்றே வாழ்ந்த அவரது வாழ்க்கை 28.4.1925 அன்று இரவு 9.45 மணியளவில் முடிவுற்றது. (சான்றிதழ் பின்னிணைப்பில்) தியாகராயர் தம் பெயருக்கு ஏற்றவாறு தியாகத்துக்கு அரசராகவே வாழ்ந்து மறைந்தார் எனலாம். அன்னாரது மறைவு நாட்டிற்குப் பேரிழப்பு என்பதை, அவருடன் மாறுபட்ட கொள்கையுடைய வரும் மறுத்துரையார். அதற்கு அன்னாரது இறுதி ஊர்வலமே சான்றாய் அமைந்தது.[25]

## இயல் சுருக்கம்

நம்நாடு ஆங்கிலேயரிடம் அடிமைப்படத் தொடங்கியதால், வறுமை மிகுந்து, அல்லலுற்ற சூழ்நிலையில் தோன்றியவராதலால் தியாகராயர் அவ்வடிமைத் தளையினின்றும் விடுபடவே விரும்பினார். ஆயினும், ஆங்கிலேயரைக்

காட்டிலும் பிராமணர்தம் ஆதிக்கம் நாட்டிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பதை உணர்ந்து, முதலில் அந்த ஆதிக்கத்தை ஒழிப்பதையே தமது முதல் கடமையாகக் கொண்டு பணியாற்றிய தியாகராயர் தமது 73-ஆவது வயதில் மறைந்தார். அவர் தோற்றுவித்த இயக்கம், பிற்காலத்தில் பல சீர்திருத்தங்களுக்கு வித்திட்டது எனலாம்.

## எண் விளக்கம்

1. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - "மக்களும் பண்பாடும்", ப. 456
2. மேற்படி, ப. 466.
3. மேற்படி, ப. 473.
4. மேற்படி, ப. 474.
5. மு.விஸ்வநாதன், இந்தியப் பொருளாதார வளர்ச்சி, ப. 24.
6. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு - " மக்களும் பண்பாடும்", ப.501.
7. மேற்படி, ப. 502.
8. Swamy Dharma Thearthaji Maharaj, The Menace of Hindu Imperialism, p.178.
9. மேற்படி, ப. 179.
10. சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார், தேவாங்கர் குல வரலாறும், கோத்திரம், ரிஷிப் பிரபவரம் முதலான அகராதிகளும்,ப. 3.
11. சிலப்பதிகாரம், பொ.வெ. சோமசுந்தரனார் உரை, ப. 126.
12. இராசமாணிக்கனார், "சர். பிட்டி. தியாகராய செட்டியார்", Theagaraya Chetty High School - Golden Jubilee Souvenir, p.29.
13. சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார், தேவாங்கர் பற்றிய இலக்கியங்கள் (கையெழுத்துப் பிரதி 8.10.49), தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி நூலகம், பேரூர், ப. 1.
14. Eugene F. Irshick, Politics and Social Conflicts in South India, p.47.
15. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார், தேவாங்கர் குல வரலாறும், கோத்திரம், ரிஷிப் பிரபவரம் முதலான அகராதிகளும், ப. 15.
16. C. Hayavana Rao (Ed.), The Indian Biographical Dictionary (1915) p.32 and T.M.Kumaresan, " Sir Pitti Theagarayar A study". M.Phil Thesis, Madras University, p.61.

17. பி.எம். குமாரசாமி செட்டி (சீனியர் தியாகராய செட்டியின் புதல்வி காமாட்சியம்மாவின் புதல்வரும், சென்னை மாநகராட்சிப் பொறியியலாளர் பூபால் அவர்களின் மாமனாரும் ஆவார்) அவர்களை ஆய்வாளர் 10.4.1985 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

18. M. Sreeramulu Chetty, " Sir pitti Theagarayar Chetty- Life Sketch ", Theagarayar Chetty High School Golden Jubilee Souvenir, pp.1-2.

19. S.P. Sen (Editor), Dictionary of National Biography, p.304.

20. University of Madras, The Calender for 1894 - 95, Vol - I, p.389.

| Name | Year | optional language | optional subject | class | other details |
|---|---|---|---|---|---|
| (Tyagarayan. P) | 1876 | Telugu | Mathematics Natural philosophy | III | Merchant & Municipal Commissioner. |

21. M. Sreeramulu chetty, "Sir pitti Theagaraya Chetty Life Sketch", Theagaraya Chetty High School Golden Jubilee Souvenir, p.1.

22. பிட்டி முனுசாமி செட்டி (சீனியர் தியாகராய செட்டியாரின் மகன் குமாரசாமி செட்டியாரின் புதல்வர்) அவர்களை ஆய்வாளர் 4.4. 85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

23. செங்கல்வராயன், (சர். பிட்டி. தியாகராயரின் மனைவி சின்ன வள்ளியம்மையின் சகோதரர் அய்யுள்ளு செட்டி என்பவரின் மகன், வள்ளியம்மை மகள் வயிற்றுப் பேரன், ஓய்வு பெற்ற நூலகர், பச்சையப்பன் கல்லூரி) அவர்களை ஆய்வாளர் 8.4.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

24. Hindu, Oct. 25, 1923.

25. மேற்படி, April 29,1925.

# 2

# தியாகராயரின் அரசியல் பணி

## 2.0 முன்னுரை

நாட்டு நலனைக் கருதும் பெரியோர்களில் பலர் அரசியலில் ஈடுபாடு கொண்டு, அத்துறையில் உழைத்து மக்களுக்குப் பணி செய்துள்ளனர். அன்னவர், மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு, பல்வேறு அமைப்புக்களை அமைத்து அவற்றின்வழி மக்களுக்குத் தொண்டாற்றியுள்ளனர். தொண்டு உள்ளம் படைத்த தியாகராயரும், அரசியலில் பெரும் பங்கேற்று மக்களுக்காக உழைத்தார். தம் வாழ்நாள் முழுவதையும், பின்தங்கிய மக்களின் நல்வாழ்வுக்கென்றே செல விட்டார். அவரது அரசியல் வாழ்வு 1882-ஆம் ஆண்டு முதலே சிறந்து விளங் கிற்று. சென்னை மகாசனசபை நிறுவும் முயற்சியே அவரது அரசியல் பணிக் குக் கால்கோள் நிகழ்ச்சியாக அமைந்தது எனலாம்.

## 2.1. சென்னை மகாசனசபை

இச்சபை 1884-ஆம் ஆண்டு மேத் திங்கள் 16-ஆம் நாள் தொடங்கப் பெற்றது. இந்தச் சபையைத் தொடங்கியவர்களில் இந்து நாளிதழ் ஆசிரியர் ஜி. சுப்பிரமணிய அய்யர், எம். வீரராகவாச்சாரியார், பி. அரங்கைய நாயுடு, பி. அனந்தாச்சார்லு, பி. சோமசுந்தரம் செட்டி, பி. தியாகராய செட்டி, சேலம் இராமசாமி முதலியார், பி. அரங்கநாத முதலியார், சர்.பி.மாதவராவ் ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர்.[1]

இச்சபையின் தாய் நிறுவனம் சென்னை மக்கள் சங்கம் (Madras Native Association) என்பதாகும். இச்சங்கம் 1864-ஆம் ஆண்டில், பெருஞ் செல்வாக்கும், மக்கள் நலனில் அக்கறையும் கொண்ட கசலு. இலட்சுமி நரசு செட்டியாரின் பெருமுயற்சியால் நிறுவப் பெற்றது. ஆனால், 1868-ஆம் ஆண்டில் இலட்சுமி நரசு செட்டியார் காலமாகிவிடவே இச்சங்கம் சரிவர இயங்க வில்லை. ஆகவே, அரசியலில் ஈடுபட்டு மக்கள் நலனைக் காப்பதற்கு ஓர்

அரசியல் நிறுவனம் இன்றியமையாதது என்ற உண்மையை அறிந்த தியாக ராயரை உள்ளிட்ட மேற்சொன்ன பெரியோர்கள், செயலற்றுக் கிடந்த 'சென்னை மக்கள் சங்கத்தை' 1884-ஆம் ஆண்டில் புதுப்பித்தனர். 'சென்னை மகாசன சபை' என்ற புதுப்பெயரையும் அதற்குச் சூட்டினர்.[2] இச்சபையில் பட்டதாரி கள், வழக்கறிஞர்கள், துபாஷிகள் (மொழி பெயர்ப்பாளர்கள்), நிலவுரிமைக் காரர்கள் ஆகியோர்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளுவதென்று தீர்மானிக்கப் பெற்றது.[3] மக்களின் கருத்துக்களை அஞ்சாது அரசுக்கு எடுத் துக் கூறுவதும், மக்களின் நிலையை உயர்த்துவதற்கேற்ற வழிமுறைகளைக் கண்டறிந்து செயல்படுத்துவதும் இச்சங்கத்தின் நோக்கங்களாக அமைந்திருந் தன.[4] இந்நோக்கங்களைச் செயல்படுத்தும் செயல் வீரராகத் தியாகராயர் இச் சபையில் இருந்தார். 1886-87ஆம் ஆண்டிற்குரிய சென்னை மகாசனசபை செயற்குழு உறுப்பினர் பட்டியலில் தியாகராயரின் பெயர் காணப்படுகிறது. 1886-ஆம் ஆண்டு முதல் 1912-ஆம் ஆண்டு வரை தியாகராயர் இச்சபையின் உறுப்பினராக இருந்து பணியாற்றியுள்ளாரெனத் தெரிய வருகிறது.[5]

சமுதாயப் பணியே முதல் நோக்கமாகக் கொண்டு இச்சபை நிறுவப் பெற் றது. அக்காலத்தில் மக்களுக்கு ஏற்படும் சிக்கல்களை அரசுக்கு எடுத்துக் கூறி, அவற்றை நீக்குகின்ற பணியை இச்சபை மேற்கொண்டது. இச்சபையின் நிர் வாகச் செயற்குழு (Executive Council) உறுப்பினராயிருந்து தியாகராயர் பெரும் பணியாற்றினார். இச்சபையின் சார்பில் சென்னை நகரின் முதற் பிரி விற்குத் தியாகராயர் செயலாளராக நியமிக்கப் பெற்றார்.[6]

1895-ஆம் ஆண்டில் டி.ஜி. பிள்ளை நிறுவனத்தாருக்கு ஏற்பட்ட ஒரு சிக்கலைத் (சிக்கல் இன்னது என்பது குறிப்பிடப் பெறவில்லை) தீர்ப்பதற்குச் சென்னை மகாசனசபை ஒரு குழுவை நியமித்தது. தியாகராயரும், ஜி. சுப்பிர மணிய அய்யரும், வேணுகோபால பிள்ளையும் இக்குழுவின் உறுப்பினர் களாயிருந்து அச்சிக்கலை ஆராய்ந்து அதை நீக்குவதற்கு வழிகோலியதாகத் தெரிகிறது.[7] தவிர, சென்னை மகாசனசபையின் முதன்மை வாய்ந்த உறுப்பினர் களுள் ஒருவராகத் தியாகராயர் குறிப்பிடப் பெறுகிறார்.[8] தொடக்க காலத்தில் சென்னை மகாசனசபையிலும், சென்னை மாகாணக் காங்கிரசிலும் பிராமண ரல்லாத பெருந்தலைவர் பலர் இருந்தனர் என்று டி. ஜே. ஆர்நால்டும் தமது ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளது நினைவு கூரத்தக்கது.[9] இதனால், பிராமண ரல்லாத பெருந்தலைவர்களுள் தியாகராயரும் ஒருவர் என்பது தெரிய வருகிறது.

5.1.1895-இல் நடைபெற்ற கூட்டத்திலேயே உறுப்பினர்களுள் சில முரண் பாடுகள் தோன்றிவிட்டன என்பதும், சபை சிறுகச் சிறுகப் பிராமணர்களின்

ஆதிக்கத்திற்குட்பட்டுவிட்டது என்பதும் சபையின் நிர்வாகக் குழுக் கூட்ட அறிக்கைகளால் அறிய முடிகின்றன.[10]

1885-ஆம் ஆண்டில் பம்பாயிலும், 1902-இல் அலகாபாத்திலும் நடைபெற்ற காங்கிரசு மகாசபைக் கூட்டங்களுக்குச் சென்னை மகாசனசபை தேர்ந்தெடுத்தனுப்பிய பிரதிநிதிகளின் பட்டியலில் தியாகராயரின் பெயர் காணப் பெறவில்லை. மேலும், அக்குழுக்களில் பெரும்பான்மையினர் பிராமணர்களாகவே காணப்படுகின்றனர்.[11] சபையின் செயற்குழு உறுப்பினர்களான இருபத்தைந்து பேர்களில் பதினேழு பேர் பிராமணர்களாகவே இருந்தனர்.[12]

இவையனைத்தும் தியாகராயரின் உள்ளத்தில் வேறுபாட்டைத் தோற்றுவித்திருக்கும் என்பதில் ஐயமில்லை. நாளடைவில் தியாகராயருக்கு இச்சபையின் நடவடிக்கைகளில் ஈடுபாடு குறைந்ததற்கு இதுவே காரணம் எனலாம். 1912-ஆம் ஆண்டு வரை செயற்குழு உறுப்பினராக இருந்த தியாகராயர்,[13] காங்கிரசு மாநாடுகளுக்குப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப் பெறவில்லை என்பது தெரிகிறது. 1912-ஆம் ஆண்டிற்குப் பிறகு நிர்வாகச் செயற்குழு உறுப்பினர் பட்டியலிலும், சபையின் எந்தக் குறிப்பிலும் தியாகராயரின் பெயர் காணப் பெறவில்லை.[14] எனவே, 1912-ஆம் ஆண்டிற்குப் பிறகு தியாகராயர் சபையினின்றும் விலகிவிட்டார் எனக் கொள்ளலாம்.

இரா. சுந்தரலிங்கம் சபையின் தோற்றம், வளர்ச்சி, பணிகள் பற்றி மிக விரிவாக எழுதியுள்ள நூலில் ஓரிடத்தில் கூடத் தியாகராயரின் பெயரைக் குறிப்பிடவில்லை என்பது கூர்ந்து நோக்கத்தக்கது. தமிழக முன்னாள் முதல்வர் திரு. பக்தவத்சலம், "தியாகராயர் மிகவும் தொடக்க காலத்திலேயே சபையிலிருந்து விலகிச் சென்று விட்டார்",[15] என்று கூறும் கூற்றும் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில், 1884-ஆம் ஆண்டு முதல் 1912-ஆம் ஆண்டு வரை சுமார் இருபத்தெட்டாண்டுகள் தியாகராயர் சென்னை மகாசன சபையிலிருந்து தொண்டாற்றியுள்ளமைக்குச் சான்றுகள் உள்ளன.[16] அவ்வாறு பணியாற்றியிருந்தும் தியாகராயர் ஒதுங்கியதற்குப் பிராமணர்களின் மேலாதிக்கம் நாளுக்கு நாள் பெருகியதே காரணம் எனலாம்.

## 2.2 அனைத்திந்தியக் காங்கிரசுப் பேரவை

1885-ஆம் ஆண்டில் அனைத்திந்தியக் காங்கிரசுப் பேரவை தோற்றுவிக்கப் பெற்றது. தொடக்க காலத்தில் காங்கிரசுப் பேரவை இந்தியர்களுக்குக் கூடுதலான உரிமைகளும் வேலை வாய்ப்புக்களும் பெற்றுத் தரப் போராடும் நிறுவனமாகவே இருந்தது; அதுவும் அரசினரின் ஆதரவு பெற்றதாகவே இருந்தது. அக்காலத்தில் காங்கிரசுப் பேரவையும் அரசுக்கு எதிரான போராட்டத்தைத் தொடங்கவில்லை. காங்கிரசுப் பேரவைக் கூட்டம் தொடங்கும்

போது, ஆங்கில மன்னரையும், அரசையும் வாழ்த்திப் பாடிய பின்னர்தான் கூட்டத்தைத் தொடங்குவது வழக்கம். மேலும், அக்காலத்தில் பட்டதாரிகளே அவ்வவையில் பெரும்பாலும் உறுப்பினர்களாக இருந்தனர். அதனால், தியாக ராயர் காங்கிரசுப் பேரவையில் ஈடுபாடு கொண்டவராக இருந்தார். 1887-ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரசின் மூன்றாவது மாநாட்டுப் பிரதிநிதிகளுக்கும் பெரியவர்களுக்கும் ஆளுநர் கன்னிமாரா பிரபு அரசு மாளிகையில் விருந்தளித்தார். தியாகராயரும் இம்மாநாட்டில் கலந்துகொண்டு சிறந்த தொண்டாற்றினர்.[17] இம்மாநட்டில் கலந்துகொண்டதோ டன்றித் தியாகராயர் ரூ.200/- நன்கொடையும் வழங்கியுள்ளார்.[18]

சர். சி. பி. இராமசாமி அய்யர் தியாகராயரின் மறைவைக் குறித்துச் சென்னை சட்டமன்றக் கூட்டத்தில் பேசும்பொழுது, "தியாகராயர் நீண்ட காலம் காங்கிர சில் இருந்து பணியாற்றியவர்"[19] என்று குறிப்பிடுவது கருதத்தக்கது. இவற்றை யெல்லாம் சிந்தித்துப் பார்க்கும் பொழுது கீழ்க்கண்ட முடிவிற்கு வரவியலும்.

தியாகராயர் காங்கிரசு தொடங்கப்பெற்ற காலத்திலிருந்து ஏறக்குறைய முப்பத்திரண்டாண்டுகள் (1885 - 1917) அதன் உறுப்பினராயிருந்து தொண்டாற் றினார் என்றும், காங்கிரசில் பிராமணர்களின் ஆதிக்கம் பெருகத் தலைப்பட்ட தால், அப்பேரவை இனி நாட்டு மக்கள் அனைவருக்கும் பயன்படும் நிறு வனமாக இராது; பிராமணர்க்குப் பயன்படும் பேரவையாகத்தான் இருக் கும் என்பதை உணர்ந்து காங்கிரசை விட்டு வெளியேறினார் என்றும் கொள்ளலாம்.

இந்திய தேசியக் காங்கிரசில் ஈடுபட்டுப் பெருந்தொண்டாற்றிய சான்றோர் களின் வரலாறுகளைக் குறிப்பிடும் நூல்கள் பலவற்றில், அப்பேரவையில் பல்லாண்டுகள் உழைத்த தியாகராயரின் பெயர் கூடச் சுட்டப் பெறாதது வியப் பாகவுள்ளது.[20] தியாகராயர் காங்கிரசிலிருந்து பின்னர் விலகிச் சென்று விட் டார் என்றாலும், தொடக்க காலத்தில் அவர் ஆற்றிய பணிகளைப் பற்றிக் குறிப்பிடாதது தவறு என்பது ஒரு சிலர் கருத்தாகும்.[21] எனவே, தியாகராயரின் பெயரும், அவர் அற்றிய பணிகளும் காங்கிரசு வரலாற்று ஏடுகளிலும், நாட்டு வரலாற்றிலும் இடம் பெறாதது விளங்காத புதிராகவே உள்ளது.

## 2.3. சென்னைத் திரவிடர் சங்கம்

டாக்டர். சி. நடேசனார் திராவிட சமுதாயத்தினரை ஒன்று கூட்டி அவர் களின் நன்மையைக் கவனிக்க, 1912-ஆம் ஆண்டில் 'சென்னைத் திராவிடர் சங்கம்' என்ற சங்கத்தை நிறுவினார். இச்சங்கம்தான் பிராமணர் அல்லாதார் நலனைப் பாதுகாப்பதற்கென்று பிறந்த முதல் திராவிட அமைப்பாகும்.

1914-இல் இதன் புகழ் நாடெங்கும் பரவியது. இதில் திரு.வி.க., டாக்டர். டி.எம். நாயர், தியாகராயர், எல்.டி. சாமிக்கண்ணுப்பிள்ளை ஆகிய பிராமணரல்லாத தலைவர்கள் அடிக்கடி சொற்பொழிவாற்றினர்.[22] இச்சசங்கத்திற்குக் சில ஆண்டுகள் இராமராய நிங்கார் (பனகல் அரசர்), டி.எம். நாயர், கே.வி. ரெட்டி ஆகியோர் துணைத் தலைவர்களாகவும் இருந்து வந்துள்ளமை[23] தெரிகிறது.

இத்திராவிடர் சங்கத்தைத் தோற்றுவித்த நடேசனார், 'திராவிடர் இல்லம்' என்ற ஓர் அமைப்பையும் தொடங்கிப் பெரும்பணியாற்றலானார்; அவர் ஆண்டு தோறும் பட்டம் பெற்ற திராவிட மாணவர்களுக்கு விருந்தளித்துப் புகழுரையும் நல்லுரையும் வழங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். தியாகராயரும் இவ்விருந்தளிப்புக்களில் கலந்துகொண்டு, மாணவர்களின் உள்ளத்தில் சுயமரியாதைப் பற்றுப் பொங்கி எழுமாறு செய்து வந்தார்.[24] இருப்பினும், தியாகராயர் காங்கிரசில் ஈடுபாடு கொண்டவராகவே அவ்வமயம் இருந்தார்.

1917-இல் இத்திராவிடர் சங்கத்தின் பணியும் தொடர்ந்தது. நவம்பர் மாதத்தில் சங்கத்தின் சார்பில் நடைபெற்ற விருந்தளிப்புக் கூட்டத்தில் டாக்டர். கார்டியூ (Dr. Cardew) தலைமை வகித்தார்.[25] அக்கூட்டத்தில் திராவிடர் நலனைக் காக்க இவ்வமைப்பு போதாது என்றும், இதைவிட ஆற்றல் வாய்ந்த அரசியலமைப்பு ஒன்று தேவை என்றும் டாக்டர். நடேசனார் கருத்துத் தெரிவித்தார். இக்கருத்தை டாக்டர். டி.எம். நாயரும், தியாகராயரும் வரவேற்றதன் பயனாகத் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தோன்றியமை அறியத்தக்கது.[26]

## 2.4. தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்

திராவிடர் நலனுக்காக ஒரு தனி அரசியலமைப்புத் தேவையாகும் என்பதை உணர்ந்தார் டாக்டர். நடேசனார். அப்போது காங்கிரசுக் கட்சியில் ஈடுபட்டுத் தேச நலனுக்காக உழைத்து வந்த தியாகராயர், டாக்டர். டி.எம். நாயர் ஆகியோர் காங்கிரசின் பெயரில் தென்னாட்டுப் பிராமணர்களின் ஆதிக்கமும், வடநாட்டினரின் ஆதிக்கமும் ஒன்று சேர்ந்து தென்னிந்தியத் திராவிடர்களுக்கு அநீதியிழைத்து வருவதைக் கண்டு வெகுண்டனர்.

தியாகராயர், நாயர் போன்றவர்கள் காங்கிரசில் பற்றும், நம்பிக்கையும் கொண்டு உண்மையாகப் பாடுபட்டு வந்தாலும், அகில இந்தியக் காங்கிரசானது 'அக்கிரகாரக் காங்கிரசு' என்னும் உண்மையை உணர்ந்தவுடன் அதனின்றும் விலகி விட்டனர். அத்துடன் காங்கிரசின் உண்மை உருவத்தை வெளிப்படுத்தவும் உறுதி கொண்டனர். பிராமணரல்லாதாரின் நலனுக்காகப் போராடத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளத் துணிந்தனர். இவ்விரு

வீரர்களும் திராவிட சமுதாயத்தின் நலனில் அக்கறை கொண்டு ஆங்காங்கே பேசி வந்தனர். இப்படிப்பட்ட நல்லதொரு சமயத்தை எதிர்பார்த்திருந்த டாக்டர். நடேசனார் அதனைப் பயன்படுத்திக்கொள்ள முனைந்து, அவ்விரு வரையும் கொண்டு ஓர் அரசியல் கட்சி உருவாக்க ஓயாது உழைத்தார். அவருடன் தியாகராயரும், நாயரும் சேர்ந்து முயன்று ஓர் அரசியல் கட்சியை நிறுவினர். இக்கட்சிதான் 'ஜஸ்டிஸ் கட்சி' என்று வழங்கப்பட்ட நீதிக்கட்சி யாகும்.[27] இதனை இர்ஷிக் (Irshick) தமது நூலில் விரிவாக விளக்குவதைக் காணலாம்.[28]

தொடக்க காலத்தில் இந் நீதிக்கட்சி 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' என்ற பெயரிலே தொடங்கப் பெற்றது. ஆனால் சங்கத்தின் கொள்கைகளைப் பரப்புவதற்காக 'ஜஸ்டிஸ்' (Justice) என்னும் ஆங்கில இதழ் வெளியிட்ட போது, அதன் பெயரே கட்சிக்கும் நிலைத்து விட்டது.

"காங்கிரசும், பார்ப்பனர்களும் தென்னாட்டவர்க்கும், பார்ப்பனரல்லா தாருக்கும் செய்து வந்த கொடுமையையும் சூழ்ச்சியையும் கண்டு சகியாமல் தியாகராயரும், நாயரும் காங்கிரசை விட்டு வெளிவந்து ஏற்படுத்தியது தான் பார்ப்பனரல்லாதார் இயக்கம்; அதுதான் 'ஜஸ்டிஸ் இயக்கம்'"[29] என்று பெரியார் இக்கட்சி தொடங்கப்பெற்ற சூழ்நிலையையும், அதன் இன்றியமை யாமையையும் சுட்டிக் காட்டினார்.

வேலை வாய்ப்புக்கள் அரசாங்கத்தின் கைவசமாக இருந்து, அவர்களே ஏறக்குறையச் சரிவரப் பங்கிட்டு வழங்கி வந்ததால் அதற்காக யாரும் எதுவும் செய்ய வேண்டிய தேவை ஏற்படவில்லை. ஆனால், காங்கிரசு என்று ஒன்றை ஏற்படுத்தி, அதன் மூலம் பிராமணர்களே எல்லா வாய்ப்புக்களையும் அடைய முற்பட்டதால், பிராமணரல்லாதார் இயக்கம் தோன்ற வேண்டியதாயிற்று.[30] மேலும், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பெற வேண்டுமென்பதே இக்கட்சி யின் முக்கிய நோக்கமாக இருந்தது.[31]

அந்தக்காலத்தில் தியாகராயர், பிராமணரல்லாதார் இயக்கம் தொடங்கு வதற்குத் தகுந்த, மதிக்கத்தக்க காரணங்கள் இருந்தன என்பதை இராஜாஜியின் புதல்வர் சி.ஆர். நரசிம்மன், ஏற்கிறார்.[32] எல்லா வகுப்பினர்களையும், ஆட்சிப் பொறுப்பையேற்று நடத்தத் தகுதி படைத்தவர்களாக்க வேண்டும் என்ற சீரிய நோக்கமே இக்கட்சியைத் தோற்றுவித்ததற்கு அடிப்படைக் காரணமாகும்.[33]

இத்தகு சூழ்நிலையில் 1916-ஆம் ஆண்டு மைலாப்பூரில் கிராமணித் தோப்பு என்னுமிடத்தில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகாசமாசத்தின் ஆண்டு விழாவில் தியாகராயர் தம் கருத்துக்களைக் கூறினார்; பிராமணரல்லாத

சமுதாயத்தினர் பலவகையிலும் ஒடுக்கப்படுவதை எடுத்துக்கூறி, ஓர் இயக்கம் தேவை என்பதை விளக்கினார்.[34] அக்கூட்டத்திற்குத் தாமும் சென்றதாகவும், தியாகராயரின் கருத்துக்களை மறுக்க எண்ணி மேடையருகில் சென்றதாகவும், பொறுமை பூத்ததால் பேசாமல் திரும்பியதாகவும் திரு. வி.க.வும் இதனை வழி மொழிகிறார்.[35]

தியாகராயரின் கருத்திற்கேற்பத் 'தென்னிந்திய மக்கள் சங்கம்' என்ற பெயரில் சங்கம் தொடங்கப் பெற்று அதற்கெனச் சொந்தக் கட்டடம் ஒன்றும் வாங்கப் பெற்றது[36] (தற்பொழுது பிளாசா தியேட்டர் இருக்குமிடம்). இதனைத் தொடர்ந்து 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்' என்ற பெயரில் அரசியல் கட்சி ஒன்றும் தொடங்கப் பெற்றது. பிராமணர் அல்லாதார் ஒன்றுபட்ட முதல் நிகழ்ச்சியாக இது அமைந்தது.[37] இக்கட்சியின் தோற்றம் பற்றி இர்ஷிக்கின் நூலும்,[38] மாதமிருமுறை அனுப்பப்பெறும் அரசாங்க அறிக்கையும்,[39] சே. இராசேந்திரனின் ஆய்வேடும்[40] மிக விரிவான செய்திகளைத் தருகின்றன. அரசாங்க அறிக்கையில் தியாகராயரின் சமுதாயத் தொண்டின் சிறப்பும் விளக்கப் பெற்றுள்ளது.[41]

இச்சங்கம் தொடங்கப் பெற்றதைக் குறித்து மாறுபட்ட கருத்துக்களும் நிலவின. டபிள்யூ. எஸ். கிருஷ்ணசாமி நாயுடு, இச்சங்கம் தொடங்கப் பெற்றதைக் குறித்து வருத்தம் தெரிவித்து, முன்னணியிலிருந்த நாளிதழ்களின் ஆசிரியர்களுக்குக் கடிதம் எழுதியதாகக் குறிப்பிடுகிறார்.[42] கலைஞர் கருணாநிதி, தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் தோற்றம் பற்றி,

"1916-இல் தியாகராயர் போன்றோர் திராவிடர் நலங் காத்திட முனைந்தனர். மத்திய அரசின் அதிகாரத்திலிருந்து விடுபட எண்ணிய திராவிட மக்கள் 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்' என்னும் அரசியல் கட்சியினைத் தோற்றுவித்தனர். இக்கட்சியே பின்பு 'ஜஸ்டிஸ் கட்சி' என்றாயிற்று"[43] எனக் கூறியுள்ளார்.

மேற்காட்டிய கருத்துக்களால் பிராமணரல்லாதாருக்காகவும், அவர்களது நலனுக்காகவும் உருவாக்கப் பெற்றதே தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் என்பது புலனாகிறது. இச்சங்கத்தின் கொள்கைகளும் கடமைகளும் நன்கு வரையறுக்கப்பெற்றன. பிராமணரல்லாத வகுப்பினர் பலரும் அடங்கிய தென்னிந்தியப் பெருஞ் சமுதாயத்தைக் கல்வி, சமூக, பொருளாதாரத் துறைகளில் முன்னேறச் செய்வதே சங்கத்தின் கொள்கையும், கடமையும் ஆகும். சொற்பொழிவுகள், நாளேடுகள் முதலியவற்றின் மூலம் பிராமணரல்லாத மக்கள் இடையே அரசியல், சமூக, பொருளாதார விழிப்புணர்ச்சியை ஊட்டுவது இதன் செயல் முறையாகும். வன்முறைகளாலும், கிளர்ச்சிகளாலும் விரைவில்

அரசியல் மாற்றம் ஏற்படுத்த முயல்வதை இச்சங்கம் கண்டித்தது. இந்திய சுயாட்சி பெறுவதைப் பற்றிய இச்சங்கத்தின் கருத்து வருமாறு:

"இந்தியத் துணைக் கண்டம் தன்னாட்சி அடைவதற்கான காலம் இன்னும் வரவில்லை. உற்றகாலம் வரும் வரைத் தன்னாட்சி அடைவதற்கான வழியில் நம்மை நாம் ஆயத்தப் படுத்திக் கொள்ள வேண்டும். பிராமணரல்லாத மக்களுக்குப் போதிய உரிமை இல்லாத வரையில் தன்னாட்சி அடைய மேற் கொள்ளப்படும் எவ்விதக் குறுக்கு வழியும் இச்சங்கத்திற்கு உடன்பாடான தல்ல"[44] இத்தகு சீரிய கொள்கையைக் கொண்டிருந்ததால் தியாகராயர் இச் சங்கத்தின் பொதுச் செயலாளர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

பிரெஞ்சு நாட்டு மக்கள் அரசியல் உரிமை பெறுவதற்காக 'முற்போக்குக் குடியரசு கட்சியைத்' (Radical Republican Party) தோற்றுவித்தனர். பிரபுக் களின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதே அவர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது. அதேபோன்று பிராமணரல்லாத மக்கள் பிராமணர்களின் ஆதிக் கத்திலிருந்து விடுபட வேண்டுமென்ற நோக்கத்தோடு இச்சங்கம் தொடங்கப் பெற்றது. எனவே, பிரெஞ்சு நாட்டு முற்போக்குக் குடியரசுக் கட்சியைப் (Radical Republican party) பின்பற்றியே இச்சங்கத்திற்கும் 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்' (South Indian Liberal Federation) என்று பெயரிடப் பெற்றது.[45] பிரெஞ்சு நாட்டு வேங்கை என்று புகழப்பட்ட டாக்டர். கிளிமென் சோவிடம் (Dr. Clemenceou) பயிற்சி பெற்ற காரணத்தால் டாக்டர். டி.எம். நாயர், பிரெஞ்சுக் கட்சியின் கொள்கைகளைப் பின்பற்றித் தாமும் தியாகராய ருடன் சேர்ந்து இக்கட்சியின் சட்டதிட்டங்களைச் சீரிய முறையில் வகுத்தளித் தார்.[46] எனவே, மிகச் சிறந்த சட்ட திட்டங்களுடனும் சீரிய கொள்கைகளுட னும் இக்கட்சி செயல்படத் தொடங்கியது எனலாம். (கட்சியின் சட்டதிட்டங் கள் பின்னிணைப்பில்)

## 2.5. சங்கமும் இதழ்களும்

பிராமணரல்லாதார் இயக்கமாக இச்சங்கம் செயல்பட்டதால் 'இந்து' நாளி தழ் இதனைக் கண்டித்துச் செய்தியை வெளியிட்டதுடன், இவ்வியக்கத்திற்கு எத்தகைய முக்கியத்துவமும் கொடுக்க விரும்பவில்லை என்று தனது நிலை யைத் தெளிவு படுத்தியது.[47]

பிராமணரல்லாதார் இயக்கம் ஏற்பட்டது நல்லதுதான் என்றும், பிராமண ரல்லாதாரின் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டுமென்றும், செயல்படும் முறையைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும் என்றும் 'சுதேசமித்திரன்' கருத்து வெளியிட்டது.[48]

தியாகராயர் 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்'தின் சார்பில் ஒரு கொள்கை அறிக்கையை வெளியிட்டார். தென்னக மக்களில் பெரும்பான்மையினர் பிராமணரல்லாதாராக இருந்தும், சிறுபான்மையினரான பிராமணர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடப்பதைச் சுட்டிக்காட்டி, விழித்தெழுமாறு கூறினார். அரசாங்க அலுவல்களில் பிராமணரல்லாதாருக்கு வேலைவாய்ப்பு மிகக் குறைவாக உள்ளது என்பதைப் புள்ளி விவரங்களுடன் (காண்க: பின்னிணைப்பு) எடுத்துக் காட்டினார். ஆளுநரின் ஆட்சிக் குழுவில் பிராமணரல்லாதார் இடம் பெற இயலாத நிலையுள்ளதைச் சுட்டிக் காட்டினார். எனவே, பிராமணரல்லாதார் கல்வி கற்று முன்னேற வேண்டுமென்று வற்புறுத்தினார்.[49] இவரது இக்கொள்கை அறிவிப்பின் மூலம் பிராமணரல்லாதாரிடையே ஓர் எழுச்சி உண்டாயிற்று. தன்னுரிமையுடன், பிராமணரல்லாதார் ஒன்றுபடுவதற்காகவே இவ்வியக்கம் தோற்றுவிக்கப்பெற்றது என்பதையும் எடுத்துக் கூறினார். மக்களிடத்தில் படிப்படியாக ஆட்சியை ஒப்படைக்க வேண்டும் என்பதை முடிவு செய்து, தாராளமாக உரிமைகளைக் கொடுத்து, ஆட்சி நடத்த மக்களைத் தகுதியுடையவர்களாக்க வேண்டும் என்பதே அவரது கொள்கை அறிவிப்பின் சாரமாகும்.

"சமுதாயத்தில் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்ற வேற்றுமைகள் மறையத் தொடங்கினால் மட்டுமே சுய ஆட்சி பெறுவதற்கான தகுதியை நாம் பெற்று வருகின்றோம் என்று கூறலாம். அரசியல் அமைப்பு எப்படியிருக்க வேண்டுமென்றால் உண்மையான உரிமைகள் விரிவாக இருக்க வேண்டும். ஒவ்வொரு இனத்தினருக்கும், வகுப்பினருக்கும், அவரவர்களுக்கு நாட்டில் உள்ள செல்வாக்கையும், தகுதியையும், எண்ணிக்கையும் மனதில் கொண்டு, அவரவர்களுக்குரிய பொறுப்பைக் கொடுக்க வேண்டும். சுயமரியாதைக்கு இழிவில்லாது, ஆங்கில சாம்ராஜ்ஜியத்திற்கு உட்பட்ட பிற சுதந்திர நாடுகளுக்கு ஒப்பான தகுதியைக் கொடுக்க வேண்டும்;"[50] என்று தமது அரசியற் கொள்கையைக் கூறித்தாம் விரும்புவது வகுப்புவாத ஆட்சியன்று என்பதைத் தெளிவுபடுத்தினார்.

எனவே, பிராமணரல்லாதார் தம்மைத் தாம் சுய ஆட்சிக்குரியவர்களாக ஆக்கிக் கொள்ளுவதே அவர்களின் முதற்கடமை என்று இவர் கூறுவதை உணரலாம். இறுதியாக, "எங்களுடைய உறுதியான நம்பிக்கை என்னவென்றால், இன்னும் சிறிது காலத்திற்காவது ஒவ்வொரு வகுப்பாரும் தங்களுடைய வளர்ச்சியை முதன்மையாகக் கருதவேண்டும். பிற வகுப்பாருடன் சேர்ந்து பணியாற்றும் பொழுது, தாம் தாழ்ந்தவர் என்று கருதாது, சுயமரியாதையுடன் சமஉரிமை பெற்றவர் என்று எண்ண வேண்டும். சுயமரியாதையுடன், சமநிலையிலிருந்து மற்றவர்களுடன் பணியாற்றுவதையே ஒவ்வொருவரும்

குறிக்கோளாகக் கொள்ளவேண்டும்"[51] என்று குறிப்பிட்டார். (இக்கொள்கை அறிக்கையின் முழுப் படிவம் பின்னிணைப்பில் கொடுக்கப் பெற்றுள்ளது). இக்கொள்கை அறிக்கை 'பிராமணரல்லாதாரின் உரிமைச் சாசனம்' (Non-Brahmin Manifesto) என்று வழங்கப் பெற்றது.

இவ்வறிக்கை பிராமணரல்லாத சமூகத்தினரிடையே ஒரு விழிப்பு உணர்ச்சியை உண்டாக்கிற்று. அதே சமயத்தில் பிராமணர்களிடையே ஓர் அச்சவுணர்வைத் தூண்டிவிட்டது எனலாம். அக்காலத்தில் புகழ் படைத்திருந்த நாளிதழ்களும், வார இதழ்களும் தங்கள் தங்கள் மனம் போன போக்கில் இவ்வறிக்கையைக் குறித்து எழுதத் தொடங்கின. இவ்வியக்கம் நாட்டிற்குப் பயன்படாது என்று 'இந்து நேசன்'[52] கூறியது. "தியாகராயர் சாதி வேறுபாட்டைத் தோற்றுவிக்கிறார். இவ்வாறு வேறுபாடு தோற்றுவிப்பவர் தமக்கு எதிரிகளேயாவர்"[53] என்கிறது 'சம்பத் அப்யுதயா'. மற்றும் 'யோகச்சேமம்' என்னும் இதழ், "பிராமணர், பிராமணரல்லாதாரிடையே ஏற்படுத்தியுள்ள இக்கிளர்ச்சியைப் பார்க்கும் பொழுது, சுய ஆட்சிக்கும், இந்த வகுப்புவாதப் பூசலுக்கும் இடையே ஒரு சமன்பாட்டை ஏற்படுத்தக்கூடிய ஒரு தலைவராவது சென்னையில் இருக்கிறாரா என்பது ஐயத்திற்குரியதாக உள்ளது"[54] என்று சாடியது. திரு. பாலிகா (Baliga)வும் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தொடங்கப் பெற்றதையும் அதனால் நாட்டில் ஏற்பட்ட கொந்தளிப்பையும் தமது நூலில் விரிவாக விளக்கினார்.[55]

ஆனால், இத்தகைய பல எதிர்ப்புக்களையும் பொருட்படுத்தாது, தாம் கொண்ட கொள்கையில் உறுதியாக நின்றார் தியாகராயர். தமது இயக்கத்தின் கொள்கைகளையும், நாட்டு நடப்புக்களையும் மக்களுக்குத் தெளிவாக உணர்த்தும் பொருட்டுத் தாமே நாளிதழ்களும் வெளியிடத் தீர்மானித்தார்.

## 2.6. நாளிதழ்கள்

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் கொள்கைகளை மக்களிடையே பரப்புவதற்குச் சிறந்த சாதனங்கள் நாளிதழ்களே என்று கருதினார் தியாகராயர். நாட்டின் மூலை முடுக்குகளிலுள்ள பாமர மக்களுக்கும் செய்திகள் சென்று சேரவேண்டும் என்று நோக்கத்துடன் தமிழில் 'திராவிடன்', ஆங்கிலத்தில் 'ஜஸ்டிஸ்' (Justice), தெலுங்கில் 'ஆந்திரபிரகாசிகா' என்ற இதழ்கள் தொடங்கப்பெற்றன. இவற்றைத் தென்னிந்திய மக்கள் சங்கமே வெளியிட்டது. தியாகராயர் இச்சங்கத்தின் தலைவராக இருந்தமை குறிப்பிடத்தக்கது.

### 2.6.1. 'ஜஸ்டிஸ்' இதழ்

இவ்விதழின் ஆசிரியர் பொறுப்பை டாக்டர். டி.எம். நாயரும், அவருக்குப் பின்னர் தியாகராயரும், தியாகராயருக்குப் பின்னர் ஏ. இராமசாமி முதலி

யாரும் ஏற்றுத் திறம்பட நடத்தினர். அக்காலத்தில் 'ஜஸ்டிஸ்' இதழின் நேர்மையான தலையங்கங்களைக் கண்டு யாவரும் வியந்தனர்.[56] இவ்விதழின் செல்வாக்கைப் பற்றித் திரு.வி.க.வும் தமது நூலில் குறிப்பிட்டு, அதனால் ஏற்பட்ட காங்கிரசின் வீழ்ச்சி பற்றிய தமது வருத்தத்தையும் வெளியிட்டுள்ளார்.[57] ஆனால், ஜஸ்டிஸ் கட்சியின் செல்வாக்கைக் குறைப்பதற்கான முயற்சிகளில் பிராமணர்களில் ஒரு சிலர் ஈடுபடலாயினர். பிராமணரல்லாதார் சிலரைத் தூண்டிவிட்டு அவர்களைக் கொண்டே எதிர்க்கவும் செய்தனர்.[58] ஆனால், 'ஜஸ்டிஸ்' இதழ் இவற்றிற்கெல்லாம் தயங்காது, தன் கருத்துக்களை உறுதியாகத் தெரிவித்துப் பிராமணரல்லாத மக்களுக்கு விழிப்புணர்ச்சியூட்டும் தனது செயலைத் தொடர்ந்து செய்து வந்தது.

அன்னிபெசன்ட்டும் மற்றும் இருவரும் கைதானதைக் குறித்துக் காங்கிரசு பம்பாயில் கூறிய கருத்துக்களை விமர்சித்து 'ஜஸ்டிஸ்' கீழ்க்காணும் முறையில் தனது கருத்தை வெளியிட்டது. "இந்தியா முழுவதும் பலர் கைதானார்கள். ஆனால் காங்கிரசு இவர்களைப் பற்றி மட்டும் அக்கறை கொள்ளுகிறது."[59] மேலும் இவ்விதத்தில் தியாகராயர், "மேன்மை தங்கிய அரசு, இந்திய சீர்திருத்தம் பற்றிப் பேச விழைவதாகத் தெரிகிறது. கூக்குரலிடும் கிளர்ச்சியாளர்களின் கருத்துத்தான் முழு இந்தியாவின் கருத்து என்று கொள்ளாமல், அனைத்து மக்கள் பிரதிநிதிகளையும் இந்தியச் செயலாளர் சந்தித்துக் கருத்துக்களை அறிய வேண்டும்",[60] என்று அச்சமின்றித் தமது கருத்தை எடுத்து இயம்பியதை அறியலாம்.

## 2.6.2. 'திராவிடன்' இதழ்

இந்திய சீர்திருத்தத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்கு இடமளிக்க வேண்டும் என்னும் கோரிக்கையைத் 'திராவிடன்' தெளிவாக வலியுறுத்தியது. ஆங்காங்கு நடைபெறும் நாட்டு நடப்புகளை எடுத்துக் கூறிப் பாமர மக்களும் செய்திகளை அறியச் செய்தது. எண்ணிக்கையில் குறைந்த அளவினராகவே உள்ள பிராமணர்கள் அரசியல், சமூகம், பொருளாதாரம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் ஆதிக்கம் செலுத்தும் நிலையைப் புள்ளி விவரங்களுடன் அவ்வப்பொழுது வெளியிட்டுப் பிராமணரல்லாதாரிடையே விழிப்புணர்வைத் தூண்டியது.[61] தியாகராயர், 'திராவிடன்' இதழ் வாயிலாகப் பிராமணரல்லாதார் ஒன்றுபட வேண்டியதன் இன்றியமையாமையையும், கல்வி பெறவேண்டியதன் தேவையையும், எத்தகைய கல்வி பெறவேண்டும் என்பதையும் திரும்பத் திரும்ப எடுத்துக் கூறிப் பிராமணரல்லாத தமிழர்களிடையே ஓர் எழுச்சியை உண்டாக்கிக் கொண்டேயிருந்தார்.[62] இதன் விளைவாக அரசுத் தரப்பிலும் ஒரு விழிப்புணர்வு தோன்றியது. அரசு அலுவலகங்களில் பிராமணர்

பிராமணரல்லாதாரிடையே காணப்படும் ஏற்றத்தாழ்வை நீக்க முயலுவதாகவும், பிராமணரல்லாதாருக்குப் போதுமான அளவு பிரதிநிதித்துவம் கிடைப்பதற்கு ஆவண செய்வதாகவும் ஆளுநர் வெல்லிங்கடன் உறுதியளித்ததை உணர முடிகிறது.[63]

பிராமணரல்லாதார் அனைவரையும் ஒரு குறியீட்டுப் பெயராகச் சுட்டு வதுதான் சிறப்பு என்னும் கருத்து வலிமையுடையதாக இருந்தது. எனவே, எல்லா வகுப்பினரையும் ஒருங்கிணைக்கும் முறையில் இவ்விதழுக்குத் 'திரா விடன்' என்று பெயரிடப் பெற்றது. இக்குறியீட்டுப் பெயரே இன உணர்வைத் தூண்ட வல்லதாக இருக்கும் என்று கருதப்பெற்றது.[64]

## 2.6.3. 'ஆந்திரபிரகாசிகா'

அக்காலத்தில் சென்னை மாநிலம் ஆந்திர மாநிலத்தையும் உள்ளடக்கிய தாக இருந்ததால், தம் கருத்துக்கள் அங்கும் எளிதில் பரவ வேண்டும்; ஆந்திர மக்களும் விழிப்புணர்வைப் பெறவேண்டுமென்னும் நோக்கத்துடன் இவ் விதழ் தெலுங்கு மொழியில் வெளியிடப் பெற்றது. இது 'திராவிடனின்' தெலுங்குப் பதிப்பாகவே செயல்பட்டது எனலாம்.

## 2.6.4. பிராமணரல்லாதார் (Non - Brahmin)

பிராமணர் ஆதிக்கத்தால் நலிவுறும் பிராமணரல்லாத மக்களிடையே தன் னம்பிக்கையைத் தோற்றுவிக்கும் நோக்கத்துடன் தியாகராயர் இந்த இதழைத் தொடங்கினார். தாமே ஆசிரியராக இருந்து பணியாற்றினார். பிராமணரல்லா தாரின் ஒற்றுமைக்காக முதற்குரல் கொடுத்த இதழ் இதுவே.[65] 'ஹோம் ரூல்' இயக்கத்தின் உண்மை நிலையைப் பிராமணரல்லாதாருக்கு விளக்கிக் காட்டிப் பிராமணரல்லாதாரின் உண்மைத் தலைவர்கள் யாவர் என்பதையும் இளைஞர்க்கு இனங்காட்டியது இந்த இதழ்.[66] இதன் வாயிலாகத் தமது கருத்துக்களைப் பன்னிப் பன்னிக் கூறிப் பிராமணரல்லாத இளைஞர்களிடையே விழிப்புணர் வையும், தன்னம்பிக்கையையும் ஊட்டினார் தியாகராயர்.[67] இவ்விதழின் சாதனைகளை இர்ஷிக் வியந்து போற்றினமை[68] நினைத்தற்குரியது.

பிராமணர்களின் ஆதிக்கத்தை எதிர்த்து இவ்விதழ் அரசின் அடக்கு முறைகளை எதிர்த்துக் குரல் கொடுக்கவும் தயங்கியதில்லை. பிராமண ரல்லாதார் கூட்டுக் கூட்டத்தில் (Non-Brahmin Confederation) தியாகராயர் முழங்கிய முழக்கத்தை இவ்விதழ் கீழ் உள்ளவாறு வெளியிட்டது.

"நாங்கள் பொறுப்பற்ற வன்முறைக்கோ, மிரட்டல்களுக்கோ இரக்கம் காட்டமாட்டோம். ஆனால், அதேநேரத்தில் அடக்குமுறையையும் பொருட் படுத்த மாட்டோம். பிராமணரல்லாதாராகிய நாங்கள் அரசுக்கும், மக்களுக்கு

மிடையே நல்ல தொடர்பை உண்டாக்கவும், எங்களை அழைத்தால் அரசுக்குக் கை கொடுக்கவும் ஆயத்தமாக உள்ளோம். ஆகவே, அடக்கு முறையைப் பற்றிய ஐயமும், மக்களின் உண்மையான துயரங்களும் நீங்குமாறு செய்ய வேண்டும்."[69]

இவ்வாறு பிராமணரல்லாதார் உள்ளத்தில் எழுச்சியையும், தன்னம்பிக்கையையும் ஊட்டிய 'பிராமணரல்லாதார்' இதழின் செய்திகள் 17.12.1917 வரைதான் காணப்படுகின்றன. 'ஜஸ்டிஸ்', 'திராவிடன்' என்னும் இதழ்கள் தொடங்கப் பெற்றமையால் இவ்விதழ் நிறுத்தப்பட்டிருக்கக் கூடும் என்று கொள்ளலாம்.

## 2.7. பொதுக் கூட்டங்களும், மாநாடுகளும்

தியாகராயர் மாநிலத்தில் பல்வேறு மாவட்டங்கள்தோறும் சென்று பொதுக் கூட்டங்களும், மாநாடுகளும் நடத்திப் பிராமணரல்லாதாரிடையே அரசியல், சமூக, பொருளாதார விழிப்புணர்வை ஏற்படுத்தினார். கோவை, பெசவாடா, மதுரை, சென்னை ஆகிய பெரு நகரங்களில் பிராமணரல்லாதார் மாநாடுகள் நடத்தப் பெற்றன. 1917-ஆம் ஆண்டின் பிற்பகுதி முழுவதும் நீதிக்கட்சி, மாவட்ட மாநாடுகள் நடத்திச் சிறந்து விளங்கியது எனலாம். தியாகராயர் தமது முதுமைப் பருவத்தையும் பொருட்படுத்தாது அம் மாநாடுகளில் பங்கு கொண்டு உரையாற்றினார்.

### 2.7.1. முதல் மாநாடு

இவ்வியக்கத்தின் முதல் மாநாடு கோவை நகரில் 1917-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 19-ஆம் நாள் ஒப்பணக்காரத் தெருவின் நாடக அரங்கில் நடைபெற்றது[70]

### 2.7.2. கோதாவரி மாவட்ட மாநாடு

இம்மாநாடு பிக்காவோல் (Bikkavole) நகரில் 1917-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 27, 28 ஆகிய நாட்களில் நடந்தது.[71]

### 2.7.3. கடப்பை மாவட்ட மாநாடு

கடப்பை மாவட்ட மாநாடு புலிவெந்தலா கிராமத்தில் 1917-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 3, 4 ஆகிய நாட்களில் நடைபெற்றது.[72]

### 2.7.4. பெசவாடா மாநாடு

இம்மாநாடு 1917-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 11, 12 ஆகிய நாட்களில் பெசவாடாவில் நடைபெற்றது. தியாகராயர் இம்மாநாட்டில் தலைமை தாங்கி உரையாற்றினார்.[73]

### 2.7.5. திருநெல்வேலி மாவட்ட மாநாடு

இம்மாநாடு 1917-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 30-ஆம் நாளிலும், டிசம்பர்த் திங்கள் முதல் நாளிலும் திருநெல்வேலியில் நடைபெற்றது.[74]

### 2.7.6. சேலம் மாவட்ட மாநாடு

இம்மாநாடு சேலத்தில் நடைபெற்றது. இம்மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய புதுக்கோட்டை மன்னர், தியாகராயர் தமது முதிர்ந்த வயதிலும் இத்தகைய இயக்கத்தைத் தோற்றுவித்துத் தாமும் தவறாது கலந்து கொண்டு மக்களைத் தட்டியெழுப்புவது குறித்துத் தமது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொண்டார்.[75]

மேற்குறித்த மாநாடுகளில் தியாகராயர் கலந்துகொண்டு பிராமணரல்லாத மக்கள் அரசியல், சமூக, பொருளாதாரத்தில் எவ்வாறு தாழ்ந்துள்ளனர் என்பதை எடுத்துக் கூறினார். (காண்க: பின்னிணைப்பு) பிராமணரல்லாதார், கல்வி கற்று அரசு அலுவல்களிலும் ஆட்சியிலும் பங்கு பெறும் தகுதியைப் பெறவேண்டும் என்றும் வற்புறுத்தினார். பிராமணரல்லாதார் தங்களுக்குள் ஏற்படும் வழக்குகளைத் தாங்களே கிராமப் பஞ்சாயத்து முறையில் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், பிராமண வழக்கறிஞர்களை நாடிச் சென்று தங்கள் பொருளையும் காலத்தையும் வீணாக்கக் கூடாதென்றும் அறிவுறுத்தினார். வாணிகத்திலும், வேளாண்மையிலும் நன்கு கவனம் செலுத்திப் புதுப் புது முறைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்றும் வலியுறுத்தினார்.[76] இளைஞர்களின் உளங்கொள்ளும் வகையில் இக்கருத்துக்களையே தாம் கலந்து கொண்ட கூட்டங்களில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி, பிராமணரல்லாதார் இடையே விழிப்புணர்வூட்டினார்.

### 2.7.7. நீதிக்கட்சியின் முதல் மாநில மாநாடு

மேற்கண்டவாறு மாவட்டந்தோறும் கூட்டங்கள் கூட்டிப் பிராமணர் அல்லாதாரிடையே விழிப்புணர்வையூட்டிய தியாகராயர் 1917-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 28, 29 ஆகிய நாட்களில் சென்னையில் நீதிக் கட்சியின் முதல் மாநில மாநாட்டைக் கூட்டினார். வரவேற்புக்குழுத் தலைவர் என்ற முறையில் தமது வரவேற்புரையில் திராவிடர்களின் பெருமையை எடுத்துக்கூறி, பிறப்பில் ஏற்றத் தாழ்வு காட்டும் கொடுமை நீக்கப்பட வேண்டும் என்று பேசினார்.[77] தியாகராயரின் இப்பேச்சு அக்காலத்து நாளிதழ்கள் பலவற்றிலும் வெளியாயிற்று.[78]

தியாகராயர் குறிப்பாக இம்மாநாட்டில் 'ஹோம்ரூல்' இயக்கத்தினரின் போக்கைக் கண்டித்தார். அதே நேரத்தில் பிராமணர்களைத் தாம் வெறுக்கவில்லையென்பதையும், அவர்களின் ஆதிக்கப் போக்கையே தாம் வெறுப்ப

தாகவும் தமது நிலையைத் தெளிவுபடுத்தினார்.[79] இந்நிகழ்ச்சி பற்றிய செய்தி களை, ஹார்டுகிரேவ்,[80] (Hardgrave) டி. வரதராஜுலு நாயுடு[81] ஆகியோர் தம் நூல்களில் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளனர். அரசாங்க அறிக்கையிலும்[82] இந்நிகழ்ச்சி சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 2.7.8. மதுரை மாவட்ட மாநாடு

1918-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 13-ஆம் நாள் மதுரையில் இம் மாநாடு நடைபெற்றது. இம்மாநாட்டிலும் தியாகராயர் கலந்து கொண்டார். பிராமணரல்லாதாரின் உரிமைகளை நிலைநாட்டும் வகையிலும், அரசாங்க அலுவல்களில் உரிய பங்கைப் பெறும் வகையிலும் பல தீர்மானங்கள் நிறை வேற்றப் பெற்று அரசுக்கு அனுப்பப் பெற்றன.[83]

## 2.7.9. நீதிக்கட்சியின் சிறப்பு மாநாடு

'மாண்டேகு - செம்ஸ் போர்டு' சீர்திருத்த அறிக்கையைப் பற்றிக் கலந் துரையாடித் தங்கள் எண்ணத்தைத் தெரிவிப்பதற்காக இம்மாநாடு 1918-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 21-ஆம் நாள் சென்னையில் நடைபெற்றது. தியாகராயர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கி உரையாற்றினார். அவர் தமது உரையில் பெரும்பான்மை மக்களாகிய பிராமணரல்லாதார், அரசுக்குச் செய் துள்ள உதவிகளைக் குறிப்பிட்டு, அரசு நன்றியற்ற முறையில் நடந்து கொள் ளுவதாகவும், ஆட்சியில் பிராமணரல்லாதாருக்கு உரிய பங்கு கிடைக்க வேண்டுமென்றால் அதற்கு வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் ஒன்றே வழி என்றும் அச்சமின்றி எடுத்துரைத்தார்.[84]

இம்முழக்கம் தியாகராயரது நேர்மையையும் அஞ்சாத நெஞ்சத் துணிவை யும் காட்டுவதோடு அவர் ஆங்கிலேயரின் கூலி ஆள் அல்லர் என்பதையும் குற்றங்குறை கண்டவிடத்து ஆங்கிலேயரேயாயினும் அவர் தம் குற்றத்தை யும் எடுத்துக் கூறும் ஆற்றல் மிக்கவர் என்பதையும் நன்கு உணர்த்துகிறது.

## 2.7.10. அரசப்பிரதிநிதிக்கும், இந்திய அமைச்சருக்கும் எழுதிய கடிதம்

மாநாடுகள் நடத்தி, மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஊட்டியதுடன் அமையாது இந்திய அமைச்சருக்கும் அரசப்பிரதிநிதிக்கும் 1918-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 14-ஆம் நாள் கடிதமொன்றை இவர் அனுப் பினார். இக்கடிதத்தில், தியாகராயர், "மாண்டேகு - செம்ஸ்போர்டு சீர்திருத்த அறிக்கையினால் தென்னிந்தியப் பிராமணரல்லாதார் மகிழ்வதற்கு ஒன்று மில்லை. மாறாக, அது அவர்களுக்குச் சவக்குழியேயாகும். இந்திய மக்கள் அனைவரும் சமமாக நடத்தப்பட வேண்டும். அதற்குச் சமவுரிமை வாய்ந்த

பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும். எனவே, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும்"[85] என்று குறிப்பிட்டிருந்தார். இக்கடிதத்தின் கருத்துக் கள் இராசாராம் ஆய்வேட்டிலும்[86] 'ஜஸ்டிஸ்' நாளிதழிலும்[87] டி. வரதராஜுலுவின் 'நீதி இயக்கம்'[88] என்னும் நூலிலும் முழுமையாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

இங்ஙனம், தியாகராயர் தென்னிந்தியப் பிராமணரல்லாதார் கருத்துக் களைத் தெளிவாக விளக்கியெழுதியது, பிராமணர்களிடையே ஓர் உள்ளக் கொதிப்பை உண்டாக்கியது எனலாம். பிராமணர்கள், பிராமணரல்லாத தேசிய வாதிகள் சிலரைத் தம் வயமாக்கிக் கொண்டு, தியாகராயரையும் அவரது இயக்கத்தையும் எதிர்க்கத் தூண்டினர். கேசவப் பிள்ளையின் தலைமையில் 'சென்னை மாகாணச் சங்கம்' என்னும் ஒரு சங்கத்தைச் நிறுவச் செய்து நிதிக் கட்சியின் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போட ஆவன செய்தார். அந்நாளை நாளிதழ்கள், தியாகராயர் பிராமணரல்லாதாரின் பிரதிநிதி அல்லர் என்றும், அவர் கூறியுள்ள கருத்துக்கள் தங்களுக்கு உடன்பாடற்றவை என்றும் எழுதிய துடன் அவரையும், அவரது இயக்கத்தையும் வெகுவாகத் தூற்றத் தலைப் பட்டன.[89] தியாகராயர் நடத்திய 'ஆந்திரபிரகாசிகா' இக்கண்டனத்திற்குத் தக்க மறுப்பு வெளியிட்டுத் தியாகராயரின் நிலையை ஆந்திர மக்கள் நன் குணரச் செய்தது.[90]

## 2.8. சென்னை மாகாணச் சங்கம்

தியாகராயரின் கொள்கையை எதிர்ப்பதற்கென்றே இச்சங்கம் தொடங்கப் பெற்றதாகத் தெரிகிறது. கேசவப்பிள்ளை இதன் தலைவராக இருந்தார். காங் கிரசைச் சார்ந்த பிராமணரல்லாதார் இச்சங்கத்தின் உறுப்பினர்களாக இருந் தனர். 22.12.1917 அன்று தொடங்கப் பெற்ற இச்சங்கம்[91] பிராமணரல்லாதார் இயக்கத்திற்கு அதாவது நீதிக்கட்சிக்கு எதிராக மாவட்டங்கள்தோறும் மாநாடு கள் கூட்டியது. தியாகராயர், டாக்டர். நாயர் முதலியோரால் உண்டாக்கப் பெற்ற கொள்கைகள் எள்ளளவும் சரியில்லாததால், அவர்களின் கருத்துக் களை அரசு ஏற்றுக் கொள்ளக்கூடாது என்பதை நிலைநாட்டுவதே இச்சங்கத் தின் தலையாய நோக்கமாக இருந்தது. திரு.வி.க. இச்சங்கத்தின் செயல்பாட்டிற் குப் பெரிதும் உழைத்தார். 'தேசபக்தன்' என்னும் இதழை நடத்தி, நீதிக்கட்சிக் கெதிரான கருத்துக்களை வெளியிட்டார். இதனால் 'திராவிடனுக்கும்', 'தேச பக்தனுக்கும்' கடுமையான சொற்போர்கள் நிகழ்ந்தன.[92] 'சுதேசமித்திரன்' இச் சங்கத்திற்கு ஆதரவாகக் கருத்துக்களை வெளியிட்டது.[93] இருப்பினும், இச்சங் கம் ஓரிரு ஆண்டுகளே செயல்பட்டு, 1919-ஆம் ஆண்டில் மறைந்தது.[94] இக்கால கட்டத்தில் 'ஒக்கிலிகாரபத்திரிகா',[95] 'ஆந்திரபத்திரிகா',[96] 'கிருஷ்ண பத்திரிகா',[97] 'தேசமாதா',[98] 'சம்பத் அப்யுதயா'[99] 'இந்து நேசன்',[100] 'உலோகோப

காரி',[101] 'நல்லஆயம்'[102] ஆகிய பல நாளிதழ்களும் திய..ராயருக்கு எதிராகத் தம் கருத்துக்களை வெளியிட்டுத் எதிர்த்தன. தியாகராயர் இவற்றிற்கெல்லாம் தமது 'திராவிடன்' இதழ்[103] மூலமும், 'பிராமணரல்லாதார்'[104] இதழ் மூலமும் ஏற்றவாறு மறுப்புக்களை வெளியிட்டார். மேலும், இத்தகைய எதிர்ப்புகளுக் கெல்லாம் அஞ்சாதவராகத் தமது குறிக்கோளாகிய வகுப்புவாரிப் பிரதிநிதித் துவத்துடன் கூடிய சீர்திருத்தத்தைப் பெறுவதிலேயே கண்ணுக்கருத்துமாய் இருந்து செயலாற்றினார்.

## 2.9. நீதிக்கட்சியின் இரண்டாவது மாநில மாநாடு

1919-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 11, 12 ஆகிய நாட்களில் சென்னை நீதிக்கட்சி அலுவலகத்தில் இம்மாநாடு நடைபெற்றது. டாக்டர். நாயர் இங்கிலாந்தில் ஆற்றிய பணி பாராட்டப் பெற்று, மீண்டும் ஒருமுறை டாக்டர். நாயரின் தலைமையில் ஒரு குழுவை இங்கிலாந்திற்கு அனுப்பிப் பிராமணர் அல்லாதாரின் கோரிக்கைகளை ஆங்கிலேயர்க்கும், பாராளுமன்றத்திற்கும் எடுத்துரைப்பது என்று இம்மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது.[105] இம்மாநாடு தியாகராயரின் விடாமுயற்சிக்குச் சான்றாக அமைந்தது எனலாம்.

## 2.10. மாண்டேகு – செம்ஸ்போர்டு சீர்திருத்த அறிக்கை

இந்திய அமைச்சர் மாண்டேகுவும், செம்ஸ்போர்டும், 1917-ஆம் ஆண்டுத் டிசம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் சென்னை வந்து சேர்ந்தனர். பல்வேறு சங்கங்களும் அவர்களுக்கு வரவேற்பளித்தன. தியாகராயரும் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் சார்பில் வரவேற்பளித்துக் கோரிக்கையும் அளித்தார். அதில் பிராமணரல்லாதாருக்குத் தனி வாக்குரிமையுடன் கூடிய அரசியல் சீர் திருத்தம் தரப்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார். எனவே, யார் யாருக்கு எந்த அளவு வாக்குரிமை வழங்கலாம் என்பதைத் தீர்மானிக்க 'சௌத்பாரோ குழு' (South Borrow Committee) அமைக்கப் பெற்றது. ஆனால், அதில் பிராமணர்களே இடம் பெற்றிருந்தமையால் தியாகராயர் அக்குழுவைப் புறக் கணித்தார். தமது மறுப்பை அரசுக்குக் கடிதமூலம் அனுப்பி வைத்தார்.[106] இந் நிகழ்ச்சி அவரது அஞ்சாமைக்குச் சான்றாக அமைவதோடு, ஆங்கிலேய ருக்கு 'வால் பிடிப்பவர்' என்று தூற்றுபவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சரியான மறுப்புமாகும்.

சென்னை அரசும் சீர்திருத்தம் தரப்படின் பெரும்பான்மையினரான பிரா மணரால்லதாருக்குப் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் தரப் பட வேண்டுமென்று வலியுறுத்தியது. இவற்றால் மக்களுக்கு மட்டுமன்றிச் சென்னை அரசுக்கும் விழிப்புணர்வு ஏற்பட்டதென்பதை அறியலாம்.

## 2.11. மாண்டேகுவும் பிராமணரல்லதார் கோரிக்கையும்

பிராமணரல்லாதார் தனி வாக்குரிமை பெற வேண்டுமென்பதே அவர்கள் கோரிக்கையாக இருந்தது. ஆனால், மாண்டேகு இதற்குச் செவி சாய்க்க வில்லை. இரட்டை ஆட்சி முறைக்குக் காங்கிரசு, ஹோம்ரூல், இந்திய அரசு, மாநில அரசு ஆகியவர்களிடமிருந்து ஆதரவு பெற விரும்பினாரேயொழி யத் தென்னிந்தியப் பெரும்பான்மை மக்களான பிராமணரல்லாதாரின் கருத் துக்களை ஏற்க முன்வரவில்லை.[107] மாண்டேகு பிராமணர்களுடன் உரையாடி யதற்கும் பிராமணரல்லாதாருடன் உரையாடியதற்குமிடையில் காணப்படும் வேறுபாடு, அவர் ஒரு சார்புடையவராகவே காணப்படுகிறார் என்பதைத் தெளிவாக்கியது. இதற்கு அவரது எழுத்தே சான்றாகும்.[108] மேலும் அரசுக் குறிப்புக்களும் இதனை உறுதிப்படுத்துகின்றன.[109] மாண்டேகு ஒரு சார்புடைய வராகப் புலப்பட்டமையால் தியாகராயர் வெகுண்டதில் வியப்பொன்று மில்லை. ஆகவே, அவர் மேலும் உறுதியாக நின்று வகுப்புவாரிப் பிரதி நிதித் துவத்திற்காகப் போராடத் துவங்கினார்.

## 2.12. வாக்குரிமைக் குழுவின் பரிந்துரைகளும் விளைவுகளும்

1919-ஆம் ஆண்டு மே திங்கள் 16-ஆம் நாள் இக்குழு தனது அறிக் கையை வெளியிட்டது. இவ்வறிக்கையில் பிராமணரல்லாதார் கோரிய தனி வாக்குரிமைக்கும், தொகுதி உரிமைக்கும் தீர்வு காணப் பெறவில்லை. எனவே, இவ்வறிக்கைக்கு மறுப்புத் தெரிவிக்க, நீதிக்கட்சியின் சார்பில், டாக்டர். நாயர் 19.6.1919 அன்று இங்கிலாந்திற்குச் சென்றார். ஆனால், அங்கு அவர் நோய் வாய்ப்பட்டுக் கூட்டுக் குழுவின் முன் (Joint Committee) சாட்சியம் அளிப் பதற்கு முதல் நாளே அமரராகி விட்டார். அதனால், தென்னிந்திய நலவுரிமைச் சங்க உறுப்பினர்கள் தியாகராயரின் தலைமையில் செப்டம்பர் 20-ஆம் நாளன்று, சென்னையில் மறுபடியும் கூடி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை வலியுறுத்தித் தீர்மானம் நிறைவேற்றி அரசுக்கு அனுப்பி வைத்தனர்.[110]

## 2.13. நீதிக்கட்சியின் மூன்றாவது மாநில மாநாடு

மேற்கண்ட முயற்சிகள் அனைத்தும் விழலுக்கிறைத்த நீராகவே, நீதிக் கட்சி தனது மூன்றாது மாநில மாநாட்டைக் கூட்டியது. இம்மாநாடு 1919-ஆம் அண்டு செப்டம்பர்த் திங்கள் 29-ஆம் நாள் சென்னை நீதிக் கட்சி அலுவலகக் கட்டடத்தில் நடைபெற்றது. டாக்டர். நாயரின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்த தியாகராயர், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்துடன் கூடிய சீர்திருத்தமே தாம் விரும்புவதாகவும், அதற்கான அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ள வேண்டுமென்றும் வேண்டுகோள் விடுத்தார். இதனையே தீர்மானமாக நிறை வேற்றி அரசுக்கும் அனுப்பி வைத்தார்.[111]

இதன் விளைவாக அரசு பிராமணரல்லாதாரின் கோரிக்கைகளைப் பற்றி ஆராய மெஸ்ட்டன் (Mr. Meston) தலைமையில் ஒரு குழுவை நியமித்தது. இக்குழுவின் முடிவுகள் பிராமணர், பிராமணரல்லாதார் ஆகிய இரு திறத்தாரும் ஏற்கக் கூடியதாக இருக்குமென்று தனது எதிர்பார்ப்பையும் வெளியிட்டது.[112]

## 2.14. மெஸ்ட்டன் அளித்த பரிசு

மெஸ்ட்டன் குழுவின் முடிவு 18.3.1920 அன்று வெளியிடப் பெற்றது. புதிய அரசியலமைப்பில் அறுபத்தைந்து பொதுத் தொகுதிகளில் இருபத்தெட்டு இடங்களைப் பிராமணரல்லாதாருக்கு ஒதுக்கி விடவேண்டும் என்பதே அம்முடிவாகும். நீதிக்கட்சியினர் இதனை ஏற்றாலும், தமது கோரிக்கைகள் முழுவதும் நிறைவேற்றப் பெறவில்லை என்றே கருதினர். இதன் விளைவாகத் தென்னிந்திய நலவுரிமைச் சங்கமும், சென்னை மாகாணச் சங்கமும் இணைந்து செயல்பட்டுத் தமது ஏமாற்றத்தை அரசுக்கு எடுத்துக் கூறின.[113] இதனை அரசுக் குறிப்புக்களாலும் அறியலாம்.[114]

## 2.15. புதிய அரசியல் சட்டம்

பிராமணரல்லாதருக்கு முழு மனநிறைவு இல்லாவிடினும் மெஸ்ட்டனின் முடிவு ஏற்றுக் கொள்ளப்பட்டது. 1920-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 20-ஆம் நாள் புதிய அரசியல் சட்டம் நிறைவேற்றப் பெற்றது. அதில் மாநிலங்களில் இரட்டை ஆட்சி முறை ஏற்படும்; கல்வி, சுகாதாரம், பொதுப் பணி ஆகியவை மாற்றப்பட்ட துறை (Transferred) என்று வழங்கப் பெறும்; அவற்றிற்குப் பிரதிநிதிகள் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பெறுவர்; காவல் துறை, நிதி, வருவாய் ஆகியன ஆளுநரின் ஆளுகைக்குட்பட்டிருக்கும். இஃது, ஒதுக்கப்பட்ட துறை (Reserved) என்று வழங்கப்பெறும்; தேர்தலில் பெரும்பான்மை பெறும் கட்சிகளின் தலைவரே அமைச்சரவை அமைப்பார் என்னும் தீர்மானங்கள் இடம் பெற்றன. இத்திட்டத்தை நீதிக்கட்சி ஏற்றுக் கொண்டதோடு தேர்தலில் போட்டியிடவும் முடிவு செய்தது.

## 2.16. முதல் பொதுத் தேர்தல்

இரட்டை ஆட்சித் திட்டத்தின்படி சென்னை மாநிலச் சட்டமன்றத்திற்கும் இந்திய நாடாளுமன்றத்திற்கும் 1920-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் தேர்தல் நடைபெற்றது. இதுவே முதல் நேரடித் தேர்தல் ஆகும். இத்தேர்தலுக்குத் தமது கட்சி வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் தியாகராயர் காட்டிய பெருந்தன்மை வியப்பிற்குரியது.[115] 'இந்து' இதழும்[116] அவரது கூற்றினை வெளியிட்டதன் வாயிலாக அவரது பெருந்தன்மையை உணரலாம்.

தியாகராயர் தேர்தல் பிரச்சாரத்திற்காகத் தமது உருவப் படங்களையும், சுவரொட்டிகளையும் வைப்பதைக் கேள்வியுற்று வெகுண்டார்.[117] ஆனால், அதே நேரத்தில் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் பிராமணரல்லாதாரும், பிராமணர்களும் கடுமையாகத் தாக்கிக் கொண்டனர்; சிற்சில இடங்களில் வன்முறைகளும் தலைதூக்கின. சர். சி. பி. இராமசாமி அய்யர் பிரச்சாரக் கூட்டங்களுக்குத் துப்பாக்கியுடன் சென்றதோடு மிகுந்த பொருட் செலவும் செய்தார்.[118] இத்தேர்தலில் நீதிக்கட்சியினரே பெரும்பான்மையினராக வெற்றி பெற்று, மாநிலச் சட்டமன்ற உறுப்பினராயினர். 'இந்து' இதழ் "இவ் வெற்றி நீதிக்கட்சியின் முதல் அரசியல் வெற்றியாகும்"[119] என்று பாராட்டியது. இருப்பினும், அக்காலத்தில் காங்கிரசு பொதுத் தேர்தலில் ஈடுபடாது அதைப் புறக்கணித்ததால்தான் நீதிக்கட்சி வெற்றி பெற்றது என்னும் ஒரு கருத்து இன்றும் நாட்டில் நிலவி வருகிறது. ஆனால், 1920-இல் காங்கிரசு பொது மக்களின் ஆதரவைப் பெருமளவில் பெற்றிருக்கவில்லை என்றும், 1937-இல் தான் பொதுமக்களின் ஆதரவை அது பெற்றது என்றும் பி.டி. இராசன் 1973-இல் விளக்கம் கூறியுள்ளார்.[120]

## 2.17. தியாகராயரும், நீதிக்கட்சியின் முதல் அமைச்சரவையும்

வெற்றி பெற்ற பிராமணரல்லாதார் அனைவருமே நீதிக்கட்சியினராகவே மதிக்கப் பெற்றனர். எனவே, ஆளுநர் வெல்லிங்கடன் பிரபு தியாகராயரையே முதலமைச்சராக இருந்து, அமைச்சரவை அமைக்குமாறு வேண்டினார். தியாக ராயரோ அமைச்சர் பதவி ஏற்க மறுத்து, சுப்பராயலு ரெட்டியாரை முதலமைச் சராகவும், இராமராய நிங்காரைத் (பனகல் அரசர்) தொழில்துறை அமைச்ச ராகவும், கே.வி. ரெட்டி நாயுடுவைக் கல்வி அமைச்சராகவும் நியமித்தார்.[121] தியாகராயரின் இத்தியாகச் செயலை அக்காலத்துச் செய்தித்தாள்கள் பலவும் பாராட்டித் தமது வியப்பையும் வெளியிட்டன.[122] மேலும், இவ்வாய்வாளர் சந்தித்த பெரியோர்கள் சி.ஆர். நரசிம்மன் (இராஜாஜியின் மகன்), மாணிக்க வேல் நாயக்கர் (முன்னால் நீதிக்கட்சி அமைச்சர்), ம. பொ. சிவஞானம் ஆகியோர் பலரும் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுத் தியாகராயரின் தியாகத் தைப் பாராட்டினார். முதலமைச்சர் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு தம் தமை யனார் வற்புறுத்தியதால் தியாகராயர் மூன்று நாட்கள் உண்ணா நோன்பிருந் தார்.[123] இச்செய்தி தியாகராயரின் பதவி விரும்பாத் தொண்டிற்குச் சிறந்த சான்றாவதை உணரலாம்.

கில்பர்ட் சிலேடர் (Gilbert Slader) தமது நூலில், டாக்டர். நாயர் முதலமைச்சர் பதவியை மறுத்தவர் என்று குறிப்பிட்டுள்ளார்.[124] இக்கருத்து ஏற்புடையதன்று. ஏனெனில், தேர்தல் நடைபெறுவதற்கு முன்னரே, அஃதா வது 17.7.1919 அன்றே டாக்டர் நாயர் இங்கிலாந்து நாட்டிலேயே அமரராகி

விட்டார். மறைமலையான் தமது நூலில், இரண்டாவது அமைச்சரவையில் தியாகராயர் முதலமைச்சர் பதவியேற்றதாகக் கூறுகிறார்.[125] அவர் குறிப்பிடும் நாட்களும் தவறாக உள்ளன. எனவே, அவர் கூற்றும் சற்றும் பொருந்துவதாக இல்லை.

பதவியேற்ற ஆறு திங்களில் உடல் நலமின்மையால் சுப்பராயலு ரெட்டியார் விலகியதால், இராமராய நிங்கார் (பனகல் அரசர்) முதலமைச்சரானார். ஏ.பி. பாத்ரோ கல்வியமைச்சராகவும், கே.வி. ரெட்டி நாயுடு தொழிலமைச்சராகவும் நியமனம் பெற்றனர்.

1923-ஆம் ஆண்டு நடைபெற்ற இரண்டாவது தேர்தலிலும் நீதிக்கட்சியே பெரும்பான்மை பெற்றது. இம்முறையும் தியாகராயர் அமைச்சர் பதவியை ஏற்காது இராமராய நிங்காரை (பனகல் அரசர்) முதலமைச்சராகவும், ஏ.பி. பாத்ரோவைக் கல்வியமைச்சராகவும், சிவஞானம் பிள்ளையைத் தொழில் அமைச்சராகவும் பதவியேற்க ஏற்பாடு செய்தார். இதனால் அமைச்சரவையில் தமிழர் ஒருவர் கூட இடம் பெறவில்லை என்ற குறை நீங்கிற்று.[126] ஆனால், கே.வி. ரெட்டி நாயுடுவுக்கு அமைச்சர் பதவி கொடுக்கப்படாததால் தெலுங்கர்களுக்கிடையே மனக்கசப்பு உண்டாயிற்று. எனவே, 1923-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 27-ஆம் நாள் அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பெற்றது. இத்தீர்மானம் நீண்ட கருத்துப் பரிமாற்றங்களுக்குப் பின்னர்த் தோல்வியுற்றது. 1925-ஆம் ஆண்டு தியாகராயரின் மறைவுக்குப் பின் கட்சியில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இருப்பினும் 1936-ஆம் அண்டு வரை நீதிக்கட்சியே ஆட்சியில் இருந்தது.

## 2.18. சட்டமன்றத்தில் தியாகராயர்

சட்டமன்றத்தில் தியாகராயர் ஆளுங்கட்சித் தலைவராக இருந்தார். தியாகராயர் அமைச்சராக இல்லாவிடினும், மக்களுக்குப் பயன்படக்கூடிய பெரும்பாலான சட்டங்களை நிறைவேற்றுவதற்கு அவரே பொறுப்பாளராக விளங்கினார்.[127] ஆளுங்கட்சித் தலைவராக இருந்தாலும், தமக்குச் சரியென்று தோன்றாத கருத்துக்களை மறுத்துக் கூறுவதற்கு அவர் என்றும் தயங்கியதில்லை என்பதை அவர்தம் சட்டமன்றப் பேச்சுக்கள் தெளிவாக்குகின்றன.[128] அரசியல் கைதிகளைச் சாதாரணக் கைதிகளைப் போல் நடத்தாமல் தனிப்பட்ட முறையில் நடத்த வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவரப்பட்ட பொழுது தியாகராயர் அதனை வன்மையாக எதிர்த்து உரையாற்றித் தமது கருத்தை உறுதியாகச் சொன்னார்.[129] இவ்வுரை அவர் மக்கள்பால் கொண்ட மனித நேயத்திற்கும், அமைதி முறையில் கொண்ட ஈடுபாட்டிற்கும், வன்முறையின்பால் கொண்ட தீவிர எதிர்ப்பிற்கும் சிறந்த சான்றாக அமைந்துள்ளது.

இதே போன்று சென்னை நில அளவு நகல் குறிப்பு (மசோதா)[130] கிராமப் புற ஊழியர்களுக்கும் அரசுத் துறைப் பணியாளருக்கும் ஊதியங்களை, மாற்றி யமைக்கும் நகல்குறிப்பு (மசோதா),[131] கஞ்சம் மாவட்ட வறட்சி நிவாரணப் பணி நகல் குறிப்பு (மசோதா)[132] ஆகியவற்றிற்குத் தமது ஆதரவை அளித்து அவை வெற்றிபெறச் செய்தார். கேரளப் பகுதியில் யாகூப் ஹாசன் கைது செய்யப்பட்ட போது நடந்த கருத்துப் பரிமாறலில், தாம் உறுதியாக நின்று, அவர் கைது செய்யப்பட்டது சரியே என்று நிலை நாட்டினார்.[133] சர்வென்ட் ஆஃப் இண்டியாவும், (Servant of India) இதனை வெளியிட்டதோடு தனது கருத்தையும் கூறியுள்ளது.[134] தியாகராயரின் இவ்வுரையைக் கேட்ட கோவிந்த ராகவ அய்யர், "தியாகராயரின் உரையைக் கேட்டதும் உடன்பாட்டோடு கூடிய வியப்பு எனக்கு ஏற்பட்டது. அவர் நம்மை எச்சரிப்பது மட்டுமல்ல; நம்மை நல்வழிப்படுத்தவும் செய்கிறார்",[135] என்று கூறினாரென்றால் தியாக ராயரின் மக்கள் நலப்பற்று எத்தகையது என்பது விளங்கும்.

ஒத்துழையாமை இயக்கத்தைத் தியாகராயர் சிறிதும் ஆதரிக்கவில்லை என்பதுடன் அதனை எள்ளி நகையாடினார், என்பதற்கு அவரது சட்டமன்ற உரையும்,[136] 'மெயில்' (Mail) இதழும்[137] சான்று தருகின்றன. இர்ஷிக்கும் (Irshick) தமது நூலில் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.[138]

1921-ஆம் ஆண்டில் தொழிலாளர் வேலை நிறுத்தம் பெருமளவில் நடை பெற்றது. பக்கிங்காம் கர்நாடிக் பஞ்சாலைகள் கதவடைப்புச் செய்தன. அதன் விளைவாகப் பல கலவரங்கள் நிகழ்ந்தன. தியாகராயர், கலவரங்கள் நிகழ்ந்த இடங்களுக்குத் தாமே நேரிற் சென்று நிலைமையை அறிந்தார். பின்னர் அதற்குக் காரணமான ஆங்கிலேயக் காவல் துறை அதிகாரிகளை இடமாற்றம் செய்ய வேண்டுமென்று துணிவோடு எழுதியனுப்பினார்.[139] டாக்டர். சி. நடேச னாரும் தியாகராயரின் நடுநிலைப் பண்பை எடுத்துக்கூறி, அவரது விண்ணப் பத்திற்கான நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்று கோரினார்.[140] தொழி லாளர்கள் திரும்பவும் பணிக்குத் திரும்புவதற்காகத் தியாகராயர் மேற் கொண்ட முயற்சிகள் வெற்றி பெற்றன. அரசும் இணங்கி வரச் சூழ்நிலை அமைதியாயிற்று.

1922-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 13-ஆம் நாள் வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு வருகை தந்த பொழுது நகராட்சி மன்றத் தலைவர் என்ற முறை யில் தியாகராயர், அவ்விளவரசருக்கு வரவேற்பளித்தார். மேலும், அரசுடன் ஒத்துழைத்து, நம் உரிமைகளைப் பெறவேண்டும் என்னும் கருத்துடையவ ராகையால், இளவரசரின் வருகையில் ஆர்வம் கொண்டார். ஆனால், ஒத்துழையாமை இயக்கத்தினர் அவரது மோட்டார் வண்டியை வழிமறித்து,

அவரையும் துன்புறுத்தி, வரவேற்பில் கலந்து கொள்ளாதவாறு தடுத்தும், அவரது இல்லத்தைச் சிதைத்தும் துன்புறுத்தினர்.[141] ஒத்துழையாமை இயக்கத்தினர் நடந்த முறையைக் கண்டித்து காந்தியடிகளும் ஓர் அறிக்கை வெளியிட்டார். தியாகராயர் வன்முறையாளர்களை மன்னித்ததுடன் அவர்கள் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்காதவாறு முயன்றார். அவ்வாறு பழிவாங்க நினைப்பவர்களுக்குத் தமது கட்சியில் இடமில்லை என்றும் திட்டவட்டமாகக் கூறினார்.[143] ஆனால், தமக்கு தீங்கிழைப்பவர்களை மன்னிக்கும் தியாகராயர், பொது மக்களுக்குத் தீங்கிழைப்பவர்களை மன்னிக்க என்றும் முற்பட்டதில்லை. அரசியல் கைதிகளை நடத்தும் முறை பற்றிச் சட்டமன்றத்தில் உரையாற்றிய சத்தியமூர்த்தி தகுதியற்ற முறையில் தியாகராயரைச் சாடினார். அதற்குப் பதிலளித்த தியாகராயர் அன்று பொது மக்களுக்குத் தீங்கிழைத்தவர்களை அரசியல் கைதிகளாகக் கருதவியலாது என்று கூறி, அவர்களைத் தாம் கொள்ளைக்காரர்களுடன் ஒப்பிட்டது சரியே என்று அழுத்தமாகக் கூறினார்.[144] எத்தகைய சூழலிலும் தாம் சரியென்று கருதும் கருத்தை அச்சமின்றி எடுத்துக் கூறுவதற்குத் தயங்காத தியாகராயரின் திண்மையும், உறுதிப்பாடும் இதனால் தெளிவாகின்றன.

பிற்பட்டோருக்கு அரசுப்பணிகளில் இடவொதுக்கீடு செய்யும் சட்டத்தைக் கொண்டு வரவும் தியாகராயர் பெருமுயற்சி செய்தார்.[145] அதன் விளைவாக இடவொதுக்கீட்டுச் சட்டம் பலத்த எதிர்ப்புக்களுக்கிடையே நிறைவேற்றப் பெற்றது. அரசு ஆணைகளும் பிறப்பிக்கப் பெற்றன.[146]

ஆந்திரப் பல்கலைக்கழக மசோதாவை நிறைவேற்றுவதிலும் தியாகராயர் பெரும்பங்கு வகித்தார்;[147] இந்து அறநிலையத்துறை ஏற்பட வழிவகுத்தார்.[148] அதுபற்றி அவர் ஆற்றிய உரை பொருட்செறிவும், கருத்து நுட்பமும் உடையனவாக அமைந்திருப்பதுடன் பிராமணரல்லாதாரின் நலனை உட்கோளாகக் கொண்டதாகவும் இருப்பதைக் காணலாம். இந்த நகல் குறிப்பை (மசோதாவை) ஆதரிக்காதிருந்தால் தியாகராயருக்குப் பெருநிதி கொடுப்பதாகக் கூறித் திருப்பதிக் கோயில் மகந்து[149] தியாகராயரிடம் வந்து மன்றாடினார். ஆனால், பிராமணர் அல்லாதாரின் நலனையே குறிக்கோளாகக் கொண்ட தியாகராயர் மகந்துவின் முறையீட்டுக்குச் செவி சாய்க்கவில்லை. மாறாக, அவரைக் கடுமையாகக் கண்டித்துத் தம் இல்லத்தினின்றும் வெளியேறச் செய்ததை அறியமுடிகிறது.[149]

## 2.19. நீதிக்கட்சி ஆட்சியின் விளைவுகள்

பிராமணரல்லாத மாணவர்களும் கல்வி வாய்ப்பைச் சிறப்பாகப் பெற்றனர்.[150] அரசுப்பணிகளில் பிராமணரல்லாதார் அதிக விழுக்காடு இடங்களைப் பெற்றனர்.[151] சென்னை, ஆந்திரப் பல்கலைக் கழகச் சட்டத் திருத்தங்கள்,[152]

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவுதல்.[153] பிராமணர் அல்லாத மாணாக்கர் கல்லூரிகளில் இடம்பெறும் வகையில் தேர்வுக் குழுக்கள் அமைத்தல்.[154] பெண்களுக்கு வாக்குரிமை,[155] தேவதாசி ஒழிப்புச் சட்டம்.[156] கலப்பு மணச் சட்டம்,[157] இனாம் ஒழிப்புச் சட்டம்.[158] வகுப்புவாரிப் பிரதிநிதித்துவச் சட்டம்,[159] தொழில்துறை உதவிச் சட்டம்.[160] தொழிலாளர்களுக்குக் கடனுதவிச் சட்டம்,[161] அறநிலையப் பாதுகாப்புச் சட்டம்,[162] கூட்டுறவுத் துறை வளர்ச்சிச் சட்டம்[163] ஆகிய பல சட்டங்கள் சட்டமன்றத்தில் நிறைவேற்றப் பெற்றமைக்குத் தியாகராயரின் முயற்சியே காரணமெனலாம்.

சென்னை மாநிலம் இந்தியாவின் சிறந்த மாநிலங்களுள் ஒன்றாகக் கருதப்படுவதும், நன்கு ஆளப்படும் மாநிலம் என்று மதிக்கப்படுவதும் இங்கே இரட்டை ஆட்சியில் பெற்ற அரசியல் கல்வி அனுபவத்தின் விளைவேயாகும்.[164]

இவ்வாறு, நீதிக்கட்சியின் ஆட்சியில் மேற்காட்டிய பல நன்மைகள் விளைந்துள்ளன. பி.டி. இராசன், "எங்கள் கட்சியைக் குறை கூறும் சத்தியமூர்த்தி கூட, எங்கள் ஆட்சியின் மீது இலஞ்சம், ஊழல் போன்ற குற்றச்சாட்டுக்களைக் கூறியதில்லை"[165] என்று பெருமிதம் கொண்டார். ஆனால், இக்கால ஆசிரியர்கள் சிலர் தமது நூல்களில் தவறான கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.[166] அவை ஒரு சார்புடையன எனக் கொள்ளுதலே பொருந்தும் எனலாம்.

அக்காலத்துத் தேசியவாதிகள், பிராமணரல்லாதார், தன்னாட்சி வேண்டுவோர் ஆகியோருக்கிடையில் வேற்றுமை காண்பது அரிதாக இருந்தது. பிராமணரல்லாத அமைச்சரவையுடன் தொடர்பு கொண்டிருந்தவர்களுள் சிலர் காங்கிரசுக்காரர்களாகவும் இருந்தனர்.[167] எனவே, அக்காலத்து அரசியல்வாதிகள், பொருளற்ற காழ்ப்புணர்ச்சியற்றவர்களாக இருந்தனர் எனலாம்.

ஆர்நால்டு (Arnold), "நீதிக்கட்சி அமைச்சரவை நிலை பெற்றுவிட்டதால் ஒத்துழையாமை இயக்கம் தோல்வியுற்றது. எனவே, தேசியவாதிகள் தங்கள் அரசியற் கொள்கைகளை மறுபரிசீலனை செய்ய வேண்டியதாயிற்று",[168] என்று கூறினார்.

இங்ஙனம், தியாகராயரால் தொடங்கப் பெற்ற நீதிக்கட்சி அமைப்பு, பல்வேறு கருத்து மாறுபாடுகளுக்கிடமாக அமைந்திருந்தாலும், பிராமணர் அல்லாதாரிடையே ஒரு விழிப்புணர்ச்சி ஏற்படக் காரணமாக இருந்தது என்பதை யாராலும் மறுக்கவியலாது.

## இயல் கருக்கம்

நாட்டு நலனுக்கென்றே தம்மை ஒப்படைத்துக் கொண்டவர் தியாகராயர். அக்காலத்து நாட்டுநல நிறுவனங்கள் பலவற்றிலும் உறுப்பினராக இருந்து தொண்டாற்றினார்.

சென்னை மகாசனசபையில் உறுப்பினராக இருந்து உழைத்தார். அதனைத் தொடர்ந்து 1885-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற காங்கிரசில் உறுப்பினராக இருந்து சுமார் இருபத்தெட்டாண்டுகள் தொண்டாற்றினார். ஆனால், சென்னை மகாசனசபை, காங்கிரசு யாவும் பிராமணர்களின் ஆதிக்கத்திற்குள்ளாகிய நிலையைக் கண்டார். இத்தகைய நிறுவனங்களால் பிராமணரல்லாத பெரும்பான்மை மக்களுக்கு நலனுண்டாகாது என்று கருதினார். காங்கிரசு நடத்தும் சுயாட்சிக் கிளர்ச்சியும் அவருக்கு உடன்பாடில்லை. அந்தச் சூழலில் நாடு சுயாட்சி பெற்றால் அது பிராமண சுயாட்சியாகத்தான் இருக்கும் என்பது அவரது திடமான நம்பிக்கை. மேலும், அரசுடன் ஒத்துழைத்து, அவர்கள் மூலமே, படிப்படியாக நாட்டாட்சி அதிகாரங்களைப் பெற விழைந்தார். எனவே, பிராமணரல்லாதார் இயக்கம் என்று அந்நாளில் போற்றப்பட்ட தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் கண்டார். அதன் கொள்கைகளைப் பரப்பத் 'திராவிடன்', 'ஜஸ்டிஸ்', 'ஆந்திர பிரகாசிகா' என்னும் நாளிதழ்களைத் தொடங்கிப் பிராமணரல்லாதாரிடையே ஓர் எழுச்சியை உண்டாக்கினார். தமது முதுமையையும் பொருட்படுத்தாது மாவட்டங்கள் தோறும் பிராமணரல்லாதார் மாநாடுகள் நடத்தி மாநிலத்தில் ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார்.

'ஜஸ்டிஸ்' என்ற நாளிதழின் பெயரால் பின்னர் நீதிக்கட்சி என்று வழங்கப் பெற்ற அவரது கட்சி தேர்தலில் வென்று இரட்டை ஆட்சியில் பங்கேற்றது. ஆனால், அவர் அமைச்சர் பதவியை வேண்டாமென மறுத்துக் கட்சித் தலைவராக மட்டுமே இருந்து பணியாற்றினார். அவரது தலைமையில் நீதிக்கட்சியின் ஆட்சியில் பல்வேறு நல்ல சட்டங்கள் செயல்படுத்தப்பெற்றன.

சென்னை மாநிலம் நீதி, நிர்வாகம் ஆகிய துறைகளில் சிறந்து விளங்குவதற்குக் காரணம், அக்காலத்தில் நீதிக்கட்சியினர் அமைத்துக் கொடுத்த அடிப்படைத் திட்டங்களே எனலாம்.

### எண் விளக்கம்

1. துரை, மகாசபை வரலாறு, சென்னை மகாசனசபை, 85-ஆம் ஆண்டு விழா மலர், 1969, ப.89.
2. மேற்படி, ப.90.
3. R. Sundaralingam, Politics and National awakening in South India, P.209.

4. மேற்படி, ப.209.
5. Aslum Press Almanack & Directory, Volumes 1886 to 1912.
6. Madras Mahajana Saba, File No.5 (1896-1924), P.5.
7. மேற்படி, ப.100.
8. சபையின் வரலாறு, சென்னை மகாசனசபை 85-ஆம் ஆண்டு விழா மலர், ப.117.
9. D.J. Arnold, Nationalism and Regional Politics (Tamil Nad, India, 1920-1937), Ph.D. Thesis, University of Sussex, 1973, p.51.
10. Madras Mahajana Saba, File No.5 (1896-1924), P.101.
11. மேற்படி, ப.26.
12. மேற்படி, ப.99.
13. மேற்படி, ப.153, 172, 220.
14. மேற்படி, ப.308, 307, 310.
15. ஆய்வாளர், திரு. பக்தவத்சலம் அவர்களை 14.4.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
16. Madras Mahajana Saba, File No.5 (1896-1924), P.101.
17. A. Moin Zoidi & Shahada Zaidi (Editors) The Encyclopaedia of Indian Nationl Congress, Vol.One, (1885-1890), p.161, Appendix, p.609.

தியாகராயர் ஈடுபாட்டுடன் காங்கிரசுப் பேரவையில் பங்கு கொண்ட செய்தி கீழ்க்கண்ட நூல்களிலும் காணப் படுகின்றன.

i. ம.சு. சம்பந்தன், சென்னை மாநகர், பக்.15, 116.
ii. ம.பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழகம், பக்.119, 122.
iii. பெரியார் ஈ.வே.ரா. அவர்கள் திருச்சியில் 3.12.1950-இல் ஆற்றிய சொற்பொழிவு, விடுதலை, 14.12.1950.
iv. பி.எஸ். இளங்கோ, சர்.பி. தியாகராயர் முதல் டாக்டர் கலைஞர் வரை, ப.20.
v. ஆய்வாளர், ம.பொ. சிவஞானம் அவர்களை 17.4.1985 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்தும் இதனை உறுதிப்படுத்துகிறது.

18. ம.பொ. சிவஞானம், விடுதலைப் போரில் தமிழகம், ப.126.
19. Proceedings of the Legislative Council, 5th May, 1925.
20. i. Builders of Modern India, Government Publication, Government of India.

ii. பட்டாபி. சீதாராமய்யா, இந்திய தேசிய காங்கிரசின் வரலாறு.

iii. The Encyclopaedia of Indian National Congress.

21. ஆய்வாளர், திரு. டி. செங்கல்வராயன் (ஓய்வு பெற்ற சென்னைச் சட்டமன்ற உறுப்பினர்) அவர்களை 3.10.86 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

22. 'அய்க்னோகிளாஸ்ட்' பெரியார், பகுத்தறிவாளர் நாட் குறிப்பு - 1985, திராவிடர் இயக்க வரலாற்றுக் குறிப்புக்கள், ப.21-22.

23. கோ. குமாரசாமி, திராவிடர் தலைவர் டாக்டர். சி. நடேசனார், வாழ்வும் தொண்டும், ப.104.

24. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.321.

இத்திராவிடர் இல்லம் பற்றிய செய்திகள் கீழ்க்காணும் நூல்களிலும் காணப்படுகின்றன.

i. சே. இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பி.எச்டி. ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம்.

ii. ஏ.எஸ். வேணு, முரசொலி மலர்.

25. வெ. ஆனைமுத்து, (ப.ஆ.) பெரியார் சிந்தனைகள், ப.29.

26. A. Robert, L. Hardgrave, The Dravidian Movement, p.13 and Eugnene F. Irshick, Politics and Social Conflict in South India, p.47.

27. கோ. குமாரசாமி, திராவிடர் தலைவர் டாக்டர். நடேசனாரின் வாழ்வும் தொண்டும், ப.6.

28. Eugnene F. Irshick, Politics and Social Conflict in South India. p.47.

29. மேற்கோள், 12.2.1950-இல் பம்பாயில் ஈ.வெ.ரா. அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு, விடுதலை, 22. 2.1950, வெ. ஆனைமுத்து (ப.ஆ.) பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், முதற்றொகுதி, ப.637.

30. மேற்படி, ப.912.

31. மேற்படி, ப.938.

32. ஆய்வாளர், 7.6.85 அன்று திரு. சி.ஆர். நரசிம்மன் அவர்களை, அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

33. பி.டி. இராஜன், வரவேற்புரை, The Justice Party Golden Jubilee Souvenir, P.XLII.

34. ஆய்வாளர், 19.4.1985 அன்று திரு. கி. இராமலிங்கனாரை (தமிழ் ஆட்சிச் சொற்காவலர்) அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
35. திரு. வி. கலியாண சுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்.209-210.
36. வெ. ஆனைமுத்து, (ப.ஆ.), பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், முதற்றொகுதி, ப.26.
37. The Justice party Golden Jubilee Sourvenir, P.297.
38. Eugnene F. Irshick, Politics and Social Conflict in South India, p.56.
39. Dt.Fort.St.George (Fortnightly Report) the 1st march 1917, No.846, W-1: p.2.
40. சே. இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பிஎச்.டி. ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், ப.56.
41. Dt.Fort.St.George (Fortnightly Report) the 1st Jan, 1917, No.5168, W-1: p.2.
42. W.S. Krishnaswamy naidu, My Memories, p.69.
43. அ. இராமகிருஷ்ணன், கலைஞர் கருணாநிதியின் உரைநடையில் காணும் சுயமரியாதை இயக்கத் தாக்கம், எம்.ஃபில். ஆய்வேடு, மதுரைப் பல்கலைக் கழகம், ப.9.
44. The Justice party Golden Jubilee Souvenir, pp.297-303.

    சென்னை கீழ்ப்பாக்கம் மனநல மருந்தகத்தின் தலைமைக் கண்காணிப்பாளர் என்.ஏ. கருணாகரன் அவர்கள் இச் சங்கத்தின் தோற்றம் பற்றிய முழுச் செய்திகளையும் எழுதி வைத்துள்ளார். அக்குறிப்புக்கள் மிகவும் விளக்கமாகவும், ஆய்வுக் கண்ணோட்டத்துடனும் எழுதப்பட்டவையாகவும் உள்ளன.

45. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், கையெழுத்துப்படி, ப.25.
46. மேற்படி, ப.26.
47. The Hindu, 20th Dec. 1916 (NNR).
48. சுதேசமித்திரன், 20, டிசம்பர் 1916.
49. The Justice party Golden Jubilee Sourvenir, pp.297-303.
50. மேற்படி, பக்.297-303.
51. மேற்படி, பக்.297-303.
52. Hindunesan, 21st Dec. 1916 (NNR).
53. Sampat Abyudhaya, 27th Dec. 1916 (NNR).

54. Yogatchemam, 22nd Dec. 1916 (NNR).
55. B.S. Baliga, Studies in Madras Administration, Vol.I, p.9.
56. மேற்படி, பக்.9-10.
57. திரு.வி. கலியாண சுந்தரனார், திரு.வி.க.வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.212.
58. டி.எம். பார்த்தசாரதி, தி.மு.க. வரலாறு, பக்.9-11.
59. Justice, July, 21st 1917 (NNR)
"When beggars die no comments are seen
Heavens themselves blaze forth the death of Kings."
60. Justice, Aug. 22nd 1917 (NNR).
61. Dravidian, 23rd July 1919 (NNR).
62. Dravidian, 20th Aug. 1919, 23rd May 1919, 12th June 1919 (NNR).
63. Indu Rajagopal, Ideology and Political Development in Madras; 1919 to 1932 of the Non-Brahmin Movement (Ph.D. Thesis) p.57.
64. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.154.
65. Non-Brahmin, 26th Nov. 1916 (NNR).
66. மேற்படி, 3rd Dec. 1916 (NNR).
67. மேற்படி, 17th Dec. 1916 (NNR).
68. Eugnene F. Irshick, Politics and Social Conflict in South India, p.51.
69. Non-Brahmin, 1st July 1917 (NNR).
70. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.211-212.
71. T. Varadarajulu Naidu, The Justice Movement, p.1.
72. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், கையெழுத்துப்படி, ப.2.
73. T. Varadarajulu Naidu, The Justice Movement, p.80.
74. மேற்படி, பக்.84-86.
75. மேற்படி, பக்.88-100.
76. மேற்படி, ப.103.
77. Justice Commomaration Day Supplement, 26th Feb. 1931, p.98.
78. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், பக்.212-220.

79. கே.ஜி. இராதாமணாளன், வெள்ளுடை வேந்தர் தியாகராயர், The Justice party Golden Jubilee Sourvenir, p.181.
80. Robert Hardgrave, Essays in the Political Sociology of South India, p.17.
81. T. Varadharajulu Naidu, The Justice Movement, p.120.
82. Fortnightly Reports (Confidential) Dated 17th May and 31st May 1917 and 1st Sep. 1917.
83. The Justice Party Golden Jubilee Sourvenir, pp.205-206.
84. கோ. குமாரசாமி, 'நீதிக்கட்சியின் சிறப்பு மாநாடும் (21.10.1918), தியாகராயரின் தலைமையுரையும்', திராவிடப் பெருந்தகை தியாகராயர் கையெழுத்துப்படி, ப.4.
85. G.O.No.845-55, 19th Sep. 1918, public Department (Miscellaneous).
86. P.Rajaram, The Justice Party (A Historical Study) Ph.D. Thesis, p.108.
87. Justice, 3rd May 1918 (NNR).
88. T. Varadarajulu Naidu, The Justice Movememt, pp.63-66.
89. Andrapatrika, 8.9.1917, 11.9.1917, 13.9.1917, 15.9.1917 (NNR).

Krishnapatrika, 15.9.1917 (NNR).
90. Andraprakasika, 14.9.1917 (NNR).
91. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்.212-216.
92. மேற்படி, பக்.212-216.
93. Sudesamitran, 19th Oct.1917, 10th Oct 1917, 9th Nov 1917, 10th Sep 1917, 13th Sep. 1917 (NNR).
94. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்.212-216.
95. Okklilgara Patrika, 25th July 1917 (NNR).
96. Andra Patrika, 8th Sep.1917 (NNR).
97. Krishna Patrika, 22nd Sep. 1917 (NNR).
98. Desamatha, 26th Sep. 1917 (NNR).
99. Sampath Abyudhaya, 23rd Sep. 1917 (NNR).
100. Hindunesan, 14th Nov. 1917 (NNR).
101. Lokopakari, 19th Nov. 1917 (NNR).
102. Nalla Aayam, 14th Nov. 1917 (NNR).

103. Dravidian, 24th Sep. 1917 (NNR), 14th Oct. 1917 (NNR), 15th Nov. 1917 (NNR).

104. Non-Brahmin, 14th Oct. 1917 (NNR).

105. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், பக்.276-277.

106. மேற்படி, ப.234.

107. Edwin S. Montegu, An Indian Diary, pp.57, 58-60, 119, 123, 129-130.

108. மேற்படி, பக்.127, 135, 104, 115, 118, 217, 132.

109. Fortnightly Report, Dt.Stonehouse Hill, The Nilgiris, The 2nd Oct. 1919, No.3745, W-1, p.1

110. Fortnightly Report, 19th Jan. 20, No.168, W-1, p.1.

111. கோ. குமாரசாமி, 'நீதிக்கட்சியின் மூன்றாவது மாநில மாநாடு', திராவிடப் பெருந்தகை தியாகராயர் கை யெழுத்துப்படி, ப.1.

112. Fortnightly Report, 19th Jan. 1920, No.168, W-1, p.1 and 5th March 1920, No.830, W-1, p.2.

113. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.269.

114. Dt.Fort St.George, The 3rd April 1920, No.1209, W-1, p.3.

115. Dravidian, 11th June 1920 (NNR).

116. The Hindu, 11 the June 1920 (NNR).

117. Christofer John Baher, The Politics of South Indian 1920-37. Interview with K.V. Gopalaswamy, (who was a Justice Party Worker inthe City at these elections) in Hyderabad, July 1971, p.37.

118. The Hindu , 6th Oct. 1920.

119. மேற்படி, 14th Aug. 1920.

120. An Interview with Sr. P.T. Rajan, former Justice Minister on March 12, 1973, by Dr. Hari Dev Sharma, Oral History Transcript, p.3.

121. The Justice party Golden Jubilee Souvenir, p.35.

122. The Hindu, 15th Dec. 1920.

கீழ்க்கண்ட நூல்களும், அரசாங்கக் குறிப்புக்களும், இதனைக் குறிப்பிட்டுள்ளன.

Christofer John Baher, The Politics of South India, p.37. Notes on the background and affiliation of Madras M.L.C.'s in G.O.I. Reforms Franchise B.34-99, March 1921, NA.I.

கே. பரமசிவம், நீதிக்கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும், ப.39.

ம.பொ.சிவஞானம், தமிழகத்தின் பிறமொழியினர், ப.152.

S.P. Sen (Ed.), Dictionary of National Biography, Vol.I (A-D), p.305.

எஸ்.எஸ். அருணகிரிநாதர், 'உள்ளும் புறமும்', தியாகராய செட்டி உயர்நிலைப் பள்ளிப் பொன்விழா மலர், ப.21-22.

123. ஆய்வாளர் திரு. செங்கல்வராயன் (முன்னாள் நூலகர், பச்சையப்பன் கல்லூரி) அவர்களை 10.5.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

124. Gilbert Slader, Southem India its Political and Economical Problems, p.51.

125. அ. மறைமலையான், பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு, ப.75-76.

126. Fortnightly Report, 1923 (Dt.1st Sep.1923), No.7182 - 1 Public.

127. T.M. Kumaresan, Sir. pitti. Theagaraya Chetty - A Study (M.Phil. Thesis) Madras University, 1963, p.110 and M.R.O. (L & M) G.O.1332, Dt.24th Sep. 1920.

128. Proceedings of the Legislative Council, Madras, Vol.II, No.1, 1.8.1921, p.469.

129. மேற்படி, Vol.IV, No.1, 13.10.1921, p.2062.

130. மேற்படி, Vol.IV, No.1, 13.10.1921, p.2071.

131. மேற்படி, Vol.I, No.1, 14.2.1921, p.83.

132. மேற்படி, Vol.I, No.1, 14.2.1921, pp.203-204, 260, 266.

133. மேற்படி, Vol.I, No.1, 14.2.1921, pp.410-412.

134. Servant of India, Vol-IV, No.4, Feb.24, 1921, p.37.

135. Proceedings of the Legislative Council, Madras, Vol-I, No.1, 14.2.1921, p.412.

136. மேற்படி, Vol.I, No.1, 12.10.1921, p.1026.

137. The Mail, 10th Sep. 1920 (NNR)

138. Eugnene F. Irshick, Politics and Social Conflict in South India, p.185.

139. நவசக்தி, (ஸ்ரீமான் தியாகராய செட்டியார் முதலியோர் விண்ணப்பம் - லார்ட் வில்லிங்டனின் பிடிவாதம்), 9.9.1921, ப.3.

140. Proceedings of the Legislative Council, Madras, Vol-III, No.1, 12.10.1921, p.1010.

141\. i. The Hindu, 13th Jan. 1922.

ii. Fortnightly Report No.381-1, dt.20th Jan. 1922, p.1.

iii. Governor of Madras to Private Secretary to Viceroy, Telegram 19th Jan. 1922, No.41, pp.33-34.

142\. Gandhi, Young India.

143\. ஆய்வாளர், கன்னைய்ய நாயுடு அவர்களை சென்னையில் அவரது இல்லத்தில் 16.8.1986 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து.

144\. Proceedings of the Legislative Council, Madras, Vol-XV, 21.11.1923, p.59.

145\. T.M. Kumaresan, Sir. Pitti. Theagaraya Chettiar - A Study (M.Phil. Thesis), Madras University, 1963, p.63.

146\. M.R.O. Public Ordinary Series, G.O.613, dt.16th Sep. 1921, G.O.658, 15th Aug. 1922.

147\. Proceedings of the Legislative Council, Madras, Vol-XV, 19.1.1922, p.37.

148\. மேற்படி, Vol-XIV, 26.3.1923, p.2836.

149\. திரு. சந்திரமௌலி (தியாகராயரின் கடைசிப் புதல்வி திருமதி. கௌசல்யா வயிற்றுப் பேரன்) அவர்களை ஆய்வாளர் தண்டையார்ப்பேட்டையில் அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

அக்காலத்தில் திருப்பதி கோயிலை நிர்வாகித்து வந்த ஒரு மடத்தின் பெயர் 'மகந்து மடம்' என்பது. அம்மடத்தின் தலைவர் பதவிக்கு 'மகந்து' என்று பெயர். எனவே அம் மடத்தலைவர் 'மகந்து' என்றே அழைக்கப்பட்டார். அம் மடத்தினர் கோயில் நிர்வாகத்தில் ஊழல்கள் செய்ததால், அறநிலையத் துறை அந்நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டது. நாளடைவில் அம்மடம் சீர்குலைந்து அழிந்து விட்டது.

150\. P. Spratt, D.M.K. in power, p.25.

151\. The Justice party Golden Jubilee Souvenir, 1968, pp.67-70.

152\. G.O.87, Education, Dated 16.1.1923.

153\. பி.டி. இராசன், வரவேற்புரை, The Justice party Golden Jubilee Sourvenir, 1968, p.XLV.

154\. 'திராவிடனில் வெளிவந்த சிவஞானம் பிள்ளையின் அறிவிப்பு', குடியரசு, 10.5.1925.

155\. P. Spratt, D.M.K. in Power, p.26.

156\. மேற்படி, ப.25.

157. வெ. ஆனைமுத்து, பெரியார் சிந்தனைகள், தொகுதி - 1, ப.XXVI.

158. The Justice party Golden Jubilee Souvenir, 1968, (Special Marriages Act, 13.8.1921), p.33.

159. மேற்படி, ப.33.

160. P. Spratt, D.M.K. in Power, p.24.

161. மேற்படி, ப.25.

162. சே. இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், (Ph.D. Thesis) சென்னைப் பல்கலைக் கழகம், ப.60.

163. P. Spratt, D.M.K. in Power, p.25.

164. The Hindu, 20th Dec. 1920.

165. பி.டி. இராசன், வரவேற்புரை, The Justice party Golden Jubilee Souvenir, 1968, p.LIII.

166. Dr. N. Inniah, The Birth and Death of Political Parties in India, p.63.

167. D.J. Arnold, Nationalism and Regional Politics (Tamil Nad, India 1920-1937), Ph.D. Thesis, University of Sussex, 1973, p.73.

168. மேற்படி, ப.96.

# 3

# தியாகராயரின் சமுதாயப்பணி

## 3.0. முன்னுரை

மக்கள் கூடி வாழ்வதை மனித சமுதாயமெனக் கூறுகிறோம். மனித சமுதாயத்தில் மக்களிடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. மக்கள் மேற்கொள்ளும் நடையுடை, பழக்க வழக்கங்கள், வாழ்க்கை முறை இன்னோரன்ன பண்புகளுக்கேற்ப மக்கள் சமுதாயம் பல சமூகங்களாக அல்லது தோழமைக் குழுமங்களாகப் (Communities) பிரிவுபட்டுள்ளது. இச்சமூகங்களுக்கிடையே காலப் போக்கில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டுவிட்டன.

சென்னை மாநிலத்தைப் பொறுத்தவரை பிராமணர் சமூகம் - பிராமணரல்லாதாராகிய சமூகம் என்னும் பாகுபாடு இந்நூற்றாண்டில் பெருமளவில் தோன்றலாயிற்று. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் மக்கள் தொகையில் மிகக் குறைந்தவர்களாக இருந்த பிராமணர்களே அரசியல், பொருளாதாரம், நிர்வாகம் ஆகிய துறைகளில் பெருமளவில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர்.

இந்நிலையைச் சுட்டிக்காட்டி, பிராமணரல்லாதாரிடையே சமுதாய விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார் தியாகராயர். சமுதாய நிறுவனங்கள் பலவற்றிலும் உறுப்பினராக இருந்து சமுதாய முன்னேற்றத்திற்குக் குறிப்பாகப் பிராமணரல்லாதார் முன்னேற்றத்திற்கு அயராது உழைத்தார். அவர் ஆற்றிய சமுதாயப் பணியின் சிறப்பை இவ்வியலில் காணலாம்.

## 3.1. சென்னை நகராட்சி மன்றத்தில்

1880 முதல் 1884 வரை இந்திய அரசப் பிரதிநிதியாக (Viceroy) இருந்த ரிப்பன் பிரபு, படிப்படியாக இந்தியர் ஆட்சிப் பொறுப்பிலே பங்கேற்க வேண்டுமென்ற கருத்துடையவராக இருந்தார். அதற்கு அடிக்கல் நாட்டுவது போலத் தல சுயாட்சிச் சட்டத்தை நிறுவினார். அச்சட்டத்தின்படி நகராட்சி மன்றங்களில், இந்தியர்களும் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சென்னை நகராட்சி மன்றத்தின் உறுப்பினராகத் தியாகராயர் 1882-ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார். 1882 தொடக்க முதல் 1923 வரை நாற்பத் தொன்றரை ஆண்டுகள் நகராட்சி மன்ற உறுப்பினராகப் பணியாற்றினார். இந்திய வரலாற்றிலேயே இத்துணை நீண்ட காலம் நகரமன்ற உறுப்பினராக இருந்தவர் தியாகராயர் ஒருவரே என்பதை அறியலாம். தன்னலங்கருதாது, மக்கட்பணிக் கென்றே அவர் தம்மை ஒப்படைத்தார். சென்னை நகர்வாழ் மக்களின் உடல் நலம், சுகாதாரம், பொருளாதாரம், வாழ்க்கை வசதிகள், கல்வி போன்ற அனைத்துத் துறைகளிலும் கருத்தைச் செலுத்தினார். 1919-ஆம் ஆண்டு மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் விளைவாக 1920-ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் வெற்றி பெற்றார்; இம் முறை நகராட்சி மன்றத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்;[1] தலைவர் என்ற முறையில் நகராட்சி மன்றத்தைத் திறம்பட நடத்தினார்; சென்னை நகரின் விரிவாக்கத்திற்குப் பெரிதும் உழைத்தார்.

### 3.1.1. விளக்கு, தண்ணீர் வசதி

தியாகராயர், தாம் உறுப்பினராகப் பதவியேற்பதற்கு முன்பே பலமுறை நகராட்சி மன்றத்திற்குக் கடிதங்கள் எழுதியிருப்பதைச் சுட்டிக்காட்டித் தெருக் களில் போதிய அளவு விளக்குகள் அமைக்கப்பட வேண்டுமென்று கேட்டார். மன்றத் தலைவரும் இந்த ஆண்டில் மக்களின் தேவைகள் நிறைவேறும் வகையில் விளக்குகள் அமைக்கப்படும் என்று கூறித் தியாகராயரின் கருத்தை ஏற்றுச் செயல்படுத்தினார்.[2] நகரின் எட்டுப் பிரிவுகளுக்கும் எட்டு மேற்பார் வையாளர்களை நியமித்துத் தெருவிளக்குகள் சரியாக எரிகின்றனவா என் பதைக் கண்காணிக்க வேண்டும் என்னும் தீர்மானம் கொண்டு வந்தார்.[3] தேவை நேர்ந்த போதெல்லாம் தெருவிளக்கு வசதி குறித்துப் பலமுறையும் மன்றத்தில் வினாக்கள் எழுப்பியும், விளக்கங்கள் அளித்தும், விளக்கு வச தியை ஏற்படுத்தக் காரணமாக இருந்தார்.[4] தெருவிளக்குகள் சரியாகப் பரா மரிக்கப்படுவதில்லை என்பதை நேரிற் கண்டறிந்து வந்து மன்றத்தில் கூறிய அவரது முயற்சி யாவராலும் பாராட்டப் பெற்றது.[5] இடுகாடுகளில் இரவில் செல்லும் மக்களின் வசதிக்காக அங்கும் விளக்கு வசதி அளிக்க ஏற்பாடு செய்தார்.[6] மேலும், விளக்குகள் எவ்வளவு நேரம் எரிய வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தி, முறைகளை நெறிப்படுத்தினார்.[7] மின்விளக்குகள் அமைப்பதற்கு ஐந்தாண்டுகள் ஆகும் என்பதைக் காட்டி, அதுவரை தெருவிளக்குள் சரியா கக் கவனிக்கப்பட வேண்டும் அதற்காக தேவையற்ற பிற செலவுகளைக் குறைக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி, அதற்கான வழி முறைகளையும் சுட்டிக் காட்டினார். தியாகராயரின் இக்கருத்தைத் 'திராவிடன்' இதழும் ஆதரித்தது.[8]

தண்ணீர் விநியோக முறையைச் செம்மைப்படுத்தி, மக்களுக்கு வேண்டிய வாறு தண்ணீர் கிடைப்பதற்கு வழிவகுத்தார்.[9] வீடுகளுக்குக் குழாய் இணைப் புக்கள் சரியான முறையில் அமைக்கத் தூண்டினார்.[10] மேலும், விசை நீரலம் பல் முறைக் (flush-out-system) கழிப்பறைகளை ஏற்படுத்த வேண்டியதன் இன்றியமையாமையை விளக்கமாகக் கூறி, அதற்காகச் செங்குன்றம் நீர்த் தேக்கத்தை மூன்றடி உயர்த்தக் கோரினார்.[11] இக்கோரிக்கையை ஏற்று, அரசும் இரண்டடி உயர்த்துவதற்கு அனுமதியளித்தது.[12]

### 3.1.2. நகரத் தூய்மையும் கழிவுநீர் வசதியும்

தியாகராயர் சென்னைப் பட்டணம் தூய்மையானதாகத் திகழவேண்டும் என்பதிலும், கழிவு நீரை வெளியேற்றும் திட்டங்களைச் செயல்படுத்துவதிலும் ஆழ்ந்த கவனம் செலுத்தினார். அப்பணிகளில் ஏற்படும் குறைபாடுகளையும் அவ்வப்பொழுது சுட்டிக்காட்டித் தம்மால் இயன்றவரை சரிவரச் செயலாற்றத் தூண்டினார்; சென்னை நகராட்சி மன்றத்தில் பன்முறை இதுபற்றிப் பேசி யுள்ளார்.

1883-ஆம் ஆண்டிற்குரிய மாநகராட்சி நிர்வாக அறிக்கையில் விடு பட்டுள்ள,

(i) விசைக் குழாய் மூலம் சாக்கடை நீரை வெளியேற்றும் நிலையம் (Pumping Station for Drainage) அமைப்பதற்கு, சென்னை நகராட்சி மன்றத்திற்கு வாடகையின்றி நிலம் வழங்குவதற்கான இந்திய அரசின் அறிக்கை.

(ii) மருத்துவ மனைகளும், மருந்தகங்களும்

(iii) 1881-ஆம் ஆண்டுப் பாறை எண்ணெய்ச் சட்டம் (Petroleum Act) ஆகிய செய்திகளடங்கிய தீர்மானத்தை ஆதரித்தார்.[13]

கழிவு நீரை வெளியேற்றும் திட்டத்திற்குப் போதிய பணம் அரசிடமிருந்து பெறுவதற்கும், நகராட்சி மன்ற உறுப்பினர்கள், நகரச் சுங்கச் சாவடிகள் மூலம் பணம் பெற்றுத்தர அரசின் அனுமதி பெறுவதற்கும் வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று கூறி அவற்றிற்கான வழிவகைகளையும் எடுத் துக் காட்டினார்.[14] இவரது முயற்சியால் இத்திட்டங்களுக்குச் சென்னை அரசிட மிருந்து பெரும் பொருளுதவி கிடைத்துள்ளது. இதனை இந்தியப் பாராளுமன் றத்தில் கோகலே தரும் கணக்கீடும்[15] உணர்த்துகின்றது. "கழிவுநீர் வெளியேற் றத்திற்காக நாம் ரூ.20,000/- செலவு செய்கிறோம். ஆனால், இன்னும் சாக்கடை நீர் தெருக்களில் ஓடுகின்றது. இதைப்பற்றி யாரும் கவனிப்பதில்லை"[16] என்று தியாகராயர் சுட்டிக்காட்டினார்.

இதுபோன்று பலமுறை குறைகளைச் சுட்டிக்காட்டியும், சீர்ப் படுத்துவதற் குரிய வழிவகைகளை எடுத்துக் கூறியும் கழிவு நீர்த் திட்டங்களைச் செயல் படுத்துவதில் ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார்.[17] "ஒவ்வொரு தெரு விலும் இருக்கின்ற, வரி செலுத்தும் மக்களில் ஒருவர் அந்தத் தெருவின் பாது காப்புச் செயல், தெருமராமத்து, விளக்கு வசதி போன்றவற்றைக் கவனித்து அறிக்கை கொடுக்கும்படியாக வேண்டிக்கொள்ளும் தீர்மானத்தை முன் மொழிகிறேன்"[18] என்னும் அவரது கூற்றே அவர் சென்னை நகரத் தூய்மைக் கும், மக்கள் நலனுக்கும் ஏற்ற எளிய வழிகளை எடுத்துக் கூறும் திறத்திற்குச் சான்றாகும்.

### 3.1.3. குடிமக்களின் பொதுச் சுகாதாரம்

மக்கள் நோயற்ற வாழ்வு வாழ்வதற்குச் சுற்றுச் சூழல் தூய்மை காக்கப் படல், நோய்வாய்ப் படும் மக்களுக்குத் தகுந்த மருந்தளித்தல், நோய்த் தடுப்பு ஏற்பாடுகளைச் செய்தல் ஆகியவற்றில் நகராட்சி மன்றம் மேற்கொள்ள வேண்டிய பணிகளைச் சுட்டிக்காட்டிச் செயல்பட ஊக்குவித்தார். தவிர, சென்னைப் பட்டணத்தில் எங்கெங்கு காலரா, பிளேக் போன்ற நோய்கள் தோன்றுகின்றன; அவற்றைத் தடுப்பதற்கும், நோய்களைக் குணமாக்குவதற் கும் எவ்வெவ்வாறு செயல்பட வேண்டும் என்பது பற்றிப் பலமுறை எடுத்துக் கூறினார். நோயால் இறந்து படுபவர்களின் எண்ணிக்கையைப் புள்ளி விவரங் களுடன் எடுத்துக் காட்டி நகராட்சி உடல்நலத் துறையினரை விழிப்புடன் பணியாற்றத் தூண்டினார். சிந்தாதிரிப் பேட்டை, வண்ணாரப்பேட்டை, தண்டையார்ப்பேட்டை, புரசைவாக்கம், சைதாப்பேட்டை ஆகிய பகுதி களைத் தாமே நேரில் சென்று பார்வையிட்டு அங்குள்ள நிலைமைகளை நகராட்சி மன்றக் கூட்டங்களில் எடுத்துக் காட்டினார்.[19] கொசுக்கள் மிகுந்த பகுதிகளில் மலேரியாவைத் தடுப்பதற்கு ஆவன செய்யுமாறு வலியுறுத் தினார். மேலும், ஊரில் காலரா பரவியதால் மக்கள் இறந்துபட்டதைப் புள்ளி விவரங்களுடன் எடுத்துரைத்ததோடு, இத்தகைய நேரத்தில் உடல்நலத்துறை அலுவலர் திருவாளர் 'குக்' (Mr. Cook) படகுப் போட்டியில் கலந்து கொள் ளப் புனாவுக்குச் சென்றதை வன்மையாகக் கண்டித்தார்.[20] ஒரு நாளங்காடி அமைக்க வேண்டுமென்ற தீர்மானம் கொண்டுவரப் பட்ட போது தியாகராயர், "இது பற்றி நாம் சுமார் இருபத்தைந்து ஆண்டுகளாக எண்ணி வருகின்றோம். ஆனால், இத்தனை ஆண்டுகளாகியும் பொருளாதார வசதிக் குறைவால் இதை இன்னும் நிறைவேற்றாதிருக்கிறோம். ஆனாலும், மக்கள் நோயால் துன் புற்று மடியும் இறப்பு விகிதம் கூடிவரும் இன்றைய நிலையில் நாளங் காடி அமைப்பது என்பது ஆடம்பரத் தேவையாகும். மக்களின் பொதுச் சுகாதாரத்திற்கு ஏற்ற செயல்களைச் செய்வது, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட

உறுப்பினர்களாகிய நம்முடைய கடமையன்றோ? சென்னையில் உணவுப் பங்கீட்டு முறை மோசமாக உள்ளது என்பதை உணருகிறேன். இவற்றைச் சரி செய்வதுதான் நமது முதல் கடமை. அதற்குப் பிறகு வேண்டுமானால் ஆடம்பரத் தேவைகளுக்காகப் பணம் செலவு செய்யலாம்"[21] என்று உறுதியாகக் கூறினார்.

'சென்னைப் பட்டணத்தின் முதற்கோட்டம் மிக அதிருப்தியான நிலையில் உள்ளது. அது சென்னைக்கே தீங்கை விளைவிக்கும். அதனால், நகர மன்றத் தலைவர், முதற்கோட்ட உறுப்பினர் டாக்டர். மெயிட்லாண்ட், டாக்டர். வரதப்ப நாயுடு ஆகியோர் அடங்கிய ஒரு குழு அமைத்து, முதற் கோட்டத்தைச் சீர்படுத்துவதற்கான வழிவகைகளைக் கண்டு செயல்படுத்த வேண்டும்' என்னும் தீர்மானத்தைக் கொண்டு வந்தார்.[22] "கொசுக்களை ஒழித்து, மலேரியாவினின்று மக்களைக் காப்பதாக இருந்தால் அதற்காக ரூ.4,000/- என்ன, ரூ.20,000/- அல்லது ரூ.50,000/- கூடச் செலவு செய்யலாம்"[23] என்று கூறும் அவரது கூற்றும் மக்களின் சுகாதாரம், நலம் ஆகியவற்றில் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினைக் காட்டுகிறது.

இங்ஙனம் இடைவிடாது மக்களின் பொதுச் சுகாதாரத்தைப் பற்றி வினாக்கள் எழுப்பியும், பரிந்துரைகள் செய்தும், வழிவகைகளைக் கூறியும் வந்ததால் கீழ்க்கண்ட நலன்கள் விளைந்தன. சாக்கடைகள் ஓரளவு சீர்படுத்தப் பெற்றன. கழிப்பறைகள் புதுமுறையில் திருத்திக் கட்டப் பெற்றன. இடுகாடுகளுக்குச் சுற்றுச் சுவர்கள் எழுப்பப்பெற்றன. பலவிடங்களில் புதுக் கழிப்பறைகளும், புதுவகையான சிறுநீர்க் கழிப்பறை (Torfeit Urinal)களும் கட்டப் பெற்றன. அமிழ்தண்டூர்தி (Tram cart) நிற்குமிடங்களில் கழிப்பறைகள் கட்டப் பெற்றன. இவற்றின் கழிவு நீர் தென் கூவத்துடன் இணைக்கப் பெற்றது.[24]

### 3.1.4. கழிவுநீர் வயல்கள்

கழிவுநீர் வயல்களால் பல பகுதிகளிலும் சுகாதாரக் குறைவு ஏற்படுகிறது என்பதை உணர்ந்த தியாகராயர் அவற்றைச் சீர்ப் படுத்த வேண்டுமென்பதில் மிகவும் கவனம் செலுத்தினார். "தண்டையார்ப்பேட்டையிலுள்ள கழிவுநீர் வயல் மிகவும் மோசமான நிலையில் உள்ளது. எனவே, அதன் தண்ணீரைக் குழாய்கள் மூலம் கடலில் இணைக்க வேண்டும்"[25] என்று கூறினார். அத்துடன் நில்லாது இது தொடர்பாகச் சுகாதாரக் குழுத்தலைவர் ஹட்டனுக்கு (Hutton) ஒரு கடிதமும் எழுதினார்.[26] இதேபோல் காசிமேடு வயலின் நிலையையும் சுட்டிக்காட்டி அதை ஓராண்டிற்கு மூடிவிட வேண்டுமென்றும் அத்தண்ணீரைத் திறந்த கால்வாய் மூலம் வெளியேற்றலாம்"[27] என்றும் எடுத்துச் சொன்னார். எல்லாக் கழிவுநீர் வயல்களையும் மூடிவிட வேண்டுமென்றும்

கழிவுகளையெல்லாம் கொள்கலன்களின் (Barrels) மூலம் வெளியேற்ற வேண்டுமென்றும்[28] வலியுறுத்தினார். கழிவுநீர் வயல்கள் அறிவியல் முறையில் அமைக்கப்பட்டுள்ளன என்று கூறிய மன்றத் தலைவரின் கூற்றை மறுத்து, "அவை அவ்வாறு வைக்கப் பெறவில்லை; பல எருமைகள் அவற்றில் மூழ்கி இறந்து விட்டன"[29] என்று கூறினார். மேலும், வேலைகள் விரைவாகச் செய்து முடிக்கப் பெறவேண்டும் என்பதிலும் மிக்க கவனம் செலுத்தும் இயல்புடைய தியாகராயர் கழிவுநீர்க் கால்வாய்ப் பணி தாமதப்பட்டபோது, "கழிவு நீர்க் கால்வாய்ப்பணி இன்னும் முடியவில்லை. தலைமைப் பொறியாளர் புதுப்புது வேலையாட்களை வைத்துக் கொள்ளுவதால் அவர்களுக்கு ஒவ்வொரு முறையும் புதிதாகக் கற்பிக்க வேண்டியுள்ளது. இதற்குள் இரண்டரை மைல் தூரம் முடித்திருக்கலாம். கால்வாய் வெட்டுவதற்கு என்ன பொறியியல் திறமை வேண்டும்"[30] என்று கேட்டார்.

### 3.1.5. மக்கள், குழந்தைகள் நலம் பேணுதல்

பெண்கள், குழந்தைகளின் உடல்நலம் நன்கு பேணிக் காக்கப்பட வேண்டுமென்பதிலும் தியாகராயர் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அதற்காக நகராட்சி மருத்துவ மனைகளின் நிர்வாகத்திலும் கருத்துச் செலுத்திக் குறை போக்க அரும்பாடு பட்டார். கருப்பு நகரப் பகுதி, நகரின் இரண்டாவது, மூன்றாவது பிரிவுகள், டிமெல்லோஸ் வீதி (Demellose Street) வயல், திருநெல்வேலி குடியிருப்புத் தொகுதி (Trinelvellay settlement) ஆகிய பகுதிகளில் வாழும் குழந்தைகள் எலும்புந் தோலுமாக உள்ளதையும், அவர்கள் அடிக்கடி நோய்வாய்ப்பட்டு அவதியுறுவதையும் எடுத்துக் கூறித் தக்க நடவடிக்கை எடுக்குமாறு வேண்டினார்.[31] தண்டையார்ப் பேட்டையிலும் செம்பியத்திலும் புது மருத்துவ மனைகள் கட்டுமாறு வற்புறுத்தினார்.[32] மேலும், இரண்டு சின்னம்மை மருத்துவமனைகள் கட்டுவதற்கு இலட்சம் ரூபாய் கடன் திரட்டுமாறு வேண்டினார்.[33]

இவரது இடைவிடாது முயற்சியின் பயனாக 1908 - 1909-ஆம் ஆண்டுகளில் குழந்தைகள் சாவைத் தடுக்க, எண்பத்து நான்கு குழந்தைகளுக்குப் பால் வழங்கப் பெற்றது. பெண் சுகாதார அலுவலர்கள் நியமிக்கப் பெற்றுக் குழந்தைகளின் நலன் காக்கப் பெற்றது.[34] தொற்று நோய்கள் மிகுதியாக இருப்பதால் வண்ணாரப்பேட்டையிலும், தங்கசாலைத் தெரு, திருவொற்றியூர் நெடுஞ் சாலையைச் சந்திக்குமிடத்திலும், இராயபுரத் திலும் மூன்று தற்காலிக மருத்துவமனைகளேனும் ஏற்படுத்தக் கோரினார்.[35] சென்னைப் பட்டணத்தின் தென்கோடிப் பகுதியில் குழந்தைகள் நலக் காப்பகம் ஒன்று அமைப்பதென்றும் அதற்கு வேண்டிய பராமரிப்பு முதலிய அனைத்தையும் அளிப்ப

தென்றும் முடிவு செய்யப் பெற்றுச் செயல்படுத்தச் செய்தார்.[36] கல்விக் கூடங் களில் பயிலும் மாணவர்களின் உடல் நலத்தை மாதமொரு முறை சோதித் தறிவதற்கான திட்டத்தை வகுத்தளித்தார்.[37] இத்திட்டம் அவர் குழந்தைகளின் நலத்தில் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டுவதுடன், அவரை ஒரு நடை முறைச் சிந்தனையாளராகவும் உணர்த்துகிறது.

ஏழு முதல் பத்து வயதுக் குழந்தைகள் அனைவருக்கும் கட்டாயமாக அம்மைத் தடுப்பு நடவடிக்கைகளின்படி அம்மை குத்தப்பட வேண்டும் என்று ஒரு திருத்தம் கொண்டு வந்தார்.[38] இஃது அனைவராலும் எற்றுக் கொள்ளப் பெற்றது.

சுகாதார வாரம் கொண்டாடுவதென்றும், அப்பொழுது குழந்தைகள் காட்சி நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது. தலைவர் என்ற முறையில் தியாக ராயர் அதற்கென ரூபாய் இரண்டாயிரம் செலவு செய்வதற்கு அனுமதியளித் தார்.[39] பொதுப் பணத்தைச் செலவு செய்வதில் கண்டிப்பான நடைமுறை களைப் பின்பற்றும் தியாகராயர், குழந்தைகள், மக்கள், பெண்கள் நலத்துக் காகச் செலவு செய்வதற்குச் சிறிதும் தயங்காதவர் என்பதற்கு இந்நிகழ்ச்சி ஒரு சிறந்த எடுத்துக் கட்டாகும். இதே போன்று பூங்காக்களில் விலங்குகளை வளர்ப்பதற்கு ஒதுக்கப்பட்ட பணத்தை ரூபாய் ஆயிரத்திலிருந்து இரண்டாயிர மாக உயர்த்த வேண்டுமென முன்னரே இவர் கோரியிருப்பதும் குறிப்பிடத் தக்கது.[40]

### 3.1.6. பூங்காக்கள்

மக்களின் உடல்நலத்தில் கருத்துச் செலுத்திய தியாகராயர், அவர்கள் மகிழ்வுடன் தங்கள் நேரத்தைக் கழிப்பதற்கும், அதே நேரத்தில் தூய காற்றைப் பெறுவதற்கும் வாய்ப்பாக, நகரின் பலவிடங்களில் பூங்காக்களை அமைப் பதற்கு வழிவகுத்தார். அத்துடன் அமையாது அவைகளைச் சரியாகப் பாது காக்கவும் மாநகராட்சியைத் தூண்டினார். சரியாகப் பாதுகாக்கப்படாத நிலை களைச் சுட்டித் திருத்துவதற்கும் அவர் என்றும் தயங்கியதில்லை. 1888-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 13-ஆம் நாள், திருவேங்கட முதலியார் மக்கள் பூங்கா, நேப்பியர் பூங்கா ஆகியவற்றைக் கவனித்துக் கொள்ளுவதற்கென்று ஒரு குழுவை நியமிக்கலாம் என்ற தீர்மானத்தை முன் மொழிந்தபோது தியாகராயர், அதை ஆர்வத்துடன் வரவேற்று வழிமொழிந்தார்; ஆயினும் அத்தீர்மானம் தோல்வியுற்றது.[41] பூங்காக்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு டாக்டர். குக் (Dr. Cook) என்பவரிடம் உள்ளது. அது அடுத்த ஆண்டிற்கும் நீட்டிக்கப்பட வேண்டும் என்று கோரிய பொழுது தியாகராயர், அதனை வழி மொழிந்து, "முன்பு எப்பொழுதும் இருந்ததை விடப்

பூங்காக்கள் தற்பொழுது டாக்டர். குக் அவர்களின் மேற்பார்வையில் சிறப் பாகக் காணப்படுகின்றன"[42] என்று கூறி மனமாரப் பாராட்டினார். நலம் கண்ட விடத்து அதற்குரியவர் யாராயினும், அவர்களை உளங்கனிந்து பாராட்டும் அவரது பண்பு போற்றுதற்குரியது. மேலும், இவரது முயற்சியால் 'மக்கள் பூங்கா'வில் தீக்கோழிக்கு (Ostrich) வேலியுடன் கூடிய ஒரு கொட்டகையும், இராபின்சன் பூங்காவில் நீர்த்தேக்கத் தொட்டி (Reservoir) ஒன்றும் கட்டப் பெற்றன.[43] "மக்கள் பூங்காவைச் சீர்படுத்துவதற்குப் பாதித்தொகை செலவிட் டால் போதுமானது. 'மக்கள் பூங்கா'விலுள்ள விலங்குக் காட்சி சாலையில் ஆர்வத்தையூட்டக்கூடிய விலங்குகளே இல்லை. ஆகையால், புதிய விலங்கு களை வாங்குவதற்குப் பாதித் தொகை செலவிடலாம்"[44] என்று கூறினார். காட்டு விலங்குக் காட்சி சாலையையும் (Menogeria) பூங்காவையும் ஒரு வரே மேற்பார்ப்பது இயலாது என்ற நகராட்சி நிலைக் குழு (Standing Committee)வின் கருத்தை ஆதரித்துத் தியாகராயர், "அங்குத் தேவைப்படு வது உடலுழைப்பு அன்று; மேற்பார்வையாளர் தான். எனவே, ரூபாய் முப்பத் தைந்து கொடுத்துப் பணியாட்களை நியமிக்க வேண்டியதில்லை. பூங்காவைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுவதற்கு, அங்குப் பரப்பி வைக்கப்பட் டிருக்கும் குழாய்களை அப்புறப்படுத்த வேண்டும். இதைப்பற்றி முன்னரே கொலோனல் ஃபார்லேயும் (Colonel Farley) கூறியுள்ளார். அந்த இடத்தில் பாம்புகள் மிகுதியாக உள்ளன"[45] என்று கூறி விரைவில் நடவடிக்கை எடுக்கத் தூண்டினார். சுகாதாரக் குறைவுள்ள கடை வீதிப் பகுதியைப் பூங்காவாக மாற்றக் கோரினார். "அந்த இடம் ஓர் அறக்கட்டளையைச் சார்ந்தது. அதை நீங்கள் எடுத்துக் கொண்டீர்கள். ஓராண்டாக அந்நிலத்தைப் பயன்படுத்தாமல் வைத்துள்ளீர்கள். இப்பொழுது அதை விற்க நினைப்பது தவறு. நமக்கு வேண்டாமென்றால் உரிமையாளர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுவது தான் சிறந்தது. அது பூங்கா அமைப்பதற்கென்று எடுத்துக் கொள்ளப்பட்ட நிலம். எனவே, உங்கள் கொள்கை தவறானது. இதை நான் மிகவும் வன்மை யாகக் கண்டிக்கிறேன். அந்த இடத்தில் பூங்கா கட்டாயம் அமைக்கப்பட வேண்டும்"[46] என்று ஆங்கிலேயத் தலைவரை எதிர்த்துத் துணிவோடு கூறினார். இக்கூற்று அவரது அஞ்சாமையை உணர்த்துவதோடு பூங்காக்கள் அமைப்பதில் அவருக்குள்ள ஆர்வத்திற்கும் சிறந்த சான்றாகிறது. பெண்களுக் கென்று சில பூங்காக்கள் அமைக்கப்பட வேண்டுமென்று கூறி, 9,10 கோட்டங் களுக்கிடையிலுள்ள 'பேரக்ஸ் மெய்டன்' என்னும் இடம் மிகவும் பொருத்த மானது என்று வழியும் காட்டினார். இது செயல்படுத்த முடிவு செய்யப் பெற்றது.[47]

நேப்பியர் பூங்காவிலிருந்து கழிவுநீரை வெளியேற்றும் திட்டத்தைப் பரிசீலிப்பதற்கு ஒரு குழு அமைக்க வேண்டுமென்று ஒரு தீர்மானத்தைக்

கொண்டு வந்தார்.[48] இவரது முயற்சியால் 'மக்கள் பூங்கா' மிகவும் சீர்படுத்தப் பட்டுச் சென்னையில் மலர்களும், இலைத் தொகுதிகளும், பெரணிகளும் கொண்ட ஒரு கண்காட்சி 27.2.1920இல் முதல் முறையாக நடத்தப் பெற்றது. சென்னையிலுள்ள பல பூங்காக்களிலிருந்து இவைகள் கொண்டு வரப்பட்டு வைக்கப் பெற்றன. இக்காட்சிக்கு இலவசமாக அனுமதிக்கப் பெற்ற மக்கள் மிகவும் ஆர்வமும் மகிழ்ச்சியுமுற்றனர். ஆளுநரும் அவர் துணைவியாரும் இக் காட்சியைக் கண்டு மிகவும் மகிழ்ந்து பாராட்டினர்.[49]

## 3.1.7. தெருக்கள்

மக்களின் வசதிக்காக அமைக்கப்படும் தெருக்கள் தூய்மையாகவும், போக்குவரத்துக்கு ஏற்றதாகவும் இருக்க வேண்டும் என்பதையும் தியாகராயர் கண்காணித்தார். குறைகளைச் சுட்டிச் சொல்லித் தெருக்களைச் செப்பனிடவும், புதுத் தெருக்களை அமைக்கவும், குறுகலான தெருக்களை அகலப்படுத்தவும் ஆவண செய்தார். நகர மன்றத்தில் அடிக்கடி இதுபற்றிப் பேசி ஆள்வோரின் கவனத்தை இத்துறைக்குத் திருப்பினார். கீழ்க்காணும் கூற்றுக்கள் சிறந்த எடுத் துக் காட்டுக்களாக அமைகின்றன.

தொட்டிச்சாலை கொமரப்ப முதலித் தெருவை இரு புறமும் நீட்டிக்க வேண்டுமென்பதை ஆதரித்து, அது மக்களுக்குப் பயன்படுவதாக இருப்ப தாலும், அங்குச் சுகாதாரமும் சீர்படும் என்பதாலும் தாம் இதனை ஆதரிப்ப தாகக் கூறி, ப்யூரோஸ் (Burose) அவர்கள் முன்னரே இதுபற்றிக் கூறியுள்ள தையும் சுட்டிக்காட்டினார்.[50] தெருக்களைச் செப்பனிடும் முறையில் காணப் படும் குறைகளை அடிக்கடி வருத்தத்தோடு எடுத்துக் கூறி அம்முறைகள் சீர்பட வேண்டுமென்று வற்புறுத்தினார்.[51]

இத்துறையில் தாம் ஆற்றிய பணியின் சிறப்பை எண்ணித்தாமே இறும்பூ தெய்தினார் எனலாம்.

## 3.1.8. அமிழ்தண்டூர்தி வழித்தடங்கள் (Tram Ways)

மக்களின் வசதிக்காக அமிழ் தண்டூர்தி வழித்தடங்கள் எவ்வாறு அமைய வேண்டுமென்பதிலும் தியாகராயர் கருத்தைச் செலுத்தினார். அக்காலத்தில் அமிழ்தண்டூர்தி நடத்தும் நிறுவனர்கள் ஆங்கிலேயர்களாகவே இருந்தனர். இருந்தாலும் அவர்களிடத்துக் குறை கண்டவிடத்து இடித்து உரைக்கவும் தியாகராயர் தயங்கியதில்லை. நகரமன்றக் கூட்டங்களில் இதுபற்றிப் பலமுறை உரையாற்றி தம் கருத்துக்களை அறிவித்தார்.[52] இது பற்றிய முடிவுகளை, நகரமன்ற உறுப்பினர்கள் அனைவரின் கருத்தையும் அறிந்த பின்னரே எடுக்க வேண்டுமென்பதில் உறுதியாக நின்று செயல் படுத்தினார்.[53] அமிழ்தண்டூர்தி

வழித்தடங்களைப் பற்றி ஆயும் குழுவில் உறுப்பினராக இருந்து பல புதிய வழித்தடங்கள் அமைக்க உதவினார்.[54]

### 3.1.9. அங்காடிகள்

அங்காடிகள் கட்டுவது பற்றி நகரமன்றத்தில் கலந்துரையாடும் பொழுது மக்களின் சுகாதாரம், வசதி ஆகியவற்றிற்கு ஏற்புடைய சூழலில் அங்காடி கட்டப்பட வேண்டுமென்று வற்புறுத்தினார். "பொது மக்களுள் பலருக்கும் எழுதி, அவர்களின் கருத்துக்களையும் அறிய வேண்டும்"[55] என்று கூறுவது அவரது பரந்த நோக்கினைக் காட்டுவதாகும். அங்காடி அமைய வேண்டிய இடம் பற்றியும், அதற்காகச் செலவிடப்படும் தொகை பற்றியும், அங்காடியின் அமைப்பு முறை பற்றியும் கூறி நகரமன்றத்தின் பாராட்டுதலைப் பெற்றார். அவர்தம் கருத்துக்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டுச் செயல்படுத்தப் பெற்றன.[56] புது அங்காடி பற்றிய தியாகராயரின் கருத்துக்களைச் சுதேசமித்திரனும் அவ் வப்பொழுது விரிவாக வெளியிட்டுள்ளது.[57] மூர் அங்காடியை விரிவுபடுத்தி, மேல் மாடி கட்டப்பட வேண்டுமென்றும், அங்கு காய்கறிகளும் பழங்களும் விற்கப்பட்டால் சுகாதாரத்துடன் இருக்கும் என்றும் எடுத்துக் காட்டினார்.[58] தற்காலத்தில் காணப்படும் சிறப்பங்காடி (Departmental Stores) போன்று அங்காடி அமைய வேண்டுமென்றும், மக்கள் தங்களுக்குத் தேவையான எல் லாப் பொருள்களையும் ஒரே இடத்தில் ஒருங்கே பெறக் கூடிய வாய்ப்பைப் பெற வேண்டும் என்றும் கருத்துத் தெரிவித்தார். இக்கருத்து அவரது பரந்த உள்ளத்திற்கும், மக்கள் நலத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டிற்கும் சிறந்த சான்றாகும்.

### 3.1.10. கூவம் சீரமைப்பு

கூவம் ஆற்றின் சீர்கேடான நிலையினால் சென்னை வாழ் மக்களின் உடல் நலம் மிகவும் பாதிக்கப்படுகிறது என்பதை உணர்ந்த தியாகராயர், கூவம் சீரமைப்புத் திட்டத்தை அரசு மேற்கொள்ள வேண்டுமென்று வற்புறுத் தினார். நகரமன்றத்தின் மூலம் பல தீர்மானங்களை நிறைவேற்றி அரசுக்கு அனுப்பினர். இப்பணியைத் தமது தலையாய பணியாகக் கருதினார் என்ப தற்கு, "அரசு கூவத்தைச் சீர்படுத்த வேண்டும்; அல்லது மூடிவிட வேண்டும். மூடுவதனால் ஏற்படும் விளைவுகளும் தெரியும். ஆனால் அதற்காக வாளா விருக்க இயலுமா ? எனவே, கூவம் திட்டத்தை அரசு உடனே மேற்கொள்ள வேண்டும்"[59] என்ற அவரது உரையே சான்றாகும்.

1923ஆம் ஆண்டு தாம் பதவியிலிருந்து விலகுவதற்கு முதல் நாள் ஆளு நரைச் சந்தித்துக் கூவம் சீரமைப்புத் திட்டத்தை ஏற்க அரசை வற்புறுத்தினார். அரசும் ஏற்றுக்கொண்டது. இச்செய்தியைத் தாமே தமது உரையில் கூறி,

மகிழ்வையும் தெரிவித்துக் கொண்டார். இனிக் கூவம் சீர்படும் என்று தமது ஆழ்ந்த நம்பிக்கையையும் மன்றத்திற்கு அறிவித்தார்.[60] ஆனால் அவரது கனவு நனவாகவில்லை. எனவே, தமது மறைவுக்கு முதல் நாள், அதாவது 27.4.1925 அன்று தம்மைக்காண வந்த ஆளுநரிடம் தமது இறுதிக் கோரிக்கை யாகக் கூவம் சீரமைப்புத் திட்டத்தை நிறைவேற்றுமாறு கேட்டுக்கொண்டார்.[61] கூவம் சீர்படும்போது அவ்வாற்றிற்குத் தியாகராயரின் நினைவாகத் 'தியாக ராயர் ஆறு' என்றே பெயரிட வேண்டுமென்று நகரமன்ற உறுப்பினர்கள் ஒருமனதாகத் தீர்மானம் நிறைவேற்றியது அறியத் தக்கது.[62]

### 3.1.11. வரிவிதித்தல்

நகரமன்ற உறுப்பினர் என்ற முறையில் தியாகராயர் வரிவிதித்தல், வரி வசூலித்தல் ஆகியவற்றில் காணப்படும் குறைபாடுகளை நீக்கி, மக்கள் வாழ்வு வளம் பெறப் பெருமுயற்சி செய்தார். தங்கள் கோட்டத்தில் காணப்படும் குறை பாடுகளை எடுத்துக்கூறி அவற்றை நீக்க எளிய வழிமுறைகளையும் எடுத் துரைத்தார்.[63] நகரமன்றம் தம்மால் இயன்ற அளவுக்கு எல்லா வரிகளும் விதித்துள்ளது; ஆனால், வரி செலுத்தும் மக்கள் அதற்கான பயனை அடைய வில்லை என்பதைச் சுட்டிக்காட்டினார்.[64] தியாகராயரின் இச்செய்தி முழுவதை யும் 'சுதேசமித்திரன்' வெளியிட்டு மக்கள் உணருமாறு செய்தது.[65] வரிகொடுக் கும் மக்களுக்கு நல்ல குடிதண்ணீர் வழங்குதல், முறையான துவைக்குமிடங் கள் அமைத்துக் கொடுத்தல், கொழும்பில் உள்ளது போன்ற நீராவிச் சலவை வசதி செய்து கொடுத்தல் ஆகிய பல திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டு மென்று கூறி வரிசெலுத்தும் மக்களின் சார்பாக அரசை எதிர்த்து உரிமைக் குரல் எழுப்பினார். இவையனைத்தும் செய்யப்படாத நிலையில் மேலும் மக்களிடம் வரிகேட்பது சரியல்லவென்றும் அரசை இடித்துரைத்தார்.[66]

### 3.1.12. மக்கள் நலம்

மக்கள் நலத்திற்கு இடையூறு நேருகின்ற முறையிலும், இந்திய மக்களின் மரபு, பழக்க வழக்கங்களுக்கு எதிரான முறையிலும் தீர்மானங்கள் கொண்டு வரும்போது அவற்றை உறுதியாக நின்று எதிர்ப்பதுடன், ஆங்கிலேய அலு வலர்களுக்கு இந்தியரின் பழக்க வழக்கங்களை விளக்கமாக எடுத்துக் கூறி னார் தியாகராயர். மக்கள் நலன் ஒன்றே அவரது உள்ளத்தில் ஊறி நின்ற கொள்கை என்பதை அவர் அடுத்தடுத்து நகர மன்றத்தில் ஆற்றிய உரைகள் உறுதிப்படுத்துகின்றன.

குழந்தைகளுக்கு அம்மை குத்தப்பட்டுள்ளதா என்பதை அலுவலர்கள் வீடு தோறும் சென்று கவனிக்க ஏற்பாடு செய்தார்.[67] விக்டோரியா பேரரசி யின் ஐம்பதாவது ஆண்டு விழாவையொட்டி நடைபெற்ற பொருட்காட்சி,

குழந்தைகளின் கல்விக்கு இடையூறு நேரா வண்ணம் குறைந்த நாட்களே நடத்தப்பட வேண்டுமென்று வலியுறுத்தினார்.[68]

மக்கள் நலனுக்கு இடையூறு ஏற்படும் முறையில் அமையவிருந்த ஒரு நில விற்பனையைத் தியாகராயர் தடுத்து நிறுத்தினார்.[69] ஆவடி, அம்பத்தூர் கல்லுடைக்குமிடங்களிலிருந்து எடுக்கப்படும் கற்களின் விலையைச் சற்று உயர்த்தக் கோரினார்.[70] வண்டிகளுக்கு அனுமதிச் சீட்டுக்கள் பெறப்பட்டு உள்ளனவா என்பதைப் பாகுபாடின்றிச் சோதித்தறிய வேண்டுமென்று ஒரு தீர்மான ் கொண்டு வந்தார். ஆனால், அத்தீர்மானம் தோல்வியுற்றது.[71]

எருக்கஞ்சேரித் தெருவைப் பேசின் பிரிட்ஜிலிருந்து நகர மன்ற எல்லைக் குட்பட்டதாக்கும் செயல், மிகவும் தாமதப்படுவதைக் குறித்தும், சில இடங் களில் தெருக்களில் ஓரங்களில் சரளைக் கற்களைக் குவித்துப் போக்குவரத் துக்கு இடையூறு உண்டாக்குவதைக் குறித்தும் பல வினாக்களை எழுப்பி, ஆங்கிலேய அலுவலர்களை விரைவில் செயலாற்றத் தூண்டினார்.[72]

எலும்புக் கிடங்குகள், கல்லெண்ணெய்க் கிடங்குகள் மக்களின் சுகாதாரத் திற்குக் கேடு சூழும் நிலையில் அமைந்திருப்பதைச் சுட்டிக்காட்டி அவற்றை வேறிடங்களுக்கு மாற்றச் செய்தார்.[73] இறந்தவர்களைப் பற்றிய அறிவிப்பை உடனே நகர மன்றத்திற்கு அறிவிக்க வேண்டும் என்று கூறிய பொழுது, அதனால் மக்கள் அடையும் இன்னலை எடுத்து விளக்கி, இறந்தவர் பற்றிய அறிவிப்பை நாற்பத்தெட்டு மணி நேரத்திற்குள் அறிவிக்கலாம் என்று புதிய ஆணை பிறப்பிக்கச் செய்தார்.[74]

அமிழ்தண்டூர்திகள் (Tram carts) குறுக்கிடுமிடங்களில் மணியடிப்பவர் ஒருவர் இருக்க வேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்து அதைச் செயல்படுத்தச் செய்தார்.[75] நகரமன்ற நடவடிக்கைகளை நாட்டு மொழிகளில் அச்சிட்டு மக்களுக்கு வழங்கக் கோரித் தீர்மானம் கொண்டு வந்தார். ஆன ால், அத்தீர்மானம் தோல்வியுற்றது.[76] இராயபுரத்திலும், தண்டையார்ப் பேட்டை யிலும் பாட்டையும், இரும்புப் பாதையும் ஒரே மட்டத்தில் குறுக்கிடுமிடங் களில் (Level crossing) முறையாகச் செயல்படுவதில்லை. நிர்வாக அலு வலர்கள் இதை வற்புறுத்திச் சொல்ல வேண்டும் என்பதைக் கூறி ஆங்கிலேய அலுவலர்களின் அலட்சியப் போக்கைக் கண்டித்தார்.[77]

அரிசி, மிளகாய், விளக்கெண்ணெய் போன்றவை அதிக விலைக்கு விற்கப்படுவதை எடுத்துக்காட்டி நகரமன்றக் கிடங்குகளில் இப் பொருள்களை மிகுதியாக வாங்கிச் சேமித்து வைக்க வேண்டும். அதற்காக மாவட்ட ஆட்சி யாளருக்குக் கடிதம் எழுதுமாறு நகரமன்றத் தலைவரைத் தூண்டினார்.

தலைவரும் அதனை ஏற்றுச் செயல்படுத்தினார்.[78] நகரமன்ற எழுத்தர்கள், ஊழியர்களின் ஊதியங்களை உயர்த்த வழி வகுத்தார்.[79]

குழந்தைகளின் பிறப்பைப் பெயருடன் பதிவு செய்ய வேண்டுமென்று கூறிய பொழுது, இந்திய மக்களின் பழக்க வழக்கங்களை ஆங்கிலேய அலுவலர்களுக்கு எடுத்துக் கூறி, ஓராண்டிற்குள் பெயர் பதிவு செய்யலாம் என்று ஆணையிடச் செய்தார்.[80] இடுகாட்டில் பிணம் எரிக்கும் மேடைத் தளம் அமைத்தல், நீச்சல் குளம் அமைத்தல், அதற்கான சட்டதிட்டங்களை வகுத்தல், ஒரே அறையுள்ள சிறு வீடுகளைத் தவணை முறையில் ஏழைகளுக்குக் கட்டிக் கொடுத்தல்[81] ஆகிய பல திட்டங்களைச் செயல்படுத்தி மக்கள் வாழ்வை வளப்படுத்தினார்.

### 3.1.13. அரசு உதவி பெறுதல்

மக்கள் நலத்திற்காக வகுக்கப்படும் திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு அரசின் பொருளுதவி மிகவும் தேவையானதொன்றாகும். இதனை உணர்ந்த தியாகராயர் அரசிடமிருந்து நிதியுதவி பெறுவதிலும், கடன் தொகைகளைப் பெறுவதிலும் கண்ணுங்கருத்துமாக இருந்தார். புதிதாக நகரமன்றக் கட்டடம் கட்டுதல்,[82] கறுப்பு நகரத்தில் சாக்கடைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக மக்களிடமிருந்து கடன் பெறுதல்[83] ஆகியவற்றிற்கும், பிற திட்டங்களுக்கும் அரசு உதவி இன்றியமையாதது என்று கூறி, அரசுக்கு அதன் பொறுப்பு உணர்வைச் சுட்டிக்காட்டினார். நகர விரிவாக்கத் திட்டத்திற்கு அரசு பாதித் தொகை கொடுக்க வேண்டுமென்று அரசை வற்புறுத்தினார்.[84] இதுபற்றிச் சட்ட மன்றத்திலும் விரிவான உரை நிகழ்த்தி அரசு உதவி பெற வழி வகுத்தார்.[85]

நகரச்சீர்திருத்தத் திட்டங்களுக்காகப் பொது மக்களிடமிருந்து ஐந்தரை இலட்சம் ரூபாய் கடன் பெறத் திட்டமிடப்பட்டது. அதில் ரூபாய் ஐம்பதினாயிரம் வீட்டு வரியை உயர்த்துவதன் மூலம் பெறலாம் என்று கருதப்பட்டது. ஆனால், 1923ஆம் ஆண்டு வீடுகளின் மதிப்பும், வாடகைகளும் மிகவும் குறைந்து விட்டதால், பொது மக்களிடமிருந்து பணம் பெறுதல் இயலாது என்பதைச் சுட்டிக்காட்டி, அரசின் கடமையை வலியுறுத்தினார்.[86] ஆளுநர் வெல்லிங்டனை அழைத்துச் சென்று புரசை, சூளைப் பகுதிகளைக் காட்டி நகர மன்றத் திட்டங்களை ஏற்றுக் கொள்ளச் செய்தார். எனவே, தமக்குப் பின் பதவியேற்கப் போகும் தலைவர் இவற்றைச் செயல்படுத்த வேண்டுமென்று வற்புறுத்திக் கூறினார். அத்திட்டத்தில் நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த மக்களுக்கு வீட்டுவசதி செய்துகொடுத்தல் வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.[87]

குழந்தைகளுக்குப் பால் வழங்குவதற்காக அரசிடமிருந்து கிண்டியில் இடம் பெற்றுப் பால்பண்ணை அமைக்க வழிகோலினார்.[88] இந்நிகழ்ச்சிகள்

அவர் மக்கள் நலத்திற்காக அரசிடமிருந்து உதவி பெறுவதில் கொண்டிருந்த நாட்டத்தையும், ஈடுபாட்டையும் விளக்குகின்றன எனலாம்.

### 3.1.14. நகர விரிவாக்கத் திட்டமும், அழகும்

நகர விரிவாக்கத்திற்கும், நகரை அழகுபடுத்துவதற்கும் பல திட்டங்களை வகுத்துக் கொடுத்தார். ஏழைகளுக்கு வீடுகள் கட்டிக் கொடுத்தல்,[89] சூளைப் பகுதியைச் சீர்படுத்துதல்,[90] மாம்பலத்தை விரிவு படுத்துதல்[91] ஆகிய திட்டங்கள் தியாகராயரின் முயற்சியால் செயல்படுத்தப் பெற்றன. ஆனால், மாம்பலம் திட்டம் நிறைவேறுவதற்கு முன் தியாகராயர் மறைந்து விட்டார். எனவே, அத்திட்டம் நிறைவேறும் போது அப்பகுதிக்குத் 'தியாகராய நகர்' என்று பெயரிட வேண்டும் என்னும் தீர்மானம் நகரமன்றத்தில் ஒரு மனதாக நிறைவேற்றப் பெற்றது.[92] பின்னர் மாம்பலம் திட்டம் நிறைவேறியவுடன் அப்பகுதிக்குத் 'தியாகராய நகர்' என்றும், அப்பகுதியிலுள்ள ஒரு சாலைக்குத் தியாகராயர் சாலை என்றும் பெயர்கள் சூட்டப் பெற்றன. இப்பெயர் தியாகராயர் சென்னை நகரை விரிவுபடுத்த எடுத்துக் கொண்ட முயற்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக நிலவுகிறது. நகரின் விரிவாக்கத்துடன் அதன் அழகு பாதுகாக்கப்பட வேண்டுமென்பதிலும் தியாகராயர் முனைந்து நின்றார். மெரினா கடற்கரையில் இருப்புப் பாதையின் மடிகிளை (Loop line) அமைக்க வேண்டுமென்று கூறிய பொழுது, உலகிலேயே அழகிய நீண்ட கடற்கரையாக உள்ள மெரினா கடற்கரையின் அழகைக் கெடுப்பதாக அச்செயல் அமையக் கூடாது என்று வலியுறுத்தினார்.[93]

மக்கள் பூங்காவைத் தென்னிந்திய விளையாட்டுக் கழகத்தினர் பயன்படுத்துவது பற்றிக் கூறும் போது, 'தட்டி வைத்து மறைத்து அழகைக் கெடுக்காமல்' இருந்தால் அவர்களுக்கு அனுமதியளிக்கலாம் என்று கூறியது குறிப்பிடத்தக்கது.[94] நகரமன்றத்தில் தியாகராயர் ஆற்றிய பணிகளைக் குறிப்பிட்டு ஜி. வாசுதேவபிள்ளை, "அவர் இந்நகர மன்றத்தில் மிக அதிகமாகப் பணியாற்றியுள்ளார். அவருடைய முயற்சியினால் தான் ஏழைக் குழந்தைகளுக்குப் பள்ளிகள் தொடங்கப்பெற்றன. இலவசக்கல்வி கொடுக்கப் பெற்றது. ஏழை மக்களுக்காக எண்ணற்ற மருத்துவ மனைகள் திறக்கப் பெற்றன. தெருக்கள் சீர்படுத்தப் பெற்றன. குழந்தைகளுக்காகவும், பொது மக்களுக்காகவும் பூங்காக்கள் ஏற்படுத்தப் பெற்றன"[95] என்று கூறிப் பாராட்டினார். இக்கூற்று தியாகராயர் நகர மன்ற உறுப்பினராகவும், தலைவராகவும் இருந்து நகர முன்னேற்றத்திற்கான அனைத்துத் துறைகளிலும் கவனம் செலுத்தி உழைத்தார் என்பதை மெய்ப்பிக்கிறது. இங்ஙனம் பல்துறைச் சீர்திருத்தங்களுக்கும் வழிவகுத்த தியாகராயர், தாம் வசிக்கும் பகுதி மட்டுமின்றிச் சென்னை நகரம் முழுவதும் சீரான

முன்னேற்றம் பெற வேண்டுமென்று கருதினார். நகர மன்றத்தில் அதற்காகப் பல முறை பேசி, ஆங்கில அலுவலர்களிடையேயும், பிற உறுப்பினர்களிடை யேயும் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார்.

விக்டோரியா மருத்துவ மனைக்கு உதவி வழங்குவது பற்றிக் கூறும் போது, "அதற்கு உதவி பெறத் தகுதியுள்ளது. இம்மருத்துவ மனைக்கு உதவி யளிப்பதால், மற்ற எல்லா மருத்துவ மனைகளுக்கும் கொடுக்க வேண்டி வரும் என்றால், அவை அதற்கேற்ற தகுதி படைத்திருந்தால் கொடுக்க வேண்டியது தானே "[96] என்று கூறினார்.

மைலாப்பூரில் கட்டப்பட்ட புது அங்காடியில், முன் அனுமதி பெறாமல் கடைகள் கட்டிக் கொண்டவர்களை விசாரிக்கும் பொழுது சட்டத்தின் படியும், மனிதனுக்கு மனிதன் எந்த வேறுபாடும் காட்டாமலும் நீதி வழங்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.[97]

நகரத்தை விரிவு படுத்துவதற்காக அமைக்கப்படும் குழுவில் எல்லாத் தரத்தினரும் உறுப்பினர்களாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்.[98] அனைவரையும் சமமாகக் கருதும் அவரது மனப் போக்கிற்கும், குழுவில் தாமும் தம்மைச் சார்ந்தவர்களும் இருந்தால் போதும் என்று கருதாத மனப் பாங்கிற்கும் இது சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும். அதேநேரத்தில் நகரின் ஒரு பகுதி மட்டும் மேலும் மேலும் முன்னேற்றமுற, மற்ற பகுதிகள் இருந்த நிலை யிலேயே இருப்பதையும் அவர் உள்ளம் ஏற்றது கிடையாது. மைலாப்பூரில் ஒரு புது மருத்துவமனை ஏற்படுத்தக் கோரிய பொழுது, தியாகராயர், "மற்ற பகுதிகளில் ஒன்றுமில்லாது இருக்கும் போது மைலாப்பூரில் இப்பொழுது இரண்டு மருத்துவமனைகளுக்குப் பணம் கொடுத்து வருகிறோம். மேலும் ஒன்று கேட்பது சரியல்ல"[99] என்று கண்டித்துக் கூறினார். தெருக்களை அகலப் படுத்தும் போதும் செல்வர்கள் வாழும் பகுதிகளில் மட்டும் வசதிகளைப் பெருக்குவது தவறான கொள்கை என்று கூறி நகரின் பல பகுதிகள் எவ்வெவ் வாறு வசதிக் குறைவாய் உள்ளன என்பதை எடுத்துக்காட்டுக்களுடனும், புள்ளி விவரங்களுடனும் விளக்கினார்.[100] அதேபோன்று குளிப்பிடங்கள் அமைத்தல்,[101] மேம்பாலம் கட்டுதல்[102] ஆகியவற்றைப் பற்றிக் கலந்துரையாடும் பொழுது, "நகர மன்ற உறுப்பினர்களாகிய நாம் நகரின் ஒரு பகுதிக்கு மட்டும் உரியவர் களல்லர்; ஒரு வகுப்பைச் சார்ந்த மக்களுக்குரியவர்களுமல்லர்; நாம் நகரத் தின் பொது வளர்ச்சிக்கே பாடுபட வேண்டும்"[103] என்று வலியுறுத்தினார்.

### 3.1.15. பொதுத் தொண்டில் நேர்மை

பொதுத்தொண்டு செய்பவர்களும், பொதுநிதியைக் கையாளும் அரசியல் வாதிகளும், அரசு அலுவலர்களும் நேர்மையைக் கடைப்பிடிக்க வேண்டு

மென்பதில் தியாகராயர் மிகவும் பிடிவாதமாக இருந்தார். நகர மன்றத்தில் மக்களின் வரிப் பணத்தைச் செலவு செய்யும் அலுவலர்கள் தவறிழைத்த பொழுது அஞ்சாது இடித்துரைத்து மக்களிடையே ஒரு விழிப்புணர்வை உண்டாக்கினார். பொது நிதியிலிருந்து செலவு செய்யும் போது அது தேவை யானதுதானா, அதனால் மக்கள் நன்மை பெறுவார்களா என்பதை நன்கு எண்ணிப் பார்த்த பிறகே அச்செலவை அனுமதித்தார். ஆங்கிலேயப் பொறி யியலாளர் ஜோன்ஸ், குசப்பேட்டையில் ஒரு பாலம் கட்டுவதில் தாமதம் செய்தபோதும், சாக்கடைத் திட்டத்திற்கு அதிகமான தொகை எதிர்பார்த்த போதும் தியாகராயர் குறுக்கிட்டுப் பல விளக்கங்களைப் பெற்றார்.[104] பணப் பற்றுகையும் பிரித்துக் கொடுத்தலும் (Receipts and Disbursement) பற்றி உரையாடும் போதும்[105] செங்குன்றத்தில் ஆங்கில அலுவலர் தங்கிய மாளிகை யைப் பழுதுபார்க்கப் பணம் கோரிய போதும்[106] தக்க விளக்கங்கள் கோரிப் பெற்றார். கோட்டையில் இராணுவத்தினர் தங்கும் பிரிவில் தெருக்களின் சீரமைப்பிற்கு அரசுதான் நிதி வழங்க வேண்டுமென்று தீர்மானம் கொண்டு வந்தார்.[107] விளையாட்டுக் குழுவினர் தங்கள் பயிற்சிக்கு அளிக்கப்பட்ட நிலத்தை வேறு செயல்களுக்குப் பயன்படுத்தும் முறைகேட்டை மன்றத்தில் எடுத்துக் கூறினார். மேலும், சந்தைகள் நடத்துதல், வாரன்ஸ் சர்க்கஸ் குழு வினருக்கு இடமளித்தல் போன்ற செயல்களில் அவர்கள் ஈடுபட்டுப் பொரு ளீட்டுவதால், அந்தத் தொகையை நகரமன்றத்திற்கு அளித்துவிட வேண்டு மென்று ஒரு தீர்மானமும் கொண்டு வந்தார்.[108]

இங்ஙனம் சென்னை நகரின் வளர்ச்சிக்குத் தன்னலமின்றி அனைத்துத் துறைகளிலும் கருத்துச் செலுத்திப் பாடுபட்ட தியாகராயரை மாநகராட்சி மன்றம், 1931ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 31ஆம் நாள், அம்மன்றத்தின் முன்புறம் அவரது முழுவுருவச் சிலையை வைத்துப் பெருமைப்படுத்தியது.[109] அத்துடன் திருவொற்றியூர் நெடுஞ்சாலையிலுள்ள பூங்காவிற்குத் தியாகராயரின் பெயரைச் சூட்டி, அங்கு அவரது மார்பளவுச் சிலை ஒன்றையும் நிறுவியது.[110] இவ்விரு சிலைகளும் இன்றும் தியாகராயரின் பணிகளை மக்களுக்கு நினை வூட்டிக் கொண்டுள்ளன.

## 3.2. சென்னை ஆந்திர மகாசபை

இச்சபை சென்னை நகரில் வாழும் தெலுங்கு மொழி பேசும் மக்களால் 1916ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது. ஒரு சிறந்த பண்பாட்டு மையமாக இது செயல்பட்டது. தியாகராயர் இதன் தொடக்ககால முதல் 1921-ஆம் ஆண்டு வரை தலைவராக இருந்து பணியாற்றினார்; படிப்பறை, நூலகம் அமைக்கப் பெற்றன. நம் நாட்டுக்கலை வளர்ச்சியிலும், எழுத்தறிவில்லாத மக்களுக்கு எழுத்தறிவித்தலிலும், உழவர்களுக்கு வேண்டிய அறிவுரைகளை

வழங்குவதிலும் இச்சபை சிறந்த பணியாற்றியுள்ளது.[111] 1921-ஆம் ஆண்டி லிருந்து தியாகராயர் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டதால் குறிப்பிடத்தக்க முறையில் இச்சபையில் பணியாற்ற இயலவில்லை எனலாம்.

## 3.3. உலகப் பொதுப் பற்றாளர் கழகம் (Cosmopolitan Club)

இக்கழகம் சென்னையில் 1873 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 6-ஆம் நாள் தொடங்கப் பெற்றது. ஐரோப்பியர்கள், இந்தியப் பெருங்குடி மக்கள் ஆகியோரை உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது இக்கழகம். ஐரோப் பியர்களும் இந்தியர்களும் சமூக உணர்வுடன் கலந்து பழகுவதற்கு வாய்ப் பளிப்பதும், நல்ல படிப்பறை, நூலகம் அமைத்துக் கொடுப்பதும், பல்வேறு சமுதாயச் சிக்கல்களைப் பற்றிச் சொற்பொழிவுகளும், கலந்துரையாடல்களும் நிகழ்த்தி, இந்தியப் பெருங்குடி மக்களுக்கு விழிப்புணர்வையூட்டுவதும், வெளியூர்களிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் வரும் பெருமக்களுடன் கலந்து பழக வாய்ப்பளிப்பதும் இக்கழகத்தின் நோக்கங்களாகும்.[112] தியாக ராயர் 1908-1920-ஆம் ஆண்டு வரை இக்கழகத்தின் துணைத் தலைவராகவும், 1921-1924 வரை தலைவராகவும் இருந்து பணியாற்றினார். தியாகராயரின் சமு தாயப் பணியால் கவரப்பட்ட இக்கழகத்தினர் 1923 ஆம் ஆண்டு அவரு டைய முழுவுருவப் படத்தை இக்கழகத்தின் நூலகத்தில் திறந்து வைத்தனர்[113]. சமுதாய நலனையே தம் உயிர் மூச்சாகக் கருதிய தியாகராயர் இக்கழகத்தின் உண்மை உறுப்பினர் எனலாம். அவர், தம் வாழ்வையே உலகப் பொதுப் பற்றாளர் (Cosmopolitan) வாழ்வாகக் கொண்டவர் எனல் பொருந்தும்.

## 3.4. மணியக்காரர் சத்திரம்

ஏழை மக்களுக்கு உணவும் உறைவிடமும் மருத்துவ உதவியும் அளிக்க வும், உடல் ஊனமுற்றோருக்குப் பாதுகாப்பளிக்கவும் இச்சத்திரம் 1778ஆம் ஆண்டு நிறுவப் பெற்றது. தியாகராயர் இதன் உறுப்பினராக இருந்தார்.[114] 1884 தொடக்க முதல் 1908 வரை இருபத்து நான்காண்டுகள் இதன் இயக்குநர்களில் ஒருவராகவும், சிறப்புச் செயலாளராகவும் (Honorary Secretary) இருந் தார்.[115] தாம் நகரமன்ற உறுப்பினர் என்ற நிலையில் மணியக்காரர் சத்திரத்திற் கும், அதனைச் சார்ந்த இராமசாமி முதலியார் மகப்பேறு மருத்துவ மனைக் கும் பொருளுதவி செய்வதற்கு ஆவண செய்தார்.[116] ஆளுநரின் துணைவி யாரை அழைத்துச் சென்று மணியக்காரர் சத்திரத்தைப் பார்வையிடச் செய் தார். அவரது மேற்பார்வையில் அச்சத்திரம் ஏழைகளுக்கு மிகவும் பயன்படு வதை உணர்ந்த அவ்வம்மையார் அங்குத் தங்கியிருக்கும் ஏழைகளுக்கு இனிப்பும், உடைகளும் வழங்குவதற்காக ரூபாய் ஐநூற்றை நன்கொடையாக வழங்கினார்.[117] மணியக்காரர் சத்திரத்துடன் இணைத்து ஒரு தமிழ்ப்பள்ளியும்

நடத்தினார். இதனை மாவட்ட ஆட்சியாளர் எல்லிஸ் பொறுப்புடன் கவனித்துக் கொண்டார். அப்பள்ளியில் பன்னிரண்டு மாணவர்கள் பயின்றனர். அவர்களுக்கு மணியக்காரர் சத்திரத்திலிருந்து உணவு அளிக்கப்பெற்றது.[118] சிறப்புச் செயலாளர் என்ற முறையில் தியாகராயர் தனிப்பட்ட செல்வர்களிடமிருந்தும் நன்கொடைகள் பெற்றுத் தந்து சத்திரத்தில் நிர்வாகம் நன்கு நடைபெறச் செய்தார்.[119] இங்ஙனம், தியாகராயர் மணியக்காரர் சத்திரத்தின் செயலராக இருந்து பிணியாளர்க்கும், நலிவுற்றோர்க்கும் அருந்தொண்டாற்றினார்.

## 3.5. சென்னை நிலக்கிழார்கள் கழகம்

மாநிலத்தின் பலபகுதி மக்களின் கருத்துக்களை அறிந்து, அரசுக்கு எடுத்துக் கூறவும், நிலக்கிழார்கள் நிலத்தில் பணியாற்றும் உழவர்கள் ஆகியோர்களுக்கிடையே ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்து வைக்கவும், வேளாண்மைத் துறையில் அரசின் உதவிகளைப் பெறவும் இக்கழகம் நிறுவப் பெற்றது. தியாகராயர் சுமார் பத்தாண்டுகள் இதன் சிறப்புச் செயலாளராக இருந்தார்.[120] நிலக்கிழாராக இருந்தும் ஏழை உழவர்களின் இன்னல் களையப் பாடுபட்டார். சட்டமன்றத்தில் உரையாற்றி, உழவர்களின் இன்னலை எடுத்துக்கூறி, அவர்கள் வரி செலுத்தும் முறையை எளிதாக்கவும், வரியைக் குறைக்கவும் தீர்மானம் கொண்டு வந்ததோடு அத்தீர்மானம் செயல்வடிவிற்கு வரவும் உழைத்தார்.[121] வருவாய்க்குழு அமைப்பு (Board of Revenue) ஒழிக்கப்பட வேண்டுமென்று கூறியபோது, தாமும் ஒரு நிலக்கிழார்தான் என்று கூறி அத்தீர்மானத்தை ஆதரித்தார்.[122] எந்நிலையிலும் தம் கருத்தை அஞ்சாது எடுத்துக் கூறும் தியாகராயரது திண்ணிய நெஞ்சம் இதனால் விளக்கமுறுவதுடன் ஏழை எளிய உழவர்களின் நலனிற்காக முழுமூச்சுடன் செயல்பட்டார் என்பதையும் இதனால் அறியலாம்.

## 3.6. சென்னபுரி ஆயுர்வேதப் பிரச்சாரணி சபை

நாட்டின் ஆங்கில மோகத்தால் ஆங்கில மருத்துவ முறை தான் சிறந்தது என்ற எண்ணம் மக்களிடையே பரவியிருந்தது. இந்திய மருத்துவ முறைகள் நலிவடையத் தொடங்கின. இந்நிலையை மாற்றி இந்திய மருத்துவ முறைகளுக்குப் புத்துயிர் அளிக்கச் சென்னபுரி ஆயுர்வேதப் பிரச்சாரணி சபை தொடங்கப் பெற்றது. இச்சபை ஆயுர்வேத மருத்துவ முறைகளைக் கற்பிக்கும் கல்லூரிகளையும் பள்ளிகளையும் தொடங்கி ஆயுர்வேத முறைகளை மேலோங்கச் செய்தலையும், ஆயுர்வேத மருத்துவமனைகள் அமைப்பதையும் நோக்கமாகக் கொண்டது. தியாகராயர் இச்சபையின் இயக்குநர் குழுவில் ஒருவராக இருந்து இந்திய மருத்துவத்துறையின் முன்னேற்றத்திற்காக உழைத்தார்.[123] கூடியவரை இந்தியப் பொருட்களையே பயன்படுத்தும் தியாகராயர்,

இந்திய மூலிகைகளால் செய்யப்பெற்ற பல மருந்துகளைத் தம் இல்லத்தில் வைத்துக்கொண்டு, தம்மிடம் வருபவர்களுக்கு இலவசமாக வழங்கி வந்தார்.[124] தமது இறுதிக் காலத்தில் தம் உயிருக்கே உலை வைத்த இராசபிளவைக்குக் கூட ஆங்கில மருத்துவத்தை மேற்கொள்ளாது, இந்திய மருத்துவத்தையே இவர் மேற்கொண்டது குறிப்பிடத்தக்கது.[125] நகராட்சி மன்றத்தில் மூன்று மருத்துவ மனைகள் அமைக்கத் தீர்மானம் கொண்டு வந்தபோது அவற்றுள் ஒன்று ஆயுர்வேதமாகவும், இன்னொன்று யுனானியாகவும் மற்றொன்று ஆங்கில மருத்துவமனையாகவும் இருக்க வேண்டுமென்றார் தியாகராயர். ஆனால், அத் தீர்மானம் தோல்வியுற்றது.[126]

சட்டமன்றத்தில் உரையாற்றிச் சித்தமருத்துவக் கல்லூரி தோன்றுவதற்கு வழி வகுத்தார்.[127] இக்கல்லூரியும் மருத்துவமனையும் நடத்துவதற்குத் தியாகராயரின் தோழரும், முதலமைச்சருமாகிய பனகல் அரசர் தமது வளமனையையே நன்கொடையாக அளித்தார்.[128] அவ்விடத்தில் தற்பொழுது கீழ்ப்பாக்கம் மருத்துவமனை அமைந்துள்ளது. தியாகராயர் மருத்துவக்குல மாநாட்டிற்குத் தலைமை தாங்கி அரியதொரு சொற்பொழிவாற்றினார்.[129] அம்மாநாட்டில் அவருக்கு வாசித்தளித்த வாழ்த்துரை தியாகராயர் சித்தமருத்துவத்தின் பால் கொண்டிருந்த ஈடுபாட்டை நன்கு விளக்குவதாக அமைந்துள்ளது.[130] (வாழ்த்துரை பின்னிணைப்பில் இணைக்கப் பெற்றுள்ளது).

## 3.7. சென்னை ஆரியன் கிளப்

வண்ணாரப்பேட்டைப் பகுதி மக்கள் தங்களுக்கேற்ற சிறந்த பொழுது போக்கையும், உடலுரத்தையும் பெறவேண்டுமென்னும் நோக்கத்துடன் தியாகராயர் 1898ஆம் ஆண்டு இக்கழகத்தைத் தோற்றுவித்தார். இக்கழகம் பல்வகை விளையாட்டுக்களையும் உடற்பயிற்சிகளையும் அளித்து அப்பகுதி வாழ் மக்களின் சமுதாய, உடல்நல, மனநல, அறிவு வளர்ச்சியைத் தூண்டியது.[131] தியாகராயரும், அவர் தமையனாரும் இக்கழகத்தின் புரவலர்களாக இருந்து பணியாற்றினர். இக்கழகத்திற்கான இலச்சினையைத் தியாகராயரே வரைந்து கொடுத்தார். பூப்பந்தில் (Badminton) வெற்றி பெறுவோருக்குப் பரிசளிக்கவும் ஏற்பாடு செய்தார்.[132] மேலும், அங்கு ஒரு படிப்பறையும் நூலகமும் அமைத்துத் தியாகராயர் அதன் புரவலராக இருந்து, மக்களின் அறிவு வளர்ச்சிக்கு அடிகோலினார்.[133]

## 3.8. மதுவிலக்கு

மதுவருந்தும் பழக்கத்தால் நம் நாட்டு மக்கள் குறிப்பாக நெசவாளர்களும், தொழிலாளர்களும் அடையும் இன்னல்களைக் கண்ட தியாகராயர் மதுவொழிப்பிற்காக அருந்தொண்டாற்றினார். காந்தியடிகளின் மதுவிலக்குப்

போராட்டத்தில் நேரடியாகக் கலந்து கொள்ளாவிடினும், அதனை உளமார ஆதரித்தார். 1922ஆம் ஆண்டு இவரது தலைமையில் நகரமன்றத்திற்குச் சொந்தமான மரங்களைக் கள் எடுப்பதற்குக் குத்தகைக்கு விடுவதில்லை என்ற தீர்மானம் நிறைவேற்றப் பெற்றுச் செயல்படுத்தப்பெற்றது.[134] மக்களுக்குத் தீமை பயக்கக்கூடிய இடத்தில் அமைந்திருந்த கள்ளுக்கடையை (எண்.198 நுங்கம்பாக்கம்) வேறிடத்திற்கு மாற்றவேண்டும்; இன்றேல் மூடிவிட வேண்டு மென்று வரிவிதிப்புக் குழுவிற்குப் (Excise Licensing Board) பரிந்துரை செய்யப்பெற்றது.[135]

விளையாட்டுக் குழுவினருக்கு இடமளிப்பது பற்றிக் கூறும்போது 'மது குடிப்பதில்லை' என்ற கட்டுப்பாட்டு விதியுடன் இடமளிக்க வேண்டுமென்று பிற உறுப்பினர்கள் கூறினர். ஆனால், தியாகராயர் அத்தகைய கட்டுப்பாட்டு விதி விதிப்பது அக்கழகத்தின் தரத்தைக் குறைப்பதாகும் என்று கூறி அக் கட்டுப்பாட்டு விதியை விலக்குமாறு கோரினார்.[136] மதுவை வன்மையாக எதிர்த்தாலும், அதைச் செயல்படுத்தும் போது பிறர்மனம் புண்படாத வகை யில் நடந்து கொள்ளும் அவரது பெருந்தகைமைக்கு இந்நிகழ்ச்சி சிறந்த எடுத்துக் காட்டாகும்.

சட்டமன்றத்தில் உரையாற்றுகையில் கலால் வரி, நில வரியில் பாதியாக இருப்பதைச் சுட்டிக்காட்டி, ஏழை மக்கள் மதுவருந்துவதால் வந்த வருமானம் இது என்பதைப் புள்ளி விவரங்களுடன் எடுத்துரைத்தார்.[137] இந்நிலையை மாற்றவும் கோரினார். "மதுவின் அடர்த்தியைப் படிப்படியாகக் குறைத்து வந்தால் மக்களின் உடல்நிலைக்குத் தீங்கு நேராது; மக்கள் தாங்களாகவே மதுப்பழக்கத்தினின்றும் விடுபடுவர்"[138] என்றும் கூறினார். எந்தச் சீர்திருத்த மும் மெல்லமெல்லச் செய்யப்பெற வேண்டும் ஆனால் உறுதியாகச் செய்யப் பெற வேண்டும் என்பது அவருடைய கருத்தாகும். இருப்பினும், அச்சீரிய கருத்துக்கு அக்காலத்தில் ஆதரவு தருவோர் அருகியிருந்தனர் என்பதைக் காண்கிறோம். இங்ஙனம் தியாகராயர், மது, கல்வி, நிதியுதவி போன்ற மக்கள் சமுதாய நலன் பற்றிய சிக்கல்களைப் பற்றிப் பேசியதை 'இந்து' இதழும் பாராட்டி எழுதியுள்ளது.[139] மது பற்றி ஆராய்வதற்காக அரசால் அமைக்கப் பெற்ற குழுவில் தியாகராயரின் பெயர் இடம் பெறாததைக் கண்டித்துச் 'சுதேச மித்திரன்' ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளது.[140] அவ்வறிக்கை அவர் மதுவிலக் கில் கொண்டிருந்த ஈடுபாட்டை நன்கு விளக்குவதை உணரலாம்.

தியாகராயர் சட்டமன்றத்தில் மதுவிலக்குக் குறித்துக் கூறியதை மீண்டும் 'பெசவாடா பிராமணரல்லாதார் மாநாட்டில்' தமது தலைமையுரையில் வற் புறுத்தினார். "இத்திசையில் அரசு செலுத்தும் கவனமும், மக்கள் தாங்களா கவே தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவதும் அவர்களின் வாழ்வை

வளமாக்குவதுடன் செயல் திறமையை வளர்த்துச் செல்வத்தைப் பெருக்கவும், உதவும். தவிர, மக்கள், சமுதாயத்தில் நல்லவர்களாக மதிக்கப்படுவர். குடியினால் உண்டாகும் எல்லாக் கொடுமைகளும் தவிர்க்கப்படுவதுடன் குற்றங்களினின்றும் நீங்கியதாக இந்தியா விளங்கும்"[141] என்று கூறினார். இந்தியநாடு இக்கொடிய பழக்கத்திலிருந்து மீண்டு, செழிப்படைய வேண்டுமென்னும் அவரது ஆவலுக்கு இது தக்க சான்றாகும். குறிப்பாக நெசவாளர்கள் இக்குடிப்பழக்கத்திற்கு ஆளாகிச் சீரழிவதைக் கண்டு மனம் வெதும்பிய தியாகராயர் தாம் மறைவதற்குப் பதினைந்து நாட்களுக்கு முன் நடைபெற்ற தேவாங்கர் மாநாட்டிலும் இதுபற்றிக் குறிப்பிட்டுக் குடிப்பழக்கத்தை ஒழிக்குமாறு வேண்டுகோள் விடுத்தார்.[142]

தியாகராயர் மறைந்த நாளாம் 28.4.1925 அன்று சென்னை உலகப்பொதுப் பற்றாளர் கழகம் (Cosmopolitan Club) இனிமேல் கழகத்தில் மது வகைகளைப் பயன்படுத்துவதில்லை என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது.[143] அவரிடத்து அக்கழகம் வைத்திருந்த மதிப்பையும் பெருமையையும் இதனால் உணர முடிகிறது.

## 3.9. சமுதாயச் சமநிலை

மக்கள் சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரும் சமநிலையில் வாழ வேண்டும் என்பதில் தியாகராயர் ஆழ்ந்த கவனம் செலுத்தினார். எந்தப் பிரிவினருக்கிடையேயும் ஏற்றத் தாழ்வு கிடையாது; அனைவரும் சமம் என்று கருதினார். எனவே தான் அக்காலத்தில் தங்களை உயர்ந்தவர் என்று கருதிய பிராமண சமுதாயத்தை வன்மையாகக் கண்டித்தார். அதற்காகவே பிராமணரல்லாதாரியக்கத்தையும் தோற்றுவித்தார். பிராமணரல்லாத சமுதாயத்தினரிடையே காணப்படும் குறைகளையும் சுட்டிக்காட்டி, அவர்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார். குறிப்பாக அவர்கள் தங்களுக்குள் ஒற்றுமையின்றி இருப்பதை வன்மையாகக் கண்டித்தார். தங்களுக்குள் வழக்கிட்டுக் கொண்டு, பிராமண வழக்கறிஞர்களை நாடிச் செல்லுவதையும், அதனால் அவர்களால் அவர்கள் உறிஞ்சப்படுவதையும் எடுத்துக் கூறி ஒற்றுமையின் இன்றியமையாமையை வற்புறுத்தினார்.[144]

மேலும், பிராமணர்கள் கடவுளின் முகத்திலிருந்து தோன்றியவர்கள்; மற்ற இனத்தார் பிறவுறுப்புக்களினின்றும் தோன்றியவர்கள் என்று கூறப்படும் மனு நூலைக் கண்டித்துத் திராவிடப் பண்பாடு இதற்கு மாறுபட்டது என்பதை விளக்கினார். திருவள்ளுவர், கம்பர், ஔவையார் போன்றோரின் கருத்துக்களை எடுத்துக் கூறி மக்கள் அனைவரும் சமம் என்ற கருத்தை வலியுறுத்தினார்.[145]

மனிதனுக்குப் பஞ்சபூதங்களாகிய நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் ஆகிய ஐந்தும் சம அளவில் தேவைப்படுகின்றன. அவற்றில் எதையும் உயர்ந்த தாகவோ, தாழ்ந்ததாகவோ கருதவியலாது. அது போன்று மக்கள் இனத்திலும் எவ்வித ஏற்றத்தாழ்விற்கும் இடமில்லை. அனைவரும் சமம் என்று கருதினார் தியாகராயர். அவரது எண்ணத்தை, அவர் தம் நண்பரும் சிறந்த பொறியிய லறிஞருமாகிய ப.வெ. மாணிக்க நாயக்கர் கருத்துப்படமாக (Cartoon) வரைந்து வெளியிட்டார்.[146]

"கோயில்களில் எல்லாச் சாதியினரும் குருக்களாக இருக்க வேண்டும். அதற்கான தகுதிகளைப் பிராமணரல்லாதார் வளர்த்துக் கொள்ளவேண்டும். ஆகமப் புரோகிதப் பாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டு, திராவிட பாஷையி லேயே புத்தகங்கள் எழுதிப் பயிற்றுவிக்க வேண்டும்"[147] என்று தமது கருத் தைத் திராவிடனிலும் எழுதி மக்களிடையே சமுதாயச் சமநிலை உணர்வைத் தூண்டினார்.

சமுதாயச் சமநிலை ஏற்பட வேண்டுமாயின், முதலில் சமூக விடுதலை தேவை. அரசியல் விடுதலை அதற்கடுத்தபடிதான் என்பது தியாகராயரின் கோட்பாடு. எனவே, மதுரையில் நடந்த பிராமணரல்லாதார் மாநாட்டில் பல தீர்மானங்களை நிறைவேற்றினார். அத்தீர்மானங்கள், அரசு பெறுகின்ற வரிப் பணம் எல்லாச் சமூகத்தினருக்கும் பயன்படும் வகையில் செலவிடப் பெற வேண்டும்; சமுதாயத்தில் எல்லாச் சாதியினரும் எந்த வேறுபாடுமின்றிச் சமமாக மதிக்கத்தக்க வகையில் கோயில், பள்ளி ஆகிய பொதுவிடங்களில் நிர்வாகம் நடத்தப்பெற வேண்டும் என்னும் நோக்கங்களைக் கொண்டனவாக இருந்தன.[148]

சமுதாயப் பணியையே தியாகராயர் தமது தலையாய பணியாகக் கருதி னார் என்பதற்கு 'இந்து' இதழின் கீழ்க்கண்ட பகுதிகள் தக்க சான்றுகளாகும்.

"அவர் ஒரு பிறவித் தேசியவாதி; அவர் ஏழைகள், தாழ்த்தப்பட்டோரின் சமூக நிலையை உயர்த்துவது என்னும் திட்டமான குறிக்கோளுடன் மக்களி டையே அரசியல் விழிப்புணர்வையும் உண்டாக்க ஒரு கட்சியைத் தொடங் கினார்."[149]

"தியாகராயர் தமது காலத்தில் தலைசிறந்த தலைவராக வாழ்ந்தார். தீண் டாமை, மதுவிலக்கு, தொழிலாளர் இயக்கங்கள் போன்ற பல சிக்கல்களுக்கு அவரது தீர்வுகளைப் படிப்பது சிறப்பாகும்."[150]

முதல் மாநில மாநாட்டில் தியாகராயர் சாதி ஒழிப்புப் பற்றிக் கூறும்போது, தமது நிலையைத் தெளிவாக விளக்கினார். தாமும், தமது இயக்கமும்

பிராமணர்களை வெறுக்கவில்லை என்பதையும், எல்லா வகுப்பினரிடத்தும் கொண்ட அன்பினால் எல்லா வகுப்பினரும் எல்லாத் துறைகளிலும் சம வாய்ப்புப் பெறவேண்டும் என்பதே தமது நோக்கம் என்பதையும் மிகத் தெளிவாக எடுத்துரைத்தார்.[151] தியாகராயரின் இத்தகைய மனப்பாங்கைப் பல்வேறு அறிஞர்களும் பாராட்டியுள்ளனர்.[152] சில ஆசிரியர்கள் தியாக ராயரின் தலைமையில் சமூகச் சீர்திருத்தம் மழுங்கடிக்கப்பட்டது என்று கரு தினர். ஆனால், இக்கருத்தை இர்ஷித் (Irschick) வன்மையாக மறுப்பதுடன், மாநாட்டு வரவேற்புரையில் தியாகராயர் கூறிய கருத்துக்களையும் எடுத்துக் காட்டினார்.[153] இங்ஙனம் தாம் சமூகப் பணியாற்றியது மட்டுமன்றி, அக்கால இளைஞர் பலர் சமூகத் தொண்டில் ஈடுபடுவதற்குத் தியாகராயர் ஒரு தூண்டு கோலாகவும் திகழ்ந்தார்.[154]

"அரசுச் சார்பான பணிகளையும், மற்ற சலுகைகளையும் மூன்று விழுக் காட்டினராகிய பிராமணர்கள் பெற்றுத் துய்ப்பதை எதிர்த்துத் தமிழ்நாட்டில் தோன்றிய இந்த இயக்கம் மற்ற மாநிலங்களைவிட மிகவும் வேகமுடைய தாகவும், சீரிய அமைப்புக் கொண்டதாகவும் இருந்தது"[155] என்று பாராட்டு மளவுக்குத் தியாகராயரின் தலைமையில் அவர்தம் இயக்கம், சமுதாயப் பணி யாற்றிற்று என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் மட்டுமன்றி, உலக முழு வதிலுமே, எல்லா மக்களினங்களும் சமமாகக் கருதப்பட வேண்டும்; சம வாய்ப்பைப் பெறவேண்டும் என்ற தமது கருத்தை 'ஜஸ்டிஸ்' இதழ் மூல மாகவும் தியாகராயர் வற்புறுத்தினார்.[156] 'சுதேசமித்திரன்' இதழ் தஞ்சையில் நடைபெற்ற 'வர்ணாசிரம ரக்ஷனசபை'யின் மாநாட்டில் பண்டித நரசிம்மாச் சாரியார் ஆற்றிய உரையைக் கண்டித்து, " 'நான்பிராமின்', 'ஜஸ்டிஸ்' பத்திரி கைகள் பிராமணர்களைப் பற்றிக் கூறிவரும் மொழிகள் உண்மையென்றே அச்சபை நன்றாகச் சாக்ஷி கூறுவதாக விளங்குகிறது"[157] என்று கூறுவதினின் றும் தியாகராயரின் சமுதாயப் பணியின் இன்றியமையாமையையும் உய்த் துணரலாம்.

## 3.10. தாழ்த்தப்பட்டோர் நலம்

பிராமணரல்லாதார் நலத்துக்கென உழைத்த தியாகராயர், தாழ்த்தப்பட்ட மக்களின் நலம், பொதுச் சுகாதாரம், கல்வி, வேலை வாய்ப்பு போன்றவற் றிற்கும் சிறப்பாகத் தம் உழைப்பை நல்கினார். சட்டமன்றத்திலும், மாநகராட்சி மன்றத்திலும் தமக்கிருந்த செல்வாக்கினைப் பயன்படுத்தித் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலையை உயர்த்துவதற்கு ஆவன செய்தார்.

அக்காலத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் பஞ்சமர், பறையர் என்றும், அவர் கள் வாழுமிடங்கள் பறைச்சேரி என்றும் வழங்கப் பெற்றன. அவற்றின்

சீர்கேடான நிலையை எண்ணி வருந்திய தியாகராயர் அவர்களுக்கு நல்ல குடியிருப்புக்களை அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்தினார்.[158] இதன்விளைவாக 'மாதிரிப் பறைச்சேரி' ஒன்று கல்லறைத் தெருவில் ஐம்பத் தொன்றாயிரத்து நூற்று நாற்பத்தொன்பது ரூபாய் செலவில் கட்டப்பட, மிக விரைவில் மக்கள் அதில் குடியேறினர்[159]. தியாகராயருக்கு இது மிகப் பெரிய வெற்றியாகும். இரண்டடுக்குக் கொண்ட மாடிக் கட்டடங்கள் பாந்தியன் தெருவிலும், எழுமூரிலும் கட்டப்பெற்று ஆங்கிலோ இந்தியர்களுக்கு அளிக்கப் பெற்றன.[160] மேலும், பறைச்சேரிகளைச் சீர்திருத்துவதற்கென்று, தியாகராயரின் தலைமையில் ஒரு குழு அமைப்பதென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது. அதன் அடிப்படையில் எம். சி. இராசா அவர்கள் சென்னைச் சட்டமன்றத்திலும் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தார்.[161]

பஞ்சமர்களுடைய இடுகாட்டில் பிணங்களைப் புதைக்குமிடத்தில் மேடை அமைத்துக் கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டுச்செயல்படுத்தப்பெற்றது.[162] பஞ்சமர், பறையர் என்னும் சொற்களைப் பயன்படுத்தக் கூடாதென்றும், 'ஆதி திராவிடர்' என்றே அழைக்கப்பட வேண்டுமென்றும் சட்டமன்றத்தில் சட்டம் இயற்றப்பட்டது.[163] அதனைத் தொடர்ந்து மாநகராட்சி மன்றமும் இதனைச் செயல்படுத்தியது.[164] தியாகராயருக்கும், அவரது இயக்கத்திற்கும் ஆதி திராவிடர் மகாசன சபை பேராதரவை நல்கிற்று.[165]

மேலும், 1917ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 7-ஆம் நாள் ஸ்பர்டாங்க் பகுதியில் ஆதி திராவிடர்க் கென்றே நீதிக்கட்சி ஒரு கூட்டம் நடத்திற்று. அதனால் ஆதி திராவிடர்களின் ஆதரவைப் பேரளவில் பெறுவதற்கு வாய்ப்புக் கிடைத்தது[166]. இக்கூட்டத்தில் பிராமணர்கள் கலகம் விளைவித்ததால், இக்கூட்டம் நிறைவுபெற இயலவில்லை,[167] என்று தெரிகிறது. தியாகராயரின் 'திரா்விடன்' இதழ், "திராவிட சகோதரர்களே! இப்பஞ்சமர்களுக்கு இனிமேலாகிலும் சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் உரியபடி கொடுத்துப் பெருமைப்படுத்துங்கள்"[168] என்று எழுதியதும் குறிக்கத்தக்கது.

தியாகராயரின் தலைமையிலான நீதிக்கட்சி, கேரளத்தில் ஈழவர், பிராமணர்களின் தெருவில் நடமாடவும்,[169] சென்னையில் ஆதித் திராவிடர், எல்லாப் பொதுவிடங்களையும் மேல்சாதி என்று கருதப்படும் மக்களுக்குச் சமமாகப் பயன்படுத்தவும் சட்டமியற்றிற்று.[170] இச்செயல் நிறைவேறக் கோரிக்கை விடுத்தவர் இரட்டைமலை சீனிவாசனின் துணைவியார் ஆவார். எனவே, இவ்வாணை அவ்வம்மையாரின் கல்லறையிலும் பொறிக்கப் பட்டுள்ளது. ஆதி திராவிட மாணவர்களுக்கு வணிகவியல், வங்கிக் கணக்கியல் போன்றவற்றில் பயிற்சியளிக்க ஏற்பாடுகள் செய்யப்பெற்றன.[171]

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் என்னும் தமது கொள்கையில் ஆதிதிராவிடர் களையும் சேர்த்துக் கொண்டது நீதிக்கட்சி.[172] இவை பற்றிய விளக்கங்களை யும் சர்.பி.டி. இராசன் அவர்களின் உரையாலும் அறியலாம்.[173] பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட தொழிலாளர் நலனைக் காப்பதற்கென்று தொழிலாளர் நலத் துறையை நீதிக்கட்சி தொடங்கியது குறிப்பிடத்தக்கது.[174] தியாகராயரின் தலை மையில் இயங்கிய நீதிக்கட்சியினால் ஆதித்திராவிடருக்கு இத்துணை நன்மை கள் ஏற்பட்டிருந்தும் அவர்கள் புறக்கணிக்கப்பட்டதாக ஒரு கருத்து இன்று வரை நிலவி வருகிறது.[175] இதற்குப் பி. டி. இராசன், தாழ்த்தப்பட்டோர் தலை வராகிய இரட்டைமலை சீனிவாசனின் சட்டமன்ற உரையையே மேற்கோள் காட்டித் தக்கமுறையில் மறுப்பளித் துள்ளார்.[176]

இங்ஙனம் தாழ்த்தப்பட்ட - ஒடுக்கப்பட்ட ஆதி திராவிடருக்கு நலம் புரிந்த நீதிக்கட்சியின் தலைவராகிய தியாகராயர், தாழ்த்தப்பட்ட மக்களுடன் சரி சமமாகப் பழகினார். இதனால் தமது குலத்தைச் சார்ந்தவர்களின் கண் டனத்துக்குள்ளானார்.[177] இத்தகைய கண்டனங்களையும், தாக்குதல்களையும் தாங்கிக்கொண்டு தன்னலமற்றவராய்த் தாழ்த்தப்பட்டோரின் நலத்துக் குழைத்த தியாகராயர் தீண்டாமை ஒழிப்புச் சட்டத்தை ஆதரிக்க மறுத்து விட்டார் என்று கூறப்படுகிறது. ஸ்ப்ராட், [178] (Spratt) இர்ஷித்[179] (Irshick) ஆகிய ஆய்வாளர்கள் இக்கருத்தை வெளியிட்டுள்ளனர். ஆயினும், இக்கருத் துக்கு எந்தவிதமான ஆதாரமுமில்லை. அவர்கள் குறிப்பிட்டுள்ள சட்ட மன் றக் குறிப்புக்களில் எந்த இடத்திலும், அவர்களின் கருத்துக்கு உரமூட்டும் ஆதாரம் எதுவும் காணப்பெறவில்லை. எனவே, இக்கருத்து உண்மைக்குப் புறம்பானதாகவே தெரியவருகிறது.

தியாகராயர் சமுதாயத்தின் கீழ்மட்டத்திலிருக்கும் மக்களைக் கண்டு, "இவர்களெல்லாம் கல்வி கற்று, மேன்மையுற்று, மற்றவர்களுடன் சரிநிகர் சமானமாக வாழ்வது எப்போது என்று கூறிக் கண்கலங்குவார்"[180]. எல்லா இனத்தவரும் தத்தமக்குரிய பங்கினைப் பெற்று நல்வாழ்வு வாழவேண்டும் என்னும் அவருடைய அவா, அவரது கொள்கையறிவிப்பிலும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.[181]

## இயல் சுருக்கம்

மேற்காட்டிய கருத்துக்களால் தியாகராயர் சென்னை நகராட்சி மன்றத்தில் உறுப்பினராகவும், தலைவராகவும் பல்லாண்டுகள் பணியாற்றிச் சென்னை மக்களின் நலத்திற்காக உழைத்தார் என்பது தெளிவாகிறது. அந்நிலையில் அவர் தண்ணீர், விளக்கு வசதி, பொதுச் சுகாதாரம், கழிவுநீர் வசதி, நகரத் தூய்மை, கழிவுநீர் வயல்கள், சாக்கடைகள், கூவம் சீரமைப்பு ஆகிய

அனைத்துத் துறைகளிலும் கருத்துச் செலுத்தி அவற்றைச் சீர்படுத்த அரும் பாடுபட்டார். குழந்தைகள், பெண்களின் உடல்வள, மனநலத்திலும் ஆழ்ந்த கவனத்துடன் செயலாற்றினார்.

பூங்காக்கள், தெருக்கள், அமிழ்தண்டூர்தி வழித்தட வசதிகள், அங்காடி வசதி ஆகியவற்றிற்கு ஆவண செய்தார். சிறப்பாக வரி செலுத்தும் மக்கள் அதன் பயனைத் துய்க்க வேண்டும் என்பதில் கருத்தாக இருந்தார். மக்கள் நலம் பேணத் திட்டங்கள் வகுத்ததுடன், அவற்றின் நிறைவேற்றத்திற்காக அரசு உதவி பெறுவதில் கண்ணும் கருத்துமாக இருந்து அதன் பொருட்டு ஆங்கில அலுவலர்களையும் எதிர்த்து வாதாடி உதவிகள் பெற்றுத் தந்தார். சென்னை நகரத்தின் நெருக்கடியைப் போக்க, மாம்பலம் பிரிவாக்கத் திட்டத்தைச் செயல்படுத்தினார். அதனால் அவரது பெயரால் 'தியாகராய நகர்' என்றே ஒரு பகுதி அமையும் பேற்றினைப் பெற்றது.

பொதுத் தொண்டில் அவர் காட்டிய நேர்மை என்றென்றும் யாவராலும் பின்பற்றத்தக்கது. சமுதாயப்பணி நிலையங்களாகிய மணியக்காரர் சத்திரம், உலகப் பொதுப் பற்றாளர் கழகம், ஆந்திர மகாசபை, சென்னை ஆரியன் கிளப் ஆகிய பல நிறுவனங்களில் உறுப்பினராகவும், தலைவராகவும், புரவலராகவும் இருந்து சமுதாயப் பணிக்கென்றே தம்மை ஒப்படைத்தார்.

மதுவிலக்கில் தீவிரமாக இருந்தார். ஆயினும், காந்தியடிகளின் அணுகுமுறையினின்றும் இவரது அணுகுமுறை வேறுபட்டதாக உள்ளதைக் காணலாம். சமுதாயத்தில் வாழும் எல்லா இனமக்களும் சமவாய்ப்புப் பெற்று வாழும் சமுதாயச் சமநிலை உருவாகப் பாடுபட்டார். இறுதியாகப் பஞ்சமர், பறையர் என்று விலக்கிய - தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களின் நலனுக்காகப் பல்வேறு வழிகளிலும் உழைத்தார். இவரது சமுதாயப்பணி அக்காலச் சமுதாயத்திலும், இளைஞர்களிடத்திலும் விழிப்புணர்ச்சியை ஊட்டியது எனலாம்.

## எண் விளக்கம்

1. Fort St. George Gezette. ப.இ.
2. Municipal Council Meeting Proceedings, on 3rd Sep. 1884.
3. மேற்படி, on 25th Aug. 1889.
4. *கீழ்க்காணும் கூட்டங்களில் விளக்கு வசதி பற்றி உரையாற்றியுள்ளார்.*

   M.C.M.P. on 29th May 1899, on 28th Oct. 1901, on 18th April 1916, on 26th Nov. 1921, on 10th Oct 1923.

5. மேற்படி, on 18th April 1916.
6. மேற்படி, on 16th Dec. 1919.
7. மேற்படி, on 10th Oct. 1923.
8. Dravidan, on 2nd Feb. 1918 (NNR)
9. M.C.M.P. on 25th May 1903.
10. மேற்படி, on 20th March 1917.
11. மேற்படி, on 26th Nov. 1921.
12. மேற்படி, on 13th March 1923.
13. மேற்படி, on 29th Oct. 1884.
14. மேற்படி, on 1st Nov. 1897.
15. Indian Legislative Council Debates 1907-08, Vol.XLVI, p.173

    Mr. Gokhale

    "These figures show that the amounts contributed by the several Provincial Governments out of Provincial revenues as grants-in-aid to Municipalities towards capital outlay on drainage and water works during the last five years; i.e. from 1902-1903 to 1906-1907:-

| Province | Total amount in rupees in figures |
|---|---|
| Madras | 6,47,000 (exclusive of 3 lakhs, given to the city of Madras). |
| Bombay | Nil |
| Bengal | 1,05,400 |
| United Province | 5,68,235 |
| Punjab | 2,25,000 |
| Burma | 1,58,000 |
| Eastern Bengal and Assam | 14,000 |
| Central Province | 41,000 |
| North West Frontier Province | Nil |
| Total for all provinces in five years | 17,68,635 |

Page. 173.

16. M.C.M.P. on 25th Sep 1905.
17. கீழ்க்காணும் கூட்டங்களில் கழிவுநீர் வெளியேற்றும் திட்டங்களைக் குறித்துப் பேசியுள்ளார்.

    M.C.M.P. on 8th June 1910, on 19th June 1916, on 10th Feb 1917 and 31st July 1923.

18. மேற்படி, on 22nd Oct 1907.
19. கீழ்க்காணும் கூட்டங்களில் மக்களின் பொதுச் சுகாதாரத்திற்குத் தடையாக இருக்கும் சுற்றுப்புறச் சூழல்களின் தூய்மையின்மை, கொசுக்களை அழித்தல், காலரா, பிளேக், அம்மை போன்ற நோய்களைத் தடுத்தல் ஆகியன பற்றி உரையாற்றியுள்ளார்.

    M.C.M.P. on 1st Oct. 1885, 29th March 1887, 8th Aug. 1889, 19th Dec. 1889, 3rd July 1890, 15th Sep. 1891, 31st Aug. 1892, 24th Aug. 1893, 25th March 1895, 5th March 1900, 29th July 1904, 19th July 1905, 25th Sep. 1905, 8th June 1910, 21st Jan. 1913.
20. மேற்படி, on 15th Sep. 1891.
21. மேற்படி, on 26th Sep. 1892.
22. மேற்படி, on 31st Oct 1898.
23. மேற்படி, on 29th July 1904.
24. Administrative Reports 1902, p.13, 1908-9, p.21, 1914-15, p.25, 1915-16, p.24 and the following M.C.M.P on 19th Oct 1920, on 16th Dec 1919.
25. M.C.M.P. on 18th Feb. 1913.
26. மேற்படி, on 17th June 1913.
27. மேற்படி, on 14th April 1913.
28. மேற்படி, on 18th March 1913.
29. மேற்படி, on 30th Sep. 1913.
30. மேற்படி, on 16th June 1914.
31. மேற்படி, on 31st July 1899.
32. மேற்படி, on 28th Oct. 1901.
33. மேற்படி, on 29th Aug. 1904 and on 28th Aug. 1906.
34. Administrative Report of the Madras Corporation 1908-9, p.21.
35. M.C.M.P. on 7th Feb. 1913.
36. மேற்படி, on 23rd Jan. 1923.
37. M.C.M.P. on 20th Feb. 1922.
38. மேற்படி, on 15th May 1923.
39. மேற்படி, on 16th Oct. 1923.
40. மேற்படி, on 25th May 1889.
41. மேற்படி, on 11th Sep. 1888.
42. மேற்படி, on 11th Sep. 1888.
43. Administrative Report of the Madras Corporation 1902-1903, p.13.

44. M.C.M.P. on 30th May 1904.
45. மேற்படி, on 20th Dec. 1910.
46. மேற்படி, on 18th July 1916.
47. மேற்படி, on 3rd Oct. 1922.
48. மேற்படி, on 16th Dec. 1885.
49. Administrative Report of the Madras Corporation 1919-1920, p.44.
50. M.C.M.P. on 1st March 1889.
51. கீழ்க்காணும் கூட்டங்களில் தெருக்களின் சீர்கேடான நிலையைச் சுட்டிக்காட்டித் தகுந்த முறையில் செப்பனிடப் பட வேண்டுமென்று வற்புறுத்துகிறார்.

    M.C.M.P on 28th Aug. 1896, 24th Aug. 1904, 25th Sep. 1905, 11th Oct. 1911 and 24th Oct. 1923.
52. மேற்படி, on 8th July 1886 and on 5th Sep. 1888.
53. மேற்படி, on 28th April 1885.
54. Administrative Report of the Madras Corporation, 1914-15, p.4, p.3 and the M.C.M.P. on 3rd Oct. 1922.
55. M.C.M.P. on July 1894.
56. மேற்படி, on 27th Nov.1895.
57. சுதேசமித்திரன், ஜூன் 14, 1895, ஜூலை 17, 1901.
58. M.C.M.P. on 19th June 1923.
59. மேற்படி, on 29th March 1897 and on 13th Oct 1911.
60. மேற்படி, on 24th Oct. 1923.
61. தியாகராயரின் மறைவு நாளன்று இடுகாட்டில் நடைபெற்ற இரங்கற் கூட்டத்தில் பனகல் அரசர் ஆற்றிய உரை. இவ்வுரை அன்றைய செய்தித் தாள்கள் அனைத்திலும் வெளிவந்துள்ளது.
62. M.C.M.P. on 1st May 1925.
63. மேற்படி, on 18th Nov. 1896, 30th April 1900, 27th March 1905, 9th March 1906, 28th Aug. 1906 and on 17th March 1908.
64. மேற்படி, on 21st May 1908.
65. சுதேசமித்திரன், சனவரி 22, 1917.
66. M.C.M.P. on 26th July 1921, 17th April 1923.
67. மேற்படி, on 24th Sep. 1885.
68. மேற்படி, on 17th Sep. 1886.
69. மேற்படி, on 25th Feb. 1889.
70. மேற்படி, on 22nd May 1889.

71. மேற்படி, on 8th Aug. 1889.
72. மேற்படி, on 8th Oct. 1889.
73. மேற்படி, on 29th Nov. 1889 and 12th Sep. 1900.
74. மேற்படி, on 31st July 1889.
75. மேற்படி, on 25th May 1903.
76. M.C.M.P. on 21st April 1914 and 29th May 1914.
77. மேற்படி, on 22nd Aug. 1917.
78. மேற்படி, on 13th Sep. 1918.
79. மேற்படி, on 22nd Jan. 1921.
80. மேற்படி, on 21st Oct. 1921.
81. Administrative Report of the Madras Corporation 1921-22, p.15 and p.37 and the M.C.M.P. on 2nd May 1922, 23rd May 1922, 18th July 1922, 16th Jan. 1923, 8th May 1923 and 21st Aug. 1923.
82. M.C.M.P. on 23rd Feb. 1885.
83. மேற்படி, on 1st oct. 1885.
84. மேற்படி, on 2nd Sep. 1913.
85. மேற்படி, and M.L.C.P. on 12th Oct 1921.
86. மேற்படி, on 18th Sep. 1923.
87. மேற்படி, on 24th Oct 1923.
88. மேற்படி, on 24th Oct 1923.
89. மேற்படி, on 31st May 1895.
90. Administrative Report of the Madras Corporation 1914-15, p.5.
91. M.C.M.P. on 18th Jan. 1921 and on 24th Oct. 1923.
92. மேற்படி, on 25th April 1928, 5th June 1928.
93. மேற்படி, on 29th May 1903.
94. மேற்படி, on 29th July 1904.
95. மேற்படி, on 1st May 1925.
96. மேற்படி, on 30th May 1894.
97. M.C.M.P. on 28th March 1898.
98. மேற்படி, on 4th Nov. 1903.
99. மேற்படி, on 21st Dec. 1903.
100. மேற்படி, on 29th May 1905.
101. மேற்படி, on 22nd Aug. 1917.
102. மேற்படி, on 21st Oct. 1921.

103. மேற்படி, on 21st Oct. 1921.
104. மேற்படி, on 24th Sep. 1885.
105. மேற்படி, on 28th Feb. 1887.
106. மேற்படி, on 11th Feb. 1890.
107. மேற்படி, on 30th May 1894.
108. மேற்படி, on 30th Jan. 1905.
109. மேற்படி, on 25th Aug. 1931.
110. Administrative Report of the Madras Corporation, 1930-31, p.52.
111. Chennapuri Andra Maha Saba Golden Jubilee Souvenir, (1916-60), p.74.
112. W.V.S. Krishnaswamy Naidu, Cosmopolitan Club centinary celebration Souvenir, pp.29-30.
113. மேற்படி, p.21.
114. Aslum Press Almanack and Directory, Year 1920, p.1677.
115. Minites Book, Monegar choultry (1867-1919), p.2
116. Administrative Report of the Madras Presidency 1880-81, Chapter - III, p.54; M.C.M.P on 25th April 1892, on 23rd Feb. 1898; and Minites of the Board of Directors Meeting Proceedings, June 17,28,1907, p.2, and G.O. Public No.152, Feb. 19, 1907 and No,.539, July 8, 1907 and Fortnightly Report, Public No.244, March 11, 1889; G.O.Home Department No.1130, June 30 1920 ஆகியவை தியாகராயரது முயற்சியால் இந்நிறுவனம் பெற்ற பொருளுதவிகளைப் பற்றி விளக்கமாகக் குறிப்பிடுகின்றன.
117. Administrative Report of the Madras Presidency, Public, No.1130, June 30, 1920.
118. மேற்படி, No.244, March 11, 1889.
119. Aslum Press, Almanack and Directory, 1894, p.1143.
120. மேற்படி, Year 1900, p.1120 and Year 1907, p.785.
121. M.L.C.P. on 21st Feb. 1911.
122. மேற்படி, on 16th March 1925.
123. Aslum Press Almanack and Directory, Year 1913, p.962.
124. தியாகராயருடைய துணைவியாரின் நெருங்கிய உறவின ரும், பச்சையப்பன் கல்லூரி முன்னாள் நூலகருமான செங்கல்வராயன் அவர்களை ஆய்வாளர் 16.7.86 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
125. M.C.M.P. on 1st May 1925.
126. சுதேசமித்திரன், 19, டிசம்பர், 1918, ப.3.

127. தியாகராயரின் நெருங்கிய நண்பரான பண்டிட் ஆனந்தம் அவர்களின் புதல்வரும், சித்தமருத்துவருமான டாக்டர். ஏ. ஆனந்தகுமார் அவர்களை ஆய்வாளர் 17.8.86 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

128. தியாகராயர், தலைமையுரை மருத்துவகுல இரண்டாவது மாநாடு, 1925.

129. சித்தமருத்துவநிலைய முப்பெரும் விழாமலர், சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ப.15.

130. வாழ்த்துரை, மருத்துவகுல இரண்டாவது மாநாடு, 1925.

131. Aslum Press Almanack and Directory, Year 1914, p.1042.

132. ஆரியன் கிளப் செயலாளர் சி. வெங்கடேசன், பொருளாளர் மெய்க்காப்பான் ஆகியோரை ஆய்வாளர் 2.10.86 அன்று ஆரியன் கிளப்பில் சந்தித்துப் பெற்ற கருத்து.

133. Aslum Press Almanack and Directory, year 1922, p.232.

134. M.C.M.P. on 9th May 1922.

135. மேற்படி, on 21st March 1922.

136. மேற்படி, on 18th Oct 1921.

137. M.L.C.P. on 25th April 1911.

138. மேற்படி, on 5th April 1910.

139. The Hindu, Feb. 16, 1912 (NNR).

140. சுதேசமித்திரன், ஜூன் 15, 1917, ப.4

141. T. Varadarajulu Naidu, The Justice Party, Presidential Address, Bezewada Conference, pp.97-98.

142. தேவாங்க பத்திரிகா, (தெலுங்கு) ஏப்ரல் 30, 1925.

143. W.V.S. Krishnaswamy Naidu, Cosmopolition Club Centinary Celebration Souvenir, p.29 மேலும் Aslum Press Almanack and Directoryயிலும் இச்செய்தி காணப்படுகிறது.

144. மேற்படி, பக்.94-96.

145. மேற்படி, ப.139. இதே கருத்துக்களைக் கீழ்க்காணும் நூல்களிலும் காணலாம்.

(i) P. Rajaram, the Justice Party, Historical Study (1916 -1937) Ph.D. Thesis, Univeristy of Madras, April 1983.

(ii) Justice Commomoration Day Supplement, 16th Feb 1931.

(iii) Egunene F. Irshick, The Political and Social Conflict of South India, p.72.

(iv) திராவிடன், 6, நவம்பர் 1917.

146. P.V. Manicka Naicker, Betwixt ourselves in the Madras Zoo, p.37.

147. திராவிடன், 1917, செப்டம்பர் 19, உ.ப. 6, பத்தி - 2.

148. எம்.டி. சுப்பிரமணிய முதலியார், 13.10.1918-இல் நடந்த மதுரை மாவட்ட பிராமணரல்லாதார் மாநாட்டு வரவேற்புரை, Justice Party Golden Jubilee Souvenir, 1968, பக்.205-206.

149. The Hindu, Nov.21, 1916 (NNR).

150. மேற்படி, Nov.11, 1917.

கீழ்க்காணும் நூலும் இதே கருத்தினைத் தந்துள்ளது.

B.B. Misra, Indian Political Parties, Historical Analysis of Political Behaviour upto 1947, pp.231-232.

151. P. Rajaram, The Justice Party, A Historical Study (1916-1937) Ph.D.Thesis, University of Madras, April 1983, p.224.

152. மேற்படி, ப.26 and Lathe A.B., Memories of His Highness Shree Shauh Chatropat Maharaja of Kolhopur, Vol-I, p.77.

153. Egunene F.Irshick, Politics and Social Conflicts of South India, p.174.

154. Ghatshachalam V.M., 'Late Sir P. Theagaraya Chettiar, The uncrowned King of South India', Sir Theagaraya College-School Platinum Jubilee. Sir Theagaraya College Silver Jubilee Souvenir, 1976, p.34.

155. Spratt. P., D.M.K. in power, p.17 and Srinivas.M.N., Social change in Modern India, p.100

156. Contemperory Openion of Justice (Jan. 9, Madras) published in New India, Jan.10, 1923 and Sep.29, 1923 and May 26, 1923.

157. சுதேசமித்திரன், ஏப்ரல் 16, 1917.

158. M.C.M.P. on 31st Oct 1898.

159. Administrative report of the Madras Municipality, Year 1908-1909, p.20.

160. மேற்படி, 1914-15, ப.24.

161. மேற்படி, Year 1920-21, p.10 and M.L.C.P. on 31st Aug. 1920 (Madras Land Cherries Bill).

162. M.C.M.P. on 26th Nov. 1921.

163. M.L.C.P. on 25th March 1922.

164. M.C.M.P. on 21st Feb. 1922.

165. திரிசிரபுரம் ஆ - பெருமாள் பிள்ளை, ஆதிதிராவிடர் வரலாறு, பக்.97-101.

166. Egunene F. Irshick, Politics and Social Conflict in South India, p.27 (ஆனால் இர்ஷிக் தேதியைத் தவறாகக் குறிப்பிட்டுள்ளார். இது அச்சுப்பிழையாக இருக்கலாம்.) இராசாராம் அவர்களும் தமது ஆய்வேட்டில் இக்கூட்டத்தைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளார், ப.157.

167. மேற்படி, ப.27 and சுதேசமித்திரன் அக்டோபர் 8, 1917.

168. திராவிடன், 1917, செப் 19, உ, ப.6, பத்தி-2.

169. M.L.C.P. on 20th Aug. 1925.

170. மேற்படி, on Aug. 11th, 1924 and Fort St.George Gazette 1 A. 25th Sep. 1924, 27th Jan. 1925, 28th April 1925, 2660. L & M.

171. M.L.C.P. on 7th Feb. 1925.

172. M.N. Srinivas, Social change in Modern India, P.109.

173. K. Paramasivam (Ed.) Sir.P.T.Rajan's opening Address at Thevaram Depressed class conference on Aug 3, 1936, Sir.P.T. Rajan - Eighty Second Birth Day Souvenir, 1973, p.145.

174. Kumaresan, Department of History, Pitty Theagaraya Chetty - A study, M.Phil. Thesis, University of Madras, Dec.1980, p.24.

175. Egunene F.Irshick, Politics and Social Conflict in South India, p.189 and M.C. Raja (Written evidence) Report of Reforms Enquiry Committee-1924, pp.51-57 and பொன்னோவியம், (தொ.ஆ) வட்டமேஜை மாநாடும் புனா ஒப்பந்தமும், ப.11.

176. K. Paramasivam (Ed.), Sri.P.T. Rajan's Eighty Second Birth Day Souvenir, 1973, p.51.

177. சுதேசமித்திரன், டிசம்பர் 17, 1921.

178. Spratt. P., D.M.K. in Power, p.19.

179. Egunene F.Irshick, Politics and Social Conflict in South India, p.42.

180. தியாகராயரின் வண்டியோட்டுநர் மாசிலாமணி நாயக்கரிடமிருந்து ஏ. பார்த்தசாரதி நாய்க்கர் அறிந்த செய்தி; ஆய்வாளர் 'திராவிடப் பெருந்தகை தியாகராயர்' என்னும் நூலாசிரியர் கோ. குமாரசாமி அவர்களை மாயவரத்தில் அவரது இல்லத்தில் 4.2.1986 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து. மாசிலாமணி நாய்க்கர் புதல்வி பத்மா அவர்களும் இதனை உறுதிப்படுத்துகிறார்.

181. பி.எஸ். இளங்கோ, சர்.பி.தியாகராயர் முதல் டாக்டர் கலைஞர் வரை, ப.45.

# 4

# தியாகராயரின் கல்விப்பணி

## 4.0. முன்னுரை

சமுதாயத்தின் சமநிலைக்காகப் பாடுபட்ட தியாகராயர், அச்சமநிலைக் குறைவுக்குக் காரணம் போதிய கல்வியின்மையே என்பதை உணர்ந்தார். குறிப்பாகப் பிராமணரல்லாதார் கல்வியில் பின்தங்கியிருப்பதையும், பிராமணர்கள் தாம் கற்ற கல்வியின் பயனாக அரசாங்க அலுவல்களிலும், மற்றும் பிற துறைகளிலும் மேன்மையுற்று வருவதையும் கண்டார். (பின்னிணைப்பு) அவர்களுக்கு இணையாக நம் மக்களும் முன்னேற வேண்டுமாயின், அவர்கள் கல்வியறிவு பெறுவது இன்றியமையாதது என்று தெளிந்தார். அதனால் தாம் கூட்டிய பிராமணரல்லாதார் மாநாடுகளில், கல்வி பெறவேண்டியதன் இன்றியமையாமையைச் சுட்டிக்காட்டினார். சென்னை நகரமன்றக் கூட்டங்களில் கல்வியைப் பரப்புவதற்கான தீர்மானங்களைக் கொண்டுவந்தார். மாநகராட்சியில் பள்ளிகள் பல ஏற்படவும், இலவசத் தொடக்கக் கல்வி பரவவும் வழி வகுத்தார். அவர் ஆற்றிய கல்விப் பணியினை ஈண்டு விரிவாகக் காணலாம்.

## 4.1. மாநாடுகள்

பிராமணரல்லாதார் மாநாடுகளில், சிறப்பாகப் பிராமணரல்லாதார் ஆங்கிலக் கல்வி கற்க வேண்டுமென்றும், குடும்பத்தில் ஒருவராவது உயர்கல்வி கற்றவராக இருக்க வேண்டுமென்றும் எடுத்துக் கூறினார். வேளாண்மைக் கல்வி, தொழில் நுட்பக்கல்வி போன்றவற்றிலும் தேர்ந்து வரவேண்டுமென்றும், அது தொடர்பாக இங்கிலாந்து, சப்பான் போன்ற நாடுகளுக்குச் சென்று நுட்பப் பயிற்சி பெற்றுவர வேண்டுமென்றும் கூறிப் பிராமணரல்லாதார் இடையே ஒரு விழிப்புணர்வை ஊட்டினார்.[1] பிராமணர் அல்லாத ஏழை மாணவர்கள் பயன்பெறும் வகையில் உதவித் தொகைகள் அளித்து, அவர்களின் கல்வியை ஊக்குவிக்கக் கோரும் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். இதன்மூலம் தொடக்கக்கல்வி கட்டாயக் கல்வியாக்கப் பெற வேண்டுமென்றும் கோரினார்.[2] பெசவாடா மாநாட்டில் தமது தலைமையுரையில் இந்திய மக்களுக்கு அளிக்கப்பெறும் கல்வி இந்தியச் சூழ்நிலைகளுக்குப் பொருத்தமான

தாக இருக்க வேண்டுமென்றும், பிராமணரல்லாதாரும் பிராமணர்களுக்கீடாக உயர்கல்வி பெறவேண்டுமென்றும் வற்புறுத்தினார்.[3] சென்னையில் நடை பெற்ற முதல் மாநில மாநாட்டில் தமது வரவேற்புரையில் மேற்கூறிய கருத்துக் களை மீண்டும் வலியுறுத்தியதுடன் பிராமணரல்லாதார் வேளாண்மைக் கல்வி யில் கருத்துச் செலுத்த வேண்டியதன் இன்றியமையாமையையும் எடுத்து விளக்கினார்.[4] இலவசக் கல்வி, கட்டாயத் தொடக்கக் கல்வி, பிராமணரல்லா தாருக்கு உயர்கல்வி, அரசாங்கப் பொருளுதவி ஆகியவற்றைப் பெறுவதே அவரது நோக்கமாக இருப்பதை இதனால் அறியலாம். இந்நோக்கங்களைக் கொண்ட பல தீர்மானங்கள் தியாகராயரால் நிறைவேற்றப்பட்டு அரசுக்கு அனுப்பப் பெற்றன.[5]

## 4.2. சட்டமன்றத்தில்

பிராமணரல்லாதார் மற்றும், ஏழை மக்களின் கல்விக்காகச் சட்டமன்றத் திலும் தியாகராயர் குரல் கொடுத்தார். நடுநிலை, உயர்நிலைப் பள்ளிகளில் மாணவர் செலுத்தும் கட்டணத்தை உயர்த்தக் கூடாது என்னும் தீர்மானத்தை வழிமொழிந்த தியாகராயர், "இக்கட்டண உயர்வால் ஏழை மக்கள் பாதிக்கப் படுவார்கள்; அரசு மானியம் வழங்குவதை நிறுத்திவிடும். அதனால் பணம் கட்டமுடியாத ஏழை மக்கள், தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பு வதை நிறுத்தி விடுவார்கள். எனவே, இதன் ஒட்டு மொத்த விளைவு (Net result) நடுத்தர, கீழ்நிலை மக்கள் கல்வி இழப்பதுதான்"[6] என்று திட்டவட்ட மாகப் புள்ளி விவரங்களுடன் எடுத்துரைத்தார். ஆனால், இத்தீர்மானம் தோல்வியுற்றது. இத்தீர்மானம் தோற்றாலும், தியாகராயரின் உரை பிற்காலத் தில் ஆட்சிக்கு வந்தவர்களின் சிந்தனையைத் தூண்டவே செய்தது எனலாம்.

## 4.3. சென்னை மாநகராட்சி மன்றத்தில்

மாநகராட்சியின் ஆளுகைக்குட்பட்ட முறையில் பல பள்ளிகள் தொடங் கப்பெற வேண்டுமென்றும், அவற்றில் இலவசக் கல்வி அளிக்க வேண்டு மென்றும், மன்றக் கூட்டங்களில் தியாகராயர் பலமுறை எடுத்துக் கூறிவந்தார். அதன் விளைவாக மாதிரிப் பள்ளிகள் பல ஏற்படுத்தப் பெற்றன.[7] 1915-16ஆம் ஆண்டுகளில் சில பள்ளிகள், சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட (பஞ்சமர்) மக்களுக் காக நடத்தப்பட்டன. அவற்றில் அவர்களுக்கு இலவசக்கல்வி அளிக்கப் பெற்றது.[8] மாதிரிப் பள்ளிகளில், பாடத்திட்டம் வகுத்தல், பள்ளிகளைச் சீர்படுத் துதல் ஆகியவற்றைக் கவனிக்க அமைக்கபெற்ற குழுவில் தியாகராயர் உறுப் பினராக இருந்து அருந்தொண்டாற்றினார்.[9] 1920-21-ஆம் ஆண்டுகளில் தியாகராயரின் தலைமையில் மேலும் பல பள்ளிகள் நகரின் பல பாகங்களிலும் நிறுவப்பெற்றன[10]. எனவே, இவ்வாண்டு மொத்தம் முப்பது பள்ளிகள் இருந்த

தாகத் தெரிகிறது.[11] இலவச இரவுப் பள்ளிகள் சில அறவுணர்வுடையோரால் நடத்தப் பெற்றன. அவற்றில் பணியாற்றுவதற்கு மாநகராட்சிப் பள்ளி ஆசிரியர் கள் அனுமதிக்கப் பெற்றனர்.[12] இத்தகைய பணிகளால் தொழிலாளர்களும், பகல் நேரத்தில் படிக்க இயலாதவர்களும் கல்வி கற்கும் வாய்ப்பினைப் பெற்றனர். டி. அரங்காச்சாரியாரால் அளிக்கப்பெற்ற நன்கொடை இரண்டாயிரம் ரூபா யைக் கொண்டு எழும்பூரில் ஒரு படிப்பறை கட்டப் பெற்றது. தியாகராயர் அதனைத் திறந்து வைத்தார். இதுபோன்று மேலும் பல பகுதிகளிலும் படிப் பறைகள் திறக்கப்படுவதற்காக அறவுணர்வு மிக்கவரைத் தூண்டினார்.[13] பஞ்ச மர்களும், கிறித்தவர்களும் பெரும்பாலும் ஆசிரியர்களாக நியமிக்கப் பெற்றனர்.[14]

கல்விப் பணிக்காக ஒரு விழுக்காடு சொத்துவரி விதிக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டு, அது செயல்படுத்தப் பெற்றது.[15] 1921-22-ஆம் ஆண்டில் மேலும் பல பள்ளிகள் நிறுவப் பெற்றன.[16] மன்ற உறுப்பினர்களுக்கான நூலகம் ஒன்று நிறுவப் பெற்றது.[17] குறிப்பாக மீனவர் குழந்தைகளுக்காக ஒரு பள்ளி மைலாப்பூரில் நிறுவப் பெற்றது.[18] பெண்களுக்கென்று மூன்று தனிப்பள்ளிகள் நிறுவப் பெற்றன.[19] அரசினரால் நடத்தப்பெற்ற மூன்று முஸ்லீம் பள்ளிகளை மாநகராட்சி தனது பொறுப்பில் எடுத்துக் கொண்டது.[20]

1922-23ஆம் ஆண்டுகளில் கீழ்க்குறிக்கப் பெற்ற நான்கு படிப்பறை களுக்குச் சென்னை மாநகராட்சி மன்றம் பொருளுதவி செய்தது.

க. முன்னேற்றத்திற்குரிய (Progressive) ஒன்றியப் படிப்பறை.

உ. திராவிடன் படிப்பறையும் நூலகமும்; எழும்பூர்.

ங. இரத்தினவேலு செட்டியார் படிப்பறையும் நூலகமும்.

ச. இராசா. சர். இராமசாமி முதலியார் படிப்பறையும் நூலகமும், கோமளீச்சுவரன் பேட்டை.[21]

தொடக்கக்கல்விச் சட்டத்தில், சொத்து வரியாக விதிக்கப்படும் தொகையில் இருந்து 4. 225 விழுக்காடு கல்விப்பணிகளுக்காக அமைய வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு அரசுக்கு அனுப்பப்பெற்றது.[22] 'பவானி பாஹ்யா பாடசாலை' என்னும் பெயரில் இராணிப்பேட்டையில் நடைபெற்று வந்த பெண்கள் தொடக்கப்பள்ளி மூடப்பெற வேண்டிய சூழ்நிலையில் இருந்தது. ஆனால், சென்னை நகரமன்றம் அப்பள்ளியைத் தானே எடுத்து நடத்திப் பெண்கள் கல்விக்கு உதவியது.[23] மைலாப்பூரிலுள்ள அரசுக்குச் சொந்தமான நிலத்தை மாதிரிப் பள்ளிக்காக எடுத்துக் கொள்ளுவதற்கு அரசின் அனுமதி பெற்றுச் செயல்படுத்தினார் தியாகராயர்.[24]

புகுமுக வாழ்க்கைத் தொழில் சார்ந்த (Pre-vocational) திட்டத்தை மாநகராட்சிப்பள்ளிகளில் செயல்படுத்துவதற்கு அரசு அனுமதியளித்தது.[25] கொய்யாத்தோப்பு மாநகராட்சிப் பள்ளியில் இரவுப்பள்ளி நடத்தப்பெற்றது.[26] 1923-ஆம் ஆண்டு மேலும் பல பள்ளிகள் புதிதாகத் தொடங்கப்பெற்றன.[27] தவிரத் தொடக்கக் கல்வியை இலவசமாக்குவது பற்றிய புள்ளி விவரங்களைத் தொகுக்கத் தனி எழுத்தர் நியமிக்கப் பெற்றார்.[28] முதியோர் கல்விக்கு ஆவன செய்யப் பெற்றன.[29] மேலும், பெண்களுக்கெனச் சில பள்ளிகள் தொடங்கப் பெற்றன.[30] இவை அனைத்தும் தியாகராயர் முயற்சியால் நடந்தேறின என்பது குறிப்பிடத்தக்கது.

## 4.4. மதிய உணவுத்திட்டம்

கல்விப்பணியில் கருத்தைச் செலுத்திய தியாகராயர் மக்கள் கல்வி பெற இயலாமைக்கு ஒரு காரணம் வறுமை என்பதைக் கண்டறிந்தார். அவ்வறுமை காரணமாகக் குழந்தைகள் கல்வி கற்கும் பருவத்தில், பள்ளி செல்ல இயலாது, ஏதேனும் ஒரு கூலிவேலையில் ஈடுபட்டுப் பொருள் தேட வேண்டிய அவல நிலையில் இருப்பதைக் கண்டார். எனவே, இக்குறையை நீக்கப் பள்ளிகளில் படிக்கும் குழந்தைகளுக்கு ஒருவேளை உணவாவது பள்ளிகளிலேயே கொடுக்க வேண்டுமென்று கருதினார். அதனைக் கருத்திற் கொண்டு தாம் தலைவராக இருந்தபோது மாநகராட்சி மன்றக் கூட்டத்தில் அதற்கான தீர்மானத்தை நிறைவேற்றினார். அதன்படி ஆயிரம் விளக்குப் பகுதியில் உள்ள பள்ளிகளில் முதன்முதலில் மாணவர்களுக்குக் காலைச் சிற்றுண்டி வழங்கப் பெற்றது. இதனால் ஓராண்டிற்குள் பிற்பட்ட வகுப்பைச் சார்ந்த மாணவர்களின் எண்ணிக்கை 3075-லிருந்து 3705 ஆக உயர்ந்தது. ஆகவே, இத்திட்டம் மீர்சாகிப்பேட்டை, சேத்துப்பட்டு ஆகிய இடங்களுக்கும் விரிவு படுத்தப் பெற்றது. இத்திட்டம் முழு வெற்றியடைவதற்கு அவரது முயற்சியே காரணமாகும். இதனால் அப்பகுதிகளில் மாணவர்களின் வருகைப்பதிவில் முன்னேற்றம் ஏற்பட்டது.[31] ஆகவே, இத்திட்டம் மேலும் ஓரப்பாளையம், கொக்ரனே, பேசின் முதலிய இடங்களிலுள்ள மாநகராட்சிப் பள்ளிகளுக்கும் பரிசோதனை முறையில் விரிவுபடுத்தப் பெற்றது.[32] ஓரப்பாளையம், பேசின் பகுதிப் பள்ளிகளில் மதிய உணவு வழங்கப் பெற்றது.[33]

மதிய உணவுத்திட்டம் பல்லாண்டுகட்கு முன்னரே முதன் முதலாகத் தியாகராயரால் கொண்டு வரப்பெற்றது என்பதை அறிய முடிகிறது.[34] இக் கருத்தை 'இந்து' நாளிதழும்,

> தியாகராய செட்டியார் மானுடநேய முறையில் இச்சிக்கலை அணுகினார். மாநகராட்சிப் பள்ளிகளில் பயிலும் குழந்தைகளுக்கு

> ஒருவேளை உணவு அளிப்பதுதான் இதனைத் தீர்க்க வழி என்று கருதிச் செயல்படுத்தினார். இத்திட்டம் வெற்றி பெற்றது.[35]

என்று பாராட்டுகிறது. ஆனால், அரசு இச்செலவை அனுமதிக்காததால் 1925-ஆம் ஆண்டில் இத்திட்டம் நிறுத்தி வைக்கப்பெற்றது.[36] இதனால் மாணவர்களின் வருகை வீழ்ச்சியுறவே செய்தது.[37] இத்திட்டம் நிறுத்தப் பட்டதை நகரமன்ற உறுப்பினர்கள் பலரும் விரும்பாததால், நகராட்சிப் பொது நிதியிலிருந்து அச்செலவை ஈடுசெய்து அத்திட்டத்தைச் செயல் படுத்தத் தீர் மானிக்கப் பெற்றது. ஆயினும், 1927-ஆம் ஆண்டில்தான் அது மீண்டும் செயல் முறைக்கு வந்தது.[38]

இங்ஙனம், குழந்தைகளின் கல்விக்காக மேற்கொள்ளப் பெற்ற இந்நலத் திட்டத்தை முதன் முதலாகச் சிறப்புற நடத்திய பெருமை தியாகராயரையும், அவரது நீதிக்கட்சியையுமே சாருமெனலாம். இவர்களால் மேற்கொள்ளப் பெற்ற இத்திட்டம் பிற்பட்ட, ஏழைக் குழந்தைகளின் கல்விக்குப் பாதை வகுத்தது என்பது ஏற்கத்தக்கது.

தொடக்கக்கல்வி, கட்டாய இலவசக் கல்வியாக்கப் பெறவேண்டுமென்று கூறப்பட்ட பொழுது இரட்டைமலை சீனிவாசன், தாழ்த்தப்பட்ட வகுப்புக் குழந்தைகளுக்கு ஒருவேளை உணவாவது மீண்டும் அளிக்கப்பெற வேண்டு மென்று வற்புறுத்தினார்.[39] இருப்பினும் உணவளிக்கும் இத்திட்டம் செயல் முறைக்கு வந்தது 1927-இல் தான் என்பதை உணர முடிகிறது.

இந்தியத் தலைவராகிய கோகலே, இந்தியப் பாராளுமன்றத்தில் குறிப் பிட்ட, இலவசக் கட்டாயக் கல்வித் திட்டத்தைப் பாராளுமன்றம் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அத்திட்டத்தைச் சட்டமாக்கி இலவசக் கட்டாயத் தொடக்கக் கல்வியளித்த பெருமை நீதிக்கட்சிக்கு உண்டு என்று நெ.து. சுந்தர வடிவேலு குறிப்பிட்டது ஈண்டு நினைவு கூரத்தக்கது.[40]

## 4.5. வடசென்னை இந்துப் பெண்கள் பள்ளி

பெண் கல்வியிலும் கருத்துச் செலுத்திய தியாகராயர், பொதுமக்களின் மாதச் சந்தா, மேலும் நன்கொடைகள் மூலம் 'வடசென்னை இந்துப் பெண்கள் பள்ளி' என்னும் ஒரு பள்ளியை 1907-ஆம் ஆண்டு சூலைத் திங்களில் தோற்றுவித்தார். அப்பள்ளியில் மிகக் குறைந்த அளவு கட்டணமே மாணவர் களிடமிருந்து வசூலிக்கப் பெற்றது. சமயக் கல்வியும், சமரச மனப்பான்மையும் மாணவர்களுக்கு ஊட்டப்பெற்றன. அது தனக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தும் கொண்ட தன்னிறைவு பெற்ற ஒரு பள்ளியாகத் திகழ்ந்தது. தியாக ராயர் இப்பள்ளியின் தலைவராக இருந்து மிகச் சிறப்பாக நடத்தி வந்தார்.[41]

## 4.6. தியாகராயர் கல்வி நிறுவனங்கள்

தியாகராயர் தம் சொத்தில் ஒரு பங்கைக் கல்விக்காக அளித்தார். (காண்க: பின்னிணைப்பு) தமது இல்லத்துக்கு அருகில் ஒரு நடுநிலைப் பள்ளியை ஏற்படுத்தினார். இப்பள்ளி 1897-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் மூன்றாம் நாள் தொடங்கப் பெற்றது. சமுதாய உணர்வு மிக்கவராதலால் இப்பள்ளிக்குத் தமது பெயரையே வைக்காமல் 'இந்துப்பள்ளி' என்ற பெயரையே சூட்டினார். (ஆனால் அவரது மறைவுக்குப் பின் இப்பள்ளி தியாகராயர் தொடக்கப் பள்ளி என மாற்றம் பெற்றுள்ளது). ஐம்பதாண்டுக் காலத்துக்குப் பிறகு அப்பகுதியில் முதன்முதல் அமைந்த பள்ளி இதுவேயாகும்.[42] இது கிட்டத்தட்ட இலவசப் பள்ளியாகவே இயங்கியது. இப்பள்ளியில் எண்பது விழுக்காடு மாணவர்கள் இலவசமாகவே கற்றனர். 1904-ஆம் ஆண்டு இப்பள்ளி உயர்நிலைப் பள்ளி யாயிற்று. 1920-ஆம் ஆண்டில் பள்ளிக்கு நிதிவசதி குறையலாயிற்று. எனவே, தியாகராயரின் மறைவுக்குப் பின்னர் இதன் நிர்வாகம் ஒரு பொறுப்புக் கழகத் திடம் ஒப்படைக்கப் பெற்றது. பள்ளி மீண்டும் நடுநிலைப் பள்ளியாகப் பெற்றது. பின்னர் 1947-ஆம் ஆண்டில் தியாகராயரின் மருகர் பம்மி இராம சாமி செட்டியாரின் இடைவிடாத முயற்சியால் மீண்டும் உயர்நிலைப் பள்ளி யாயிற்று.[43] இப்பள்ளி பற்றிய விரிவான விளக்கத்தைக் குமாரசாமியின் கை யெழுத்துப் படிவம் உணர்த்துகிறது.[44]

உயர்கல்வியின் தேவையை உணர்ந்த பம்மி இராமசாமி செட்டியார், இசைக் கலைஞர் எம்.எம். தண்டபாணி தேசிகர், மறைந்த தமிழக முதல்வர் எம்.ஜி. இராமச்சந்திரன் ஆகியோரைக் கொண்டு கலை நிகழ்ச்சிகள் நடத்திப் பொருளீட்டி இவ்வுயர் நிலைப் பள்ளியைக் கல்லூரியாக உயர்த்தினார். இது 1950-இல் இரண்டாம் நிலைக் கல்லூரியாக இருந்தது. பின்னர் 1956-இல் முதல் நிலைக் கல்லூரித் தகுதியைப் பெற்றது.[45] இன்றும் இக்கல்லூரி வடசென்னை மக்களின் கல்வித் தேவையை நிறைவு செய்து வருகின்றது.

இங்ஙனம் தொடங்கப்பெற்ற நடுநிலைப்பள்ளியில் தியாகராயர் தம் ஒரே மகன் சுப்பிரமணியத்தை முதல் மாணவராகச் சேர்த்தார் என்பது குறிப்பிடத் தக்கது. செல்வராக இருந்தும் தியாகராயர் தம் செல்வனை எளிய மக்கள் படிக்கும் கல்விக் கூடத்திற்கே அனுப்பினார்[46] என்பது அவரது எளிமைக்குச் சான்றாகும்.

## 4.7. தொழிற்கல்வி

அனைவரும் கல்வி கற்க வேண்டும் என்னும் விருப்பமுடைய தியாகராயர், பொதுக்கல்வி ஏட்டுக் கல்வியாக மட்டும் இருப்பது சரியன்று; பள்ளியில் பயிலும்போதே ஏதேனும் தொழிற் பயிற்சியும் மாணவர்கள் பெறவேண்டும்

என்னும் கல்விக் கொள்கையுடையவராயிருந்தார். எனவே, சட்டமன்றத்திலும், மாநகராட்சி மன்றத்திலும் பலமுறை உரையாற்றித் தொழிற்கல்வியின் இன்றியமையாமையை உணர்த்தினார். இவரது முயற்சியால் பல தொழில் நுட்பப் பள்ளிகளும், பொதுப் பள்ளிகளில் தொழிற் பயிற்சியும் ஏற்பட வாய்ப்பு உண்டாயிற்று.

"இன்றைய நமது கல்விமுறை பட்டதாரிகளை உற்பத்தி செய்வதாக உள்ளது. நாட்டின் தொழிலையும் பொருளாதாரத்தையும் வளர்க்கக்கூடிய மனிதர்களை உற்பத்தி செய்வதில் தோல்வியடைந்து விட்டது"[47] என்று கூறி ஆங்கிலக் கல்விமுறையின் சீர்கேட்டைச் சாடினார். அரசு தமது வேண்டுகோளுக்கிணங்கித் தொழிற்கல்வியில் சிறிது நாட்டங் கொண்டுள்ளதைச் சுட்டிக் காட்டினார். இருப்பினும் அரசு அதற்கென ஒதுக்கியுள்ள தொகை போதுமானதல்ல[48] என்று கூறி, அதிக நிதி ஒதுக்கலுக்கு வழி வகுத்தார். அத்துடன் உடற்பயிற்சியும், உடலுழைப்புத் தொழிற் பயிற்சியும் எல்லாப் பள்ளிகளிலும், அளிக்கப் பெற வேண்டுமென்பதும் அவரது கோட்பாடாகும்.[49]

தியாகராயரின் இக்கல்விக் கொள்கையை 'மெயில்' இதழும் பாராட்டியது.[50] தொடக்கக்கல்விச் சட்டத்தை வழிமொழிந்து உரையாற்றுகையில் இதே கருத்துக்களை மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார்.[51] தவிர வடசென்னை இந்துப் பள்ளி ஆண்டு விழாவிலும் இக்கருத்துக்களை அவர் வலியுறுத்தினார். அவர் கூற்றில் அடங்கியுள்ள உண்மையை உணர்ந்த இந்து, சுதேசமித்திரன் நாளிதழ்கள் இது தொடர்பான தம் கருத்துக்களை வெளியிட்டன.[52]

ஆந்திரர்கள் தங்களுக்கெனத் தனிப் பல்கலைக்கழகம் வேண்டுமென்ற கோரிக்கையை எழுப்பியபோது, தியாகராயர், "இது போன்றே தமிழர்களும் மலையாளிகளும் தங்களுக்கெனத் தனித்தனிப் பல்கலைக் கழகங்களை வேண்டுவர்; இதனால் பயனில்லை. வீண்பொருட் செலவுதான் ஏற்படும். இதற்காகப் பல இலட்சம் ரூபாய்களைச் செலவிடுவதை விடுத்துத் தொழிற் பள்ளிகளை ஏற்படுத்த வேண்டும்"[53] என்று எடுத்துரைத்தார்.

இவ்வாறு தமது உரைகளால் எழுச்சியூட்டிய தியாகராயர் தாம் தலைவரானவுடன் சென்னை மாநகராட்சிப் பள்ளிகள் பலவற்றின் தொழிற்பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்தார். கல்மண்டபம் தெரு மாநகராட்சிப் பள்ளியில் தையல் வேலையும், மற்ற இருபத்து மூன்று பள்ளிகளில் மரவேலையும், எடப்பாளையம் பள்ளியில் முடி ஒப்பனை வாரிதழ் (Tape) நெய்தலும் கற்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. எளிய தட்டுமுட்டுப் பொருள்களும், பள்ளிக்குத் தேவையான மரச் சாமான்களும் பல பள்ளிகளில் செய்யப்பெற்றன. மாணவர்களால் செய்யப்பட்ட பொருள்களைக் கொண்ட பொருட்காட்சி

யொன்று 1921-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 2-ஆம் நாள் நடத்தப் பெற்றது. அக்காட்சி ஆளுநர், நகரமன்ற உறுப்பினர் ஆகியோரின் சிறந்த பாராட்டினைப் பெற்றது.[54] சில பள்ளிகளில் தச்சு வேலையும்.[55] வேறு சில பள்ளிகளில் தையல் வேலையும்[56] கூடுதல் பாடங்களாகவே கற்பிக்கப்பட்டன. 150 மாணவர்களைக் கொண்ட ஒரு தொடக்கப்பள்ளி எவ்வாறு அமைய வேண்டும் என்பதைச் சுட்ட ஒரு மாதிரிப் படிவம் அமைப்பதற்கு அனுமதியளிக்கப் பெற்றது.[57] எஸ்.வி. நாராயணாச்சாரி என்பவரால் நன்கொடையாக அளிக்கப் பெற்ற கட்டடத்தையும், தட்டுமுட்டுப் பொருள்களையும் கொண்டு, பெண்களுக்கென்று ஒரு தொழில்நுட்பப் பள்ளி நடத்துவதென்றும், அதற்கு 'நாராயணாச்சாரி தொழில்நுட்பப் பள்ளி' என்று பெயரிடுவதென்றும் தீர்மானிக்கப் பெற்றது.[58] இதனைப் பாராட்டுகையில் தியாகராயர், "தொழிற்பயிற்சிக்கென்று தனியாகப் பள்ளி தொடங்குவது இதுதான் முதல் முயற்சி என்றும், இது வெற்றியடைந்தால் இத்தகைய பள்ளிகள் பல அமைத்து இத்திட்டத்தை விரிவு படுத்தலாம்"[59] என்றும் கூறினார். இக்கூற்று தொழிற்கல்வியிடத்து அவர் கொண்டிருந்த ஆர்வத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

நம்மக்கள், சிறப்பாகப் பிராமணரல்லாதார் எத்தகைய கல்வியைப் பெற வேண்டுமென்பதையும், எவ்வாறு பெறவேண்டுமென்பதையும் கோவையில் நடந்த மாநாட்டில் தெளிவாக்கிப் பிராமணரல்லாதாரிடையே எழுச்சியை உண்டாக்கினார்.

ஆங்கில கல்வியினால் நாம் நம் நிலையை உணரவும், இனி எங்ஙனம் இருக்க வேண்டுமென்பதைத் திட்டமிடவும் அறிந்துள்ளோம். நம் பிள்ளைகள் உயர்கல்வி பெறவும், தொழிற் கல்வி பெறவும், தங்கிப்படிக்க விடுதி வசதிகள் பெறவும் நாம் வாய்ப்பளிக்க வேண்டும். நம் பிள்ளைகள் படித்துப் பிராமணர்களுக்குச் சரிநிகராக வளர்ந்து வரவேண்டும். வேலை வாய்ப்புக்களைப் பெற வேண்டும்"[60] என்பது அவரது சொற்பொழிவின் பிழிவாகும்.

## 4.8. அஞ்சுமான்-இ-மூஃபீத்-இ-அல்லா-இ-இசுலாம்

ஆண் பெண் அனைத்து இசுலாமியர்களின் நிலையை உயர்த்துவதற்கென்று 1885-ஆம் ஆண்டு மேற்குறித்த இக்கழகம் நிறுவப்பெற்றது. பொதுக் கல்வியுடன், தொழிற்கல்வியும் அளிப்பது இதன் நோக்கமாகும். இதன்மூலம் பல்வேறு தொழிற்பயிற்சிகள் அளிக்கப்பெற்றன. இக்கழகத்தின் நிர்வாக உறுப்பினர்களுள் ஒருவராக இருந்து தியாகராயர் தொண்டாற்றினார்.[61] இவரது முயற்சியால் அங்கு உற்பத்தி செய்யப்பெற்ற பொருள்களின் விற்பனைக்கும் நல்ல ஏற்பாடு செய்யப் பெற்றது. இந்நிகழ்ச்சி அவரது தொழிலார்வத்தை விளக்குவதுடன் அவரது சமய சமரச மனப்பான்மையையும் புலப்படுத்துகிறதெனலாம்.

## 4.9. பச்சையப்பன் அறக்கட்டளை

தியாகராயர் பச்சையப்பன் அறக்கட்டளையின் உறுப்பினராகவும், தலைவராகவும் பல்லாண்டுகள் பணிபுரிந்தார். பச்சையப்பன் அறக்கட்டளையின் நிதியில் ஒரு பகுதியைத் தொழிற்கல்விக்குச் செலவிடச் செய்தார். 1905-ஆம் ஆண்டு அவரது கருத்தை ஏற்ற அறக்கட்டளைச் செயற்குழு ஒரு தொழிற் பயிற்சி நிறுவனம் அமைப்பது என்று தீர்மானித்தது. செங்கல்வராய நாயக்கரின் அறநிதியைக் கொண்டு, அவரது பெயரால் 'செங்கல்வராய நாயக்கர் தொழில் நுட்பப் பயிற்சிக் கூடம்' (Chengalvaraya Naiker Technical and Industrial Institute) தொடங்கப் பெற்றது. சென்னை மக்கள் தியாகராயரையும் அறக்கட்டளைக் குழுவினரையும் பெரிதும் பாராட்டினர்.[62]

இதுவரை பிராமணர்களின் ஆதிக்கத்திலிருந்த பச்சையப்பன் அறக் கட்டளையும், கல்லூரியும் தியாகராயரின் முயற்சியால் சிறுகச் சிறுகப் பிராமணரல்லாதார் வசமாயிற்று. கல்லூரியில் பிராமணரல்லாத மாணவர்கள் எளிதாக இடம்பெற்றனர்.[63] இதன் காரணமாகப் பிராமணரல்லாதார் நீதிபதிப் பதவிகளையும்[64] சட்டக்கல்லூரி முதல்வர் பதவிகளையும்[65] பெற வாய்ப்பு உண்டாயிற்று. 1921-ஆம் ஆண்டில் பச்சையப்பன் கல்லூரி முதல்வர் பதவி காலியாயிற்று. தியாகராயரின் வலிய முயற்சியால் இரத்தினசாமி என்பவர் முதல்வராக நியமிக்கப் பெற்றார். அக்கல்லூரியில் முதல்வராக நியமிக்கப் பெற்ற முதல் இந்தியர் இவரே என்பதும், இவர் பிராமணரல்லாத வகுப்பினர் என்பதும் குறிப்பிடத்தக்கது.[66] நகரமன்ற உறுப்பினர்களில், நகரமன்றக் கல்விக்குழு போன்ற குழுக்களில் பிராமணரல்லாதார் இடம் பெறும்போது தியாகராயர் தனிப்பட்ட முறையில் தமது பாராட்டுக்களைத் தெரிவித்து அவர்களை ஊக்குவித்தார்.[67]

பிராமணரல்லாதாருக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் நன்மை செய்யும் பிராமணர்களும் சிலர் அக்காலத்தில் இருந்தனர். அத்தகைய பிராமணர்களுக்கும் இவர் உதவி வந்தார். தாழ்த்தப்பட்ட மக்களுடன் கலந்து வாழ்ந்தமைக்காகப் பதவி நீக்கம் செய்யப் பெற்ற இயக்ஞராமன் என்னும் பிராமணப் பேராசிரியருக்குப் பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியர் பதவி அளித்து உதவினார்.[68] இதனால் தியாகராயர் பிராமணர்களை வெறுத்தவர் அல்லர் என்பதும், பிராமணீயத்தைத்தான் வெறுத்தார் என்பதும் அறியத் தக்கன.

கிருஷ்ணசாமி நாயுடுவுக்குப் பதவியளிக்குமாறு ஆளுநருக்கு எழுதும் போது, நாட்டில் யாரும் தொழிற்கல்வியைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்காத காலத்திலேயே 'செங்கல்வராய நாயக்கர் தொழிற்பள்ளியைத் தொடங்குவதற்குக் காரணமாக இருந்தவராகிய வெங்கடராமானுசலுவின் பேரன் இவர் என்று

குறிப்பிட்டார். மேலும், தாம் அவரிடமிருந்தே பொது வாழ்வின் ஈடுபடும் ஆர்வத்தைப் பெற்றதாகவும் குறிப்பிட்டது சிந்தனைக்குரியது.[69] இவற்றால் அவர், தொழிற் கல்வி மீது கொண்டிருந்த ஆர்வமும் புலனாகின்றது.

பச்சையப்பன் அறக்கட்டளையின் தலைவர் என்ற நிலையில் பல ஏழை மாணவர்களுக்குப் பொருளுதவி செய்து, கல்வி கற்க உறுதுணையானார். அதே நேரத்தில் அம்மாணவர்கள் அப்பொருளுதவி பெறுவதற்குத் தகுதி வாய்ந்தவர்களா என்பதை நன்கு சோதித்தறிந்த பிறகே பொருளுதவினார்.[70] பிராமணரல்லாத மாணவர்களின் கல்வியில் கொண்ட ஈடுபாடு அவரது நேர்மைக்கு எந்தவிதத்திலும் தடையாக இருக்கவில்லை என்பதும் இதனால் அறியப் பெறுகின்றது.

பச்சையப்பன் அறக்கட்டளை வாயிலாக உயர்கல்விக்குத் தியாகராயர் ஆற்றிய தொண்டினைப் பாராட்டும் முறையில் பச்சையப்பர் மண்டபத்தில், 1923-ஆம் ஆண்டு ஏப்ரல் 23-ஆம் நாள் தியாகராயரின் திருவுருவப்படம் திறந்து வைக்கப் பெற்றது. அதைத் திறந்து வைத்த ஆளுநர் வெல்லிங்டன், அவரது தொண்டினைப் பெரிதும் புகழ்ந்துரைத்தார்.[71] இந்நிகழ்ச்சியைக் குறிப் பிடும் சீராமுலு செட்டியார், "தீர்க்கதரிசியாக விளங்கிய, மாட்சிமை மிக்க இந்திய முதியவர் தமது சொந்த நாட்டிலேயே கவுரவிக்கப்பட்ட"[72] தாகப் பாராட்டினார்.

## 4.10. விக்டோரியா தொழில் நுட்பப்பள்ளியும் நுண்கலைக்கூடமும்

1887-ஆம் ஆண்டில் விக்டோரியா அரசி ஆட்சியின் பொன் விழா நடை பெற்றது. அதனையொட்டிச் சென்னைப் பலக்லைக்கழகத்தின் ஆட்சிக் குழு (Senate) மண்டபத்திற்கெதிரில் அரசியாரின் சிலை அமைக்கப் பெற்றது. ஆனால், தியாகராயரின் கருத்துப்படி அரசியின் பெயரால் ஒரு தொழில் நுட்பப்பள்ளி நிறுவவேண்டுமென்ற தீர்மானம் நிறைவேற்றப் பெறாமலே இருந்தது. எனவே, தியாகராயர் பன்முறை அரசுக்கு நினைவூட்டிக் கொண்டே யிருந்ததுடன், தாம் கலந்துகொண்ட கூட்டங்களிலெல்லாம் அரசின் போக்கைக் கண்டித்து உரையாற்றினார். அவரது இடைவிடா முயற்சியின் காரணமாக 1889-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 26-ஆம் நாள் விக்டோரியா தொழிற் பயிற்சிக்கூடம் தொடங்கப்பெற்றது.[73] மேலும், தொழில், கலை, ஓவியப் பள்ளி களில் பயிலும் மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் உதவித் தொகைகள் வழங்கப் பெற்றன.[74] இன்று இத்தொழில் நுட்பக்கழகம் பல்வேறு கைவினைக் கலைஞர்களுக்கு வாழ்வளிக்கும் பெரு வணிக நிறுவனமாக வளர்ந்துள்ளது. இதன் தோற்றத்திற்கு வித்திட்டவர் தியாகராயர் எனலாம். இதனைப் பாராட்டும் முறையில் சென்னைக் கலைக்கூடத்தில் (Art Gallery) இவரது

உருவப்படம் வைக்கப்பட்டுள்ளது. ஆளப்படும் மக்களின் நலத்துக்கேற்ற செயல்களைச் செய்யவேண்டியது அரசின் கடமை என்பதைப் பிடிவாதத் துடன் நின்று செயல்படுத்தச் செய்வதிலும், அதற்காக அரசை அஞ்சாது நின்று எதிர்த்து வாதாடி வெல்லுவதிலும் தியாகராயர் வல்லவராகத் திகழ்ந்தார்.

## 4.11. நுண்கலைகள்

தொழிற்கல்வி வளர்ச்சியில் ஆர்வங்கொண்டிருந்த தியாகராயர் நுண்கலை வளர்ச்சியிலும், நம்நாட்டுக் கைவினைப் பொருள்களின் மறுமலர்ச்சியிலும் தணியா ஆர்வங்கொண்டிருந்தார். தென்னக நுண்கலைகளின் பெருமையை, வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் ஆங்கிலேயருக்கு எடுத்துரைத்தார். இதன் பயனாக டாக்டர். ஹண்டர், தென்னாட்டு ஓவியக்கலையில் ஈடுபாடு கொண்டு எழும்பூரில் ஓவியக் கலைப்பள்ளி ஒன்று தொடங்கி நடத்தினார். இன்று இந்த நிறுவனம் ஓவியக்கலையுடன் நில்லாது அதன் தொடர்பான பல்வேறு கலை களையும் கற்பிக்கும் கல்லூரியாக வளர்ந்தோங்கியுள்ளது. ஆயிரக்கணக்கான கைவினைஞர்களுக்கு வேலை வாய்ப்பு அளித்து வருகிறது. தியாகராயர் ஆங்கிலேயருடன் தொடர்பு கொண்டு, அளித்த தூண்டுதலே இத்தகைய ஒரு நிறுவனம் தோன்றக் காரணமாய் இருந்தது எனலாம்.

## 4.12. தாழ்த்தப்பட்டோர், தொழிலாளர் கல்வி

பிராமணரல்லாதர் மாநாடுகளாலும், கூட்டங்களாலும் ஈர்க்கப்பட்ட தாழ்த் தப்பட்டோரும், தொழிலாளர்களும் சிறுகச் சிறுகக் கல்வியில் ஆர்வங் காட் டத் தலைப்பட்டனர். ஆனால், பிராமணரல்லாத உயர்குடி மக்களுள் சிலர், தாழ்த்தப்பட்டோரும், தொழிலாளர்களும் தங்களுக்குச் சமமாகக் கல்வி கற்பதை வரவேற்கவில்லை. இந்நிலையைக் கண்ட தியாகராயர் தாழ்த்தப்பட்டோரும், தொழிலாளர்களும் கல்வி பெற வேண்டியதன் இன்றியமையாமையைத் 'திரா விடன்' மூலம் விளக்கினார். "தொழிலாளர்களின் கல்வி; அதனால் பிறர்க்கு அசௌகரியம் உண்டாகுமா?" என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் வெளியிட் டார். தொழிலாளர்கள் கல்வி கற்று மேம்பாடடைந்து விட்டால், பணியாட்கள் கிடைப்பது அரிதாகி விடுமேயென்ற அச்சம் தேவையில்லையென்றும் அறி வியல் முன்னேற்றத்தால் அத்தகைய பணிகளைச் செய்வதற்குப் பொறி களைக் கண்டுபிடித்து விடலாம் என்றும் எடுத்துரைத்தார். மேலும், கல்வியில் அனைவரும் சமமாகவே கருதப்பட வேண்டும்; எந்தவிதமான ஏற்றத்தாழ் வும் பாராட்டுதல் கூடாது; எல்லோரும் கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் தான் உயர்வு, தாழ்வு கருதப்பட வேண்டுமேயொழியச் சாதியினால் அன்று என்பதை யாவரும் உணர வேண்டும் என்றும் கூறினார்.[75] இத்தலையங்கம் தியாகராயரின் கல்விக் கொள்கையை விளக்குவதுடன், அவரது சமத்துவ மனப்பான்மையையும் தெளிவாக விளக்குகிறது.

## 4.13. தியாகராயரின் கல்விப் பணியின் விளைவுகள்

தியாகராயரின் உரைகளால் எழுச்சியுற்ற தேவாங்கர்கள் சேலத்தில் 'மநூர் குலத் தேவாங்க வாசகசாலை' என்னும் பள்ளியை நிறுவினர். அப்பள்ளி இன்றும் தொடர்ந்து அவ்வட்டாரக் குழந்தைகளுக்குக் கல்வியளித்து வருகிறது. 1926-ஆம் ஆண்டு பெரியார் ஈ.வெ.ரா. தலைமையில் தியாகராயரின் உருவப் படம் திறந்து வைக்கப்பெற்றது என்பது குறிப்பிடத் தக்கது.[76]

ஆந்திர மாநிலத்தில் வேடபாளம் என்னுமிடத்திலும், பண்ட்ல பாபைய என்பவரால் ஒரு பள்ளி தொடங்கப்பெற்று இன்றும் நடந்து வருகிறது. தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்திய தியாகராயர் ஆளுநர் வெல்லிங்டனைக் கொண்டு அப்பள்ளியைத் திறக்கச் செய்தார்.[77]

"கல்விநிலை, நிருவாக முறை, அமைதியான முன்னேற்றம் ஆகியவைகளால் சென்னை மாநிலம் 'இந்தியாவிலேயே ஒரு முன்மாதிரியான மாநிலம்' எனப்படும் தகுதியைப் பெற்றது"[78] என்ற கூற்று, தியாகராயரும் அவரைச் சார்ந்தோரும் ஆற்றிய பணிகளின் விளைவே என்பது உணரத்தக்கது. பொதுவாகச் சமுதாயத் துறைகளிலும், சிறப்பாகக் கல்வித்துறையிலும் பிராமணரல்லாதார் பெற்ற எழுச்சிக்கும் வெற்றிக்கும் வித்திட்டவர் தியாகராயர் எனலாம்.[79] கற்ற பிராமணரல்லாதார் குடும்பங்களில் ஒரு விழிப்பு ஏற்பட்டது. பிராமணர்களை எதிர்க்கும் துணிவை அவர்கள் பெற்றனர் என்று ஜான்பேக்கரும்[80](John Backer) சரோசா சுந்தரராசனும்[81] தமது நூல்களில் சுட்டியுள்ளனர்.

## 4.14. பல்கலைக்கழகங்கள்

1898-ஆம் ஆண்டு தியாகராயர் சென்னைப் பல்கலைக்கழகத்தின் மதிப்பியல் உறுப்பினராகத் (Fellow of the Madras University) தேர்ந்தெடுக்கப் பெற்றார்.[82] அவர், பல்கலைக்கழக ஆட்சிக்குழுவிலும் பிற துறைகளிலும் பிராமணரல்லாதார் இடம்பெற முடியாத நிலை இருப்பதை நேரடியாக உணர்ந்தார். எனவே, 1910-இல் சட்டமன்ற உறுப்பினரானவுடன், பல்கலைக் கழகத்திற்குரிய தேர்தல்களிலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அமைய வேண்டுமென்று வற்புறுத்தினார்.[83] பின்னர் தியாகராயரின் தலைமையில் நீதிக்கட்சி ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் சென்னைப் பல்கலைக்கழகச் சட்டத்தில் சில திருத்தங்கள் செய்யப்பெற்றன. ஆந்திரப் பல்கலைக் கழகம் ஏற்படுத்தப் பெற்றது. சென்னை, ஆந்திரப் பல்கலைக்கழகங்களுக்கான சட்ட வரைவு நிறைவேற்றப் பெற்றது.[84] சென்னைப் பல்கலைக்கழகம் தமிழுக்குச் சிறப்பிடம் தராததால் தமிழ்மொழி வளர்ச்சிக்காகவும், தமிழ் நூல்கள் அச்சிடப் பெறுவதற்காகவும் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவப்பெற்றது.[85]

நீதிக்கட்சியின் ஆட்சிக்காலத்தில் கல்லூரிகளில் பிராமணர்களே பெரும்பான்மையாக முதல்வர்களாக இருந்தனர். அதனால், கல்லூரி மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதற்குத் தனிக்குழு ஒன்று அமைக்கப்பெற்றது.[86] இவ்வாறு பல்கலைக்கழகச் சட்டத் திருத்தங்கள் ஏற்பட்டதால் பிராமணர் அல்லாதார் கல்வித் துறையில் பெருமுன்னேற்றம் அடைய வாய்ப்பேற்பட்டது. 'சர்வென்ட் ஆஃப் இந்தியா'[87] (Servant of India) 'மெட்ராஸ் மெயில்'[88] (Madras Mail) ஆகிய இதழ்கள் பாராட்டுக்களை வெளியிட்டன. எல்.எஃப். ரஷ்புரூக் வில்லியம்ஸ் ஸும்[89] (L.F. Rushbrook Williams) தமது பாராட்டுக்களை வெளியிட்டார்.

## 4.15. வேளாண்மைக் கல்வி

தொடக்கக் கல்விக்கு அடுத்தபடியாகக் கவனம் செலுத்த வேண்டியது வேளாண்மைக் கல்வியே என்று உணர்ந்த தியாகராயர் அத்துறையிலும் தமது பணியை விரிவுபடுத்தினார். நீதிக்கட்சியின் முதல் மாநில மாநாட்டில், வேளாண்மைத் துறையிலும் வேளாண்மைக் கல்வியிலும் அரசு மேற்கொள்ள வேண்டிய பணிகளைப் புள்ளி விவரங்களுடன் எடுத்துரைத்தார். அரசின் பணிகள் ஏழை உழவர்களைச் சென்றடையத் தக்க நிலையில் உழவர் பயிற்சி நிலையங்கள் அமைக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார்.[90] இன்று நாம் காணும் உழவர் பயிற்சி நிலையங்கள், கூட்டுறவு முறை வேளாண்மை, அலுவலர் - உழவர் தொடர்பு போன்ற பல வேளாண்மைத் திட்டங்களையும் தியாகராயர் அன்றே எடுத்துக் கூறியுள்ளது நினைக்கத்தக்கது.[91]

## 4.16. மொழிக் கல்வி

தியாகராயர் ஆங்கிலம் கற்க வேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந்ததுடன், நம்நாட்டு மொழிகளும் அத்துடன் இணைந்து வளர்ச்சியுற வேண்டுமென்று விரும்பினார். நம்நாட்டு மொழிகளிலேயே கல்வி கற்பிக்கப் பெற வேண்டும்; அதே நேரத்தில் ஆங்கிலத்திலும் நாம் தேர்ச்சி பெற்றவர்களாக இருக்கவேண்டும். இணைப்பு மொழி ஆங்கிலமாக இருக்கவேண்டும் என்பதே அவரது மொழிக் கொள்கையாக இருந்தது.[92]

## 4.17. தெலுகு அகாடமி

திராவிட மொழிகளில் ஒன்றாகிய தெலுங்கு மொழியின் வளர்ச்சிக்காக 1911-ஆம் ஆண்டு இக்கழகம் தொடங்கப்பெற்றது. தியாகராயர் இதன் பொறுப்புக் குழுவில் ஒருவராக இருந்து தெலுங்கு இதழ்கள் வெளியிடுதல், தெலுங்கு, வடமொழிக் கையெழுத்துப்படிகள் சேகரித்தல், தெலுங்கு மகாபாரதத்திற்குச் சொல்லடைவு தொகுத்தல், கலைக்கல்வி, தொழிற்கல்விக்கான கலைச் சொற்களைத் தொகுத்தல் ஆகிய பணிகள் வெற்றியடைய ஆவன செய்தார். இவரது முயற்சியால் தெலுங்குமொழி அகராதி தொகுக்கும் பணியும் சிறப்புற நிறைவேறிற்று.[93]

## இயல் சுருக்கம்

தியாகராயர் பிராமணரல்லாதாரின் இழிநிலைக்குக் காரணம் போதிய கல்வி யின்மையே என்று உணர்ந்து, அவர்கள் கல்வி பெறுவதற்காக அரும்பாடு பட்டார். மாநாடுகள் பலகூட்டி அவர்களிடையே கல்வியார்வம் பெருகச் செய் தார். ஏழை எளியவர்களும் கல்விபெறும் வகையில் தொடக்கக் கல்வியைக் கட்டாய இலவசக் கல்வியாக்க வழிவகுத்தார். அவர்களின் கல்விக்கு இடை யூறு வறுமையே என்றறிந்து, ஏழைக் குழந்தைகளுக்குப் பள்ளியிலேயே ஒருவேளை உணவளிக்க ஏற்பாடு செய்தார்.

சட்டமன்ற உறுப்பினராகவும், மாநகராட்சி மன்ற உறுப்பினராகவும் இருந்து கல்வித்துறையில் பிராமணரல்லாதார் பயன்பெறும் வகையில் பல்வேறு சட்டங்களை இயற்ற உறுதுணையாக இருந்தார். சென்னை மாநிலத்தில் மேலும் இரண்டு பல்கலைக்கழகங்கள் ஏற்படுத்தவும், அவற்றின் வாயிலாகப் பிராமண ரல்லாதார் உயர்கல்வி பெறவும் உழைத்தார்.

வெறும் ஏட்டுக்கல்வியால் பயனில்லை என்பதை அரசுக்கு உணர்த்தித் தொழில்கல்வி வளர அருந்தொண்டாற்றினார். இவரது முயற்சியால் விக்டோரியா தொழில் நுட்பக் கூடம், செங்கல்வராயர் தொழில்நுட்பப் பள்ளி ஆகியவை தோன்றின.

நம்நாட்டுக்கலை வளர்ச்சிக்கும், மொழி வளர்ச்சிக்கும் ஆவன செய்தார். வேளாண்மைக் கல்வியிலும் திருத்தங்கள் பல ஏற்பட வழிவகுத்தார்.

முஸ்லீம்களும், தாழ்த்தப்பட்டோரும், தொழிலாளர்களும், பெண்களும் கல்வி பெறத் திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தினார்.

இங்ஙனம், கல்வித்துறையின் பல்வேறு அமைப்புக்களிலும் இவரது பணி தொடர்ந்ததால் சென்னை மாநிலம் கல்வித்துறையில் முதலிடம் பெறும் வாய்ப் புண்டாயிற்று எனலாம்.

சிறப்பாகத் தமிழ்ச் சமுதாயத்தில் விழிப்புணர்ச்சி ஏற்படத் தியாகராயர் காரணமாக இருந்தாரெனலாம்.

### எண் விளக்கம்

1. T. Varadarajulu Naidu, The Justice Movement, p.98.
2. மேற்படி, ப.99
3. மேற்படி, Presidential Address, Bezewada Conference, pp.91-92.
4. மேற்படி, Welcome Address, First Confederation, pp.135-136.

5. Indian Review, 1920, Non-Brahmin Confederation, Gudalore on 29th Dec. 1920, pp.30-31.

6. Proceedings of the Legislative Council of the Governor of Madras, 1910, Vol-XXXVIII, 5th April 1910.

7. Administration Report of the Madras Corporation, 1914-15, p.25.

8. மேற்படி, ப.26

9. M.C.M.P. on 21st May 1918.

10. Administrative Report of the Madras Corporation, 1920-21, p.29.

11. மேற்படி, ப.40.

12. மேற்படி, ப.42.

13. மேற்படி, ப.43.

14. M.C.M.P. on 15th Nov. 1921.

15. மேற்படி, on 19th Nov. 1921.

16. மேற்படி, on 26th Nov. 1921.

17. Administrative Report of the Madras Corporation 1921-22, p.41.

18. மேற்படி, ப.42.

19. மேற்படி, ப.43.

20. மேற்படி, The year 1922-23, p.7.

21. மேற்படி, ப.37.

22. M.C.M.P. on 28th March 1922.

23. மேற்படி, on 23rd May 1922.

24. மேற்படி, on 16th Jan. 1923.

25. மேற்படி, on 13th March 1923.

26. மேற்படி, on 15th May 1923.

27. மேற்படி, on 28th Aug 1923.

28. மேற்படி, on 17th July 1923.

29. மேற்படி, on 28th Aug. 1923.

30. மேற்படி, on 25th Sep. 1923.

31. Administrative Report of the Corporation of Madras, Year 1922-23, p.35.

32. M.C.M.P. on 17th July 1923.

33. மேற்படி, on 28th Aug. 1923.

34. Chief Minister Mr.M.G. Ramachandran's Speech in Chittod, quoted by The Hindu, Nov.29, 1982.

35. The Hindu, 6th Dec 1982.

36. Law (Education) G.O.No. 1890, 3 Dec, 1924.
37. The Hindu, 6th Dec 1982.
38. மேற்படி, 6th Dec 1982.
39. Proceedings of the Legislative Council of the Governor of Madras, the 5th March 1925.
40. நெ.து. சுந்தரவடிவேலு, சிந்தனை அலைகள், (தன் வரலாறு); ப.159.
41. Aslum Press Almanack and Directory, p.781.
42. M. Sriramulu Chetty, Assistant Headmaster, 'Sir Pitty Theagaraya Chetti, Life Sketch', Golden Jubilee Souvenir, Theagaraya Chetti High School, p.3.
43. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர் கையெழுத்துப்படி, பக்.115-116.
44. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர் கையெழுத்துப்படி, பக்.1-15.
45. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.116.
46. P. Ramaswamy Chetty 'History of the Theagaraya Chetty. Hindu High School' Souvenir, Sir Theagaraya College, School Platinum Jubilee, Sir Theagaraya College Silver Jubilee, 1976, p.5
47. A.A. Nair, "Sir P. Theagaraya Chettiar" Justice Party Golden Jubilee Souvenir, 1968, pp.30-31.
48. மேற்படி, ப.31.
49. மேற்படி, ப.31.
50. The Mail, Feb.25, 1919 (NNR).
51. Proceedings of the Council of the Governor of Madras, (July to Dec.1920) Vol-XLVIII, p.324.
52. "The Manual Labour", The Hindu, Oct.20, 1920. 'சென்னைச் சட்டசபை - பிற்பகல் நடவடிக்கை - ஆரம்பக் கல்வி மசோதா', சுதேசமித்திரன், 29 செப்டம்பர், 1920.
53. சுதேசமித்திரன், 5, பிப்ரவரி, 1920.
54. Administrative Report of the Corporation of Madras, Year 1920-21, p.41.
55. மேற்படி, Year 1922-23, p.37.
56. Municipal Council Meeting Proceedings, on 3rd July 1923.
57. மேற்படி, 25th Aug.1923.
58. மேற்படி, on 17th July 1923; 22nd Aug.1917.

59. மேற்படி, on 25th Aug.1923.

60. திராவிடன், 22, நவம்பர் 1917.

61. Aslum press Almanack and Directory, Year 1885, p.1119.

62. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், பக்.117-118.

63. Christopher John Baker, The Politics of South India, p.64.

64. V. Thiruvenkataswamy (Ed.) 'List of Trustees' Pachaiappa's College Centinary Communication Book 1842-1942 (Madras 1942), p.42.

65. Christopher John Baker, The Politics of South India, p.64.

66. M. Rathnaswamy, 'The Justice Party as I know it', The Justice Party Golden Jubilee Souvenir, 1968, p.21.

67. செங்கல்வராயன் அவர்களை, (பச்சையப்பன் கல்லூரி முன்னாள் நூலகர்) ஆய்வாளர், 10.5.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

68. மேற்படி.

69. Justice W.S. Krishnaswamy Naidu, My Memories, p.4.

70. எஸ்.எஸ். அருணகிரிநாதர், 'உள்ளும் புறமும்', Golden Jubilee Souvenir, Theagaraya Chetti High School, 1948, p.22.

71. புலவர் தாமோதரன், 'நினைவில் நிற்பவர்',

Souvenir, Sir Theagaraya College, School Platinum Jubilee, Sir Theagaraya College Silver Jubilee, 1976, p.21.

72. மேற்படி, ப.3.

73. Victoria Technical Institute Memorial, 'An Account of the Work and the Exhibits in the new hall', Madras - 1909, Complied by order of the Council of the Institute, pp.5-7.

74. Stanely Reed, The Royal tour in India, The Record of the Tour T.R.H. the Prince of Wales in India and Burma, from Nov.1905 to March 1906, p.341.

75. திராவிடன் (தலையங்கம்), நவம்பர் 17, 1917.

76. சங்க விதிகளும் யதாஸ்தும், மநுர்குல தேவாங்க வாசக சாலை, சேலம், ப.19.

77. பண்டல பாளைய இந்து நடுநிலைப்பள்ளி, செயற்குழு அறிக்கை, 2.7.1922.

78. Stanely Reed, The Royal Tour in India, A Record of the Tour T.R.H. The Prince of Wales in India and Burma from Nov. 1905 to March 1906, p.344.

79. Christopher John Baker, The Politics of South India, 1920-1937, p.27.

80. மேற்படி, ப.28 (வி. அனந்தராவ் பந்துலு என்னும் முதிய பிராமணரின் குடும்ப ஆவணங்களிலிருந்து இக்கருத்தைப் பெற்றதாக ஜான் பேக்கர் குறிப்பிடுகிறார்).

81. Saroja Sundararajan, Sathyamurhti, A Political Biography, pp.9-10.

82. Aslum Press Almanack and Dictionary, 1901, p.1054.

83. M.L.C.P. 1910-11, p.418.

84. பி.டி. இராசன், 'வரவேற்புரை', Justice Party Golden Jubilee, Souvenir, 1968, P.XLV.

85. ஈ.வே.ரா. (பதிப்பாசிரியர்) குடியரசு; மே.10, 1925.

86. Spratt, D.M.K. in Power, p.26.

87. S.G. Vage (Ed.) Servant of India, Vol-IV, No.1, Feb.10th 1921, p.23.

88. Madras Mail, 19th July 1916 (NNR)

89. L.F. Rushbrook William, India in 1924-25, pp.167-168.

90. T. Varadarajulu Naidu, 'First Confederation', The Justice Movement, pp.136-137.

91. ஜனாபிமானி, புஸ்தகம்-7, ஸஞ்சிகை-4, பக்.192-194.

92. திராவிடன், ஜூன் 14, 1917.

93. Aslum Press Almanack and Directory 1912, p.1032.

# 5

# தியாகராயரின் தொழில், வாணிக வளர்ச்சிப் பணி

## 5.0. முன்னுரை

பொருளாதாரம் என்பது செல்வத்தின் இயல்பையும், அதன் ஆக்கம், பகிர்வு, துய்ப்பு ஆகியவற்றையும் பற்றிக் கூறுவதாகும்.[1] பொருளாதாரவியலின் தந்தை எனப் பேசப்பெறும் ஆடம் ஸ்மித் (Adam Smith) தமது நூலுக்கு 'நாடுகளின் செல்வத்தைப் பற்றிய விசாரணை' என்று பெயரிட்டார்.[2] எனவே, பொருளாதாரம் ஒரு நாட்டு மக்களின் பொருளாதாரச் செயல்களின் ஒட்டுமொத்தமேயாகும். இந்த ஒட்டுமொத்தமான கட்டுக்கோப்பையே பொருளாதாரம் என்று கூறலாம். பொருளாதார வளர்ச்சி ஏற்பட வேண்டுமாயின் வேளாண்மை, நாட்டுத் தொழில்கள் ஆகியவை செழித்து வளர வேண்டும். அவற்றிற்குப் போக்குவரத்து வளர்ச்சியும், வணிக வளர்ச்சியும் துணை நிற்றல் வேண்டும். 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கில ஆட்சியினால் நம் நாட்டு வேளாண்மை, தொழில்கள் ஓரளவு பெருகின. ஆயினும், அவை விரைவாக முன்னேற இயலவில்லை. பெரும்பாலும் ஆங்கிலேய முதலாளிகளே தொழில்களைத் தொடங்கி நடத்தி வந்தனர். இந்திய முதலாளிகளோ தொழிற்சாலைகளை நிறுவி நிர்வகிக்கும் திறனற்றவர்களாக இருந்தனர். அவர்களிடம் போதிய மூலதனமும் இருக்கவில்லை; வங்கிகளும் மிகக் குறைவாகவே இருந்தன. அத்துடன் தொழிற்சாலைகளுக்கு அரசின் ஆதரவு கிடைக்கவில்லை. இக்காரணங்களையெல்லாம் நன்குணர்ந்த தியாகராயர் இக்குறைகளை நீக்கி நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கு ஆவன செய்தலே தமது முதற்கடமை என்று எண்ணினார்.

அரசியல் சுதந்திரத்தைவிடப் பொருளாதாரச் சுதந்திரமே முதலில் அடையத் தக்கது என்பது அவரது கருத்து. மேலும், ஆங்கிலேயர்களின் அறிவியல் முன்னேற்றக் கருத்துக்களைத் துணைக் கொண்டு நம் நாட்டுத் தொழில்களை வளர்த்துக் கொள்ளவேண்டும் என்பதே அவருடைய தொழிற்கொள்கை

யாகும். இதனைச் செயல்படுத்த அவர் வகுத்த திட்டம் பெரும்பாலும் காந்தியடிகளின் திட்டம் போன்றதே எனலாம். காந்தியடிகள் தமது நிர்மாணத் திட்டத்தைத் தொடங்குவதற்கு முன்பே, அத்தகையதொரு திட்டத்தைத் தியாகராயர் முன்னோக்கோடு உருவாக்கி, அதனைச் செயல்படுத்த அரசைத் தூண்டிக் கொண்டேயிருந்தார். அரசின் முழு ஒத்துழைப்புடன் நம்நாட்டுப் பொருளாதாரத்தைச் சீர்படுத்துவதே அவரது குறிக்கோளாக இருந்தது. அதற்காக அவர் மேற்கொண்ட முயற்சிகளை இவ்வியலில் விரிவாகக் காணலாம்.

## 5.1. வேளாண்மை

இந்தியாவில் தொன்றுதொட்டு வேளாண்மையே முதன்மைத் தொழிலாக இருந்து வருகிறது. அதுவே உயர்ந்த தொழிலாகவும் போற்றப்படுகிறது. ஆயினும், மழையை நம்பியே உழவர்கள் பெரும்பாலும் வாழ்ந்து வருகின்றனர். மழையின்றி வறட்சியுறும் நாட்களில் உழவர்கள் பெருந் துன்பத்திற்காளாகின்றனர். நிலக்கிழாராக இருந்த தியாகராயர் அரசுடன் வாதாடி வறட்சிக்காலங்களில், உழவர்களின் வரிக் குறைப்பிற்கு வழி வகுத்தார்.[3] உழவர்களுக்குப் போதிய உரம் கிடைப்பதற்கும்,[4] நீர்ப்பாசனத் திட்டங்களை வகுப்பதற்கும்,[5] ஆழ் குழாய்க் கிணறுகள், எண்ணெய் இயந்திரங்கள் போன்றவற்றை அமைப்பதற்கும்[6] தக்க முயற்சிகளை மேற்கொண்டார். தாம் ஒரு நிலக்கிழாராக இருந்தும் ஏழை உழவர்களின் துயர்துடைக்க அரும்பாடுபட்டார். பயிர்த் தொழில் இல்லாத காலங்களில் உழவர்கள் வேறு சிறு தொழில்களில் ஈடுபட வேண்டுமென்று எடுத்துக் கூறினார்.[7] இம்முறையில் காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தையொத்த நிர்மாணத் திட்டத்தையே தியாகிராயர் செயல்படுத்த விரும்பினார். அதற்காகக் கிராமங்களில் சிறுசிறு தொழிற்சாலைகளை அமைக்குமாறு அரசை வற்புறுத்தினார்.

## 5.2.0. தொழில் வளர்ச்சி

வேளாண்மைக்கு அடுத்தபடியாக இடம்பெறுவன கைத்தொழில்கள். பருத்தி, எண்ணெய் வித்துக்கள், காடுகளில் விளையும் அவுரி, தேக்கு முதலிய மர வகைகள் நம்நாட்டுத் தொழில்களுக்கு மூலப் பொருள்களாக அமைந்து உள்ளன. அவற்றைப் பயன்படுத்திப் பல்வேறு தொழில்கள் பண்டைக் காலந்தொட்டு வளர்ந்து வந்துள்ளன. அவற்றை நாட்டுப்புறத் தொழில், நகர்ப்புறத் தொழில் என இருவகையாகப் பிரிக்கலாம். இவ்விருவகைத் தொழில்களும் செழித்தால் தான் நாட்டின் பொருளாதாரநிலை உயரும். நாட்டுப்புறங்களில் கிடைக்கும் கச்சாப் பொருள்களைப் பயன்படுத்தி, அங்குள்ள மக்களின் உழைப்பைக் கொண்டு, அத்தொழில்களை ஊக்குவிக்க வேண்டுமென்பதே தியாகராயரின் தொழிற் கொள்கையாக இருந்தது. வறுமையை நாட்டைவிட்டு அகற்ற அதுதான் சிறந்த வழி என்றும் கருதினார். எனவே, அவற்றின் வளர்ச்சிக்காக ஆவன செய்தார்.

## 5.2.1. நெசவுத்தொழில்

தியாகராயருக்கு நெசவுத்தொழில், குடும்பத்தொழிலாகவும் இருந்ததால் அதுபற்றிய செய்திகளை நன்கு அறிந்திருந்தார். தமது பட்டறிவையும், செல்வாக்கையும் பயன்படுத்தி, அத்தொழிலை வளரச் செய்தார். கைப்பொருளைச் செலவிட்டு நெசவுத் தொழிலுக்குப் புத்துயிரளித்தார். 'தேசிய ஏமவைப்பு நிதி மற்றும் தொழிற்துறைக் கழகம்' (National Fund & and Industrial Association) என்னும் ஓர் அமைப்பைத் தொடங்கி நெசவும் பிற கைத்தொழில்களும் புத்துயிர் பெறச் செய்தார்.[8] தமது இல்லத்துக்கருகில் சுமார் நூறு தறிகளைக் கொண்ட ஒரு நெசவாலை அமைத்துப் பலபேருக்கு வேலை வாய்ப்பளித்தார். இவரது நெசவாலையில் நெய்யப்பட்ட துணிகளும் கைக்குட்டைகளும் உலகச் சந்தைகளில் விலைபோயின. 'பிட்டி' முத்திரை[9] கொண்ட அக்கைக்குட்டைகள் உலக அரங்கில் மிகவும் புகழ் பெற்றனவாக விளங்கின. இவரது நெசவாலை பிட்டி நெசவாலை[10] (Pitti Weaving Factory) என்று அழைக்கப்பெற்றது.

அக்காலத்தில் நெசவாளர்கள் கைத்தறி நாடாவை ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கத்திற்குக் கையில்தான் தள்ளி நெசவு செய்து வந்தனர். 'கே' (Kay) என்னும் ஆங்கிலேயரால் விசை நாடா (Flying Shuttle) கண்டுபிடிக்கப் பெற்றது.[11] இதனை நம் நாட்டுத் தறிகளுக்கு ஏற்ற முறையில் எளிமைப்படுத்திப் பயன்படச் செய்தவர் தியாகராயரேயாவார். குஞ்சம் இழுக்கும் முறையில் பலருக்குத் தமது நெசவாலையிலேயே பயிற்சியளித்துப் பயன் பெறச் செய்தார். இம்முறையே இன்று நாடு முழுவதும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இந்த விசை நாடாவைக் கைக்கு அடக்கமானது (Very handy) என்று மகன்லால் காந்தி பாராட்டுகிறார்.[12] வெளிநாட்டுப் பொருள்களின் துணையின்றி அவர் அமைத்த நெசவாலையின் சிறப்பையும் அங்கு உற்பத்தியாகும் துணிகளின் தரத்தையும், அதன்மூலம் அவர் வெளிப்படுத்திய தேசிய உணர்வையும் நெவைசன் (Nevaison) பெரிதும் புகழ்ந்துள்ளார்.[13] தியாகராயரை 'நெசவுத் தொழிலின் வழி முனைவர்' என்று கூறினும் தவறு இல்லை.[14] ஆல்ஃபிரட் சாட்டர்டனும்[15] (Alfred Chatterton) பாலிகாவும்[16] (Baliga) தியாகராயரின் முயற்சிகளை விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

தியாகராயரின் முயற்சியால் அரசும் நெசவுத்தொழில் வளர்ச்சியில் ஊக்கங் காட்டத் தொடங்கிற்று. கைத்தறியில் 'ஜெக்காட்'[17] (Jecquard) அமைப்பை இணைக்க வேண்டும். வெளிநாட்டுத் துணிகளின் இறக்குமதியைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பன தியாகராயர் அரசுக்கு விடுத்த கோரிக்கைகளாகும்.[18] அரசு நெசவாளருக்கென 1908-ஆம் ஆண்டு ஒரு போட்டியும் மாநாடும் நடத்திற்று. இப்போட்டியில் விசை நாடாக்களின் சிறப்பு இன்னதென

உணரப்பெற்றது.[19] இதில் இந்தியா முழுவதிலுமுள்ள நெசவாளர்கள் கலந்து கொண்டனர். தியாகராயரும் இப்போட்டியில் கலந்து பல பரிசுகள் பெற்றார்.[20] அந்நாளைய நாளிதழ்கள் பலவும் இச்செய்தியை வெளியிட்டுத் தம் பாராட்டினைத் தெரிவித்தன.[21] மேலும், தியாகராயரின் தலைமையுரையையும், நெசவுத் தொழிலின் முன்னேற்றத்திற்காக அவர் கூறிய கருத்துக்களையும் வெளியிட்டு, இம்மாநாட்டிற்குத் தலைமை தாங்குவதற்கான தகுதி படைத்தவர் தியாகராயரே என்று ஒருமனதாக அவரை பாராட்டின.[22] இப்போட்டிகளில் பரிசு வழங்கிய ஆளுநரும், டி.வி. அனுமந்தராவ், தியாகராயர் போன்றோரின் பெரு முயற்சியும், தளரா உழைப்புமே இவ்வெற்றிக்குக் காரணம் என்பதைச் சுட்டிக் காட்டினார். அவர் தியாகராயரைக் "கிழக்கத்தியப் பண்பாடும், மேற்கத்தியப் பண்பாடும் இணைந்த இணைப்பாகத் திகழ்கிறார்"[23] என்று பாராட்டினார்.

நெசவுத்தொழில் கிராமக் கைத்தொழில்களின் முதுகெலும்பு போன்றது என்பதை விளக்கிய தியாகராயர் கீழ்க்குறிக்கப்பெறும் மூன்று பரிந்துரைகளை அரசுக்கு அளித்தார்.

1. மையக் கைத்தொழிலகம் ஒன்று இந்த மாநிலத்தில் நிறுவப் பெற்று, அங்கு கைத்தறி தொடர்பான பரிசோதனையும் ஆய்வுகளும் மேற்கொள்ளப்பெற வேண்டும்.

2. கைத்தறித் தொழில் மையங்களில் கைத்தறித் கூட்டுறவுக் கழகங்கள் அமைக்க வேண்டும்.

3. இந் நாட்டின் கைத்தறித் தொழிலை ஊக்குவிக்குமுகமாக அரசு உதவித் தொகைகள் அளிக்க வேண்டும்.[24]

நெசவாளர்களுக்கு ஏற்படும் இன்னல்களைக் களைவதிலும் தியாகராயர் முன்னின்றார். நெசவாளர்கள் நெசவுக்குரிய பாவு நூலைச் சாலையோரங்களில் வைத்துப் பாவு செய்வது வழக்கம். அது போக்குவரத்து இடையூறு உண்டு பண்ணும் என்று கருதி அரசு அதைத் தடுத்தபோது அவ்வாறு பாவு செய்வதைத் தவிர நெசவாளர்களுக்கு வேறு வழியில்லை என்று எடுத்துக்கூறி, நெசவாளர்கள் சாலையோரங்களில் பாவு செய்து கொள்ளுவதற்கான நிரந்தர அனுமதியைப் பெற்றுக் கொடுத்தார்.[25]

### 5.2.1.0 கைத்தறி நெசவுச்சங்கம்

இந்நெசவுத்தொழில் முன்னேற்றத்திற்காகக் கைத்தறி நெசவுச்சங்கம் ஒன்றைத் தோற்றுவித்தார். அதன் வழியாக ஏழை நெசவாளர்களுக்குப் பல்லாற்றானும் உதவி புரிந்தார் எனத் தெரிகிறது.[26] கைத்தறி ஆடைகளையே அணிய வேண்டுமென்னும் தம் கருத்தைப் பெரும்பாலும் செயவிலும் காட்டி வந்தார்.

தாம் எப்பொழுதும் கைத்தறியினால் நெய்யப்பெற்ற வேட்டி, தலைப் பாகை களையே அணிந்தார்.[27]

### 5.2.1.1. நெசவுத்தொழில் பற்றிய தியாகராயரின் கொள்கை விளக்கம்

சென்னைச் சட்டமன்றத்தில் தியாகராயர் ஆற்றிய உரை அவரது கொள்கை விளக்க உரையாக அமைந்துள்ளது. நெசவுத் தொழிலைக் குடிசைத் தொழில் நிலையில் வைத்திருப்பதை அவர் ஒத்துக் கொள்ளவில்லை. பண்டைக் காலத் திலிருந்த மேலாம் நிலையை இத்தொழில் மீண்டும் பெற வேண்டுமாயின், கை ராட்டைகளை நம்பிக் கொண்டிருப்பதில் பயனில்லை என்பதும், நெசவுத் தொழிலில் பல பிரிவுகளையும் (பாவு செய்தல், கஞ்சியிட்டு முர முரப்பாக்கு தல், நூல் நூற்றல், நூலை முறுக்கேற்றுதல்) திறம்படச் செய்வதற்குச் சிறுசிறு பொறிகள் வடிவமைக்கப்பட வேண்டும் என்பதும் அவர் கருத்து. அதற்கு ஆங்கில அரசு முழு ஒத்துழைப்பையும் நல்கி, முன்னேற்றத் திட்டங்களை வகுக்க வேண்டுமென்று அரசை வற்புறுத்தினார்.[28]

நெசவுத்தொழிலுக்கு ஏற்பட்டுள்ள இடையூறுகளையும், நம்நாட்டு நூலுக்கு விதிக்கப்பட்ட வரியையும் நீக்குவதற்காக அவர் மேற்கொண்ட முயற்சிகள் ஏராளம். வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் நூலுக்கு வரிவிதிக்க வேண்டியதன் தேவையையுணர்ந்து, நாடாளுமன்ற உறுப்பினரான சி. ஏ. இன்ஸ் (C.A. Inns) என்பாரைக் கொண்டு நாடாளுமன்றத்தில் எடுத்துரைக்கச் செய்தார்.[29]

தியாகராயர் தாம் மறைவதற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்னர்ச் சென் னையில் நடைபெற்ற தேவாங்கர் மாநாட்டுக் கைத்தறிக் கண்காட்சியைத் திறந்து வைத்து உரையாற்றுகையில், நெசவுத்தொழிலின் பண்டைய நிலையையும், இக்கால நிலையையும் எடுத்துக்கூறி, நெசவாளர்கள் குடிப்பழக்கம், சோம்பல் போன்ற தீய பழக்கங்களினின்றும் விலகி, நன்றாக உழைக்க முன்வர வேண்டு மென்று கேட்டுக் கொண்டார். அத்துடன் ஒவ்வொரு நெசவாளர் குடும்பத் திலும் ஒருவராவது உயர்கல்வி கற்று மேனிலையடைய வேண்டுமென்றும் வற்புறுத்தினார்.[30] கைராட்டை இக்காலத்திற்குப் பயன்படாது என்பது அவரது உறுதியான நம்பிக்கையாக இருந்தது.

### 5.2.3. சாயத்தொழில்

நெசவுத் தொழிலோடு தொடர்புடையது சாயத்தொழில். ஜெர்மன் நாட்டு இரசாயனச் சாயங்கள் இறக்குமதி செய்யப்படுவதால் நம்நாட்டுச் சாயத்தொழில் நலிவுறத் தொடங்கிற்று. தியாகராயர் நாட்டுச்சாய உற்பத்தியையும் மேற்கொண் டார். பிற்காலத்தில் இத்தொழிலினால் அவருடைய நிறுவனத்திற்குப் பெரும்

பொருளிழப்பு நேர்ந்ததாகவும் தெரிகிறது.[31] இத்தொழிலின் பண்டைச் சிறப்பை எடுத்துக்கூறி, இத்தொழிலுக்கு மீண்டும் புத்துயிரளிக்க வேண்டியதன் தேவையை அரசுக்கு வலியுறுத்தினார்.[32] அதற்கேற்ற சிறுபொறிகளைக் கண்டுபிடிக் கவும்.[33] ஆய்வுப்பணிகளை மேற்கொள்ளவும் அரசுக்கு எழுத்து மூலமாகவும் வேண்டுகோள் விடுத்தார்.

### 5.2.4. தோல் பதனிடும் தொழில்

தியாகராயர் நம்நாட்டு மூலப்பொருள்களை நன்கு பயன்படுத்தி நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும், பொருளாதாரத்திற்கும் துணை செய்யும் நோக்குடன் தாமே தோல் பதனிடும் தொழிலையும் நடத்தி வந்தார். இவர்களால் பதனிடப் பெற்ற தோல் 'பிட்டி' என்னும் முத்திரையுடன் மேல் நாடுகளில் புகழ்பெற்றன. அவை உறுதியும் தரமும் தூய்மையும் வாய்ந்தனவாக இருந்தமையால் எந்த விதமான சோதனைக்கும் உட்படுத்தாமல் ஏற்றுக் கொள்ளப்பெற்றன.

இவருடைய தோற்கிடங்கும், பதனிடும் தொழிற்சாலையும் திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் இன்றைய 'விம்கோ' தொழிற்சாலைக்கருகில் அமைந்து இருந்தன. பழைய கட்டடங்கள் இன்னும் அதே நிலையில் காணப் படுகின் றன.[35] இவரது மற்றொரு தொழிற்சாலை திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் 'தாங்கல்' என்னுமிடத்தில் அமைந்திருந்தது. அத்தொழிற்சாலையில் பணியாற் றிய தொழிலாளர்களுக்குக் குடியிருப்புக்கள் அமைத்துக் கொள்ளுவதற்காகப் பரந்த நிலப்பரப்பைத் தியாகராயர் இலவசமாக வழங்கியுள்ளார். அப்பகுதியைச் சார்ந்த மக்கள் அவ்விடத்திற்குத் தியாகராயரின் நினைவாகத் 'தியாகராயபுரம்' என்று பெயரிட்டுள்ளனர்.[36] தியாகராயருக்கு உப்பளங்களும் இருந்தன.[37] மேலும், சுண்ணாம்புக்குளம் என்னுமிடத்தில் சுண்ணாம்புக்காளவாயும், அங்கிருந்து சுண்ணாம்பை ஏற்றி வருவதற்கு நூறு படகுகளும் இவர் வைத்திருந்தார்[38] என்பது தெரியவருகிறது. பெருந்தொழில் நடத்துபவர்கள் அதற்குத் தேவைப் படும் துணைத் தொழில்களையும் தாங்களே நடத்தினால்தான் தங்கள் தொழி லில் சிறந்து விளங்கவியலும் என்னும் தொழிலியற் கோட்பாட்டைத் தியாக ராயர் நன்குணர்ந்து செயல்படுத்தினார் என்பது இதனால் விளங்குகிறது.

அக்காலத்தில் ஆட்டுத்தோல், மாட்டுத்தோல், நிலக்கடலை, தேயிலை, 'ரப்பர்' முதலியன சென்னையிலிருந்து மிகப் பெருமளவில் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பெற்றன.[39] இவ்வேற்றுமதி தொடர் பாக வணிகர்களுக்கு இடையூறு நேர்ந்தபோதெல்லாம் அரசுக்கு எடுத்துக் கூறி இன்னல் களைந்தார்.[40] அரசுத் தரப்பில் தோல் நுட்பப்பள்ளி அமைக்கப் பெற வேண்டுமென்று வற்புறுத்தினார்.[41] இதன் விளைவாகப் பின்னர் பல்லா வரத்தில் அரசுத் தரப்பில் தோல் தொழிற்சாலையும், கிண்டியில் தோல் தொழிற்

பள்ளியும் நிறுவப்பெற்றன. தோல் பதனிடும் தொழிலாளர்களின் நலனுக்காக வும் அரசுடன் வாதிட்டுத் தொழிலாளர்களின் குறைகளையும் நீக்கினார்.[42] சென்னைத் தோல் ஏற்றுமதியை அரசு தடுத்தபோது அரசுடன் போராடி, அவ் வாணிகத்தை மீண்டும் நிலை நாட்டினார்.[43] தனிப்பட்ட குழுமங்கள் வாயிலா கத் தோல் ஏற்றுமதி செய்யப்படுவதற்குத் தடை விதித்தபோதும், அரசை எதிர்த்து நின்று, ஐம்பதாயிரம் தொழிலாளர்கள் பாதிக்கப்படுவார்கள் என்ப தைச் சுட்டிக்காட்டி அத்தடையை நீக்கச் செய்தார்.[44] இந்திய அரசு தொழில் வணிகத்துறை உறுப்பினர் சர். ஜார்ஜ் பர்னஸைச் (Sir George Barnes) சந்தித் துத் தோல்தொழில், ஏற்றுமதி போன்றவற்றில் தொழிலாளர்களுக்கும், வணிகர் களுக்கும் உள்ள குறைகளை எடுத்துக்கூறி அவற்றை நீக்க ஆவன செய்தார்.[45]

இங்ஙனம், தியாகராயர் வேளாண்மை, கைத்தறி நெசவு, சாயத்தொழில், தோல் பதனிடுதல் முதலிய தொழில்களைத் தாமே முன்னின்று நடத்தித் தொழில், வாணிக வளர்ச்சிக்கு உதவினார்.

## 5.3. தொழில் வளர்ச்சி மாநாடுகள்

நம்நாட்டு மூலப்பொருள்களைப் பயன்படுத்திச் சிறுதொழில்களைப் பெரு கச் செய்யவேண்டுமென்பதில் தியாகராயர் தணியா ஆர்வம் கொண்டு இருந் தார். நெசவுத்தொழில், அதற்கான துணைத் தொழில்கள் போன்றவற்றிற்கு எளிய பொறிகள் கண்டுபிடிக்கப்படவேண்டும் என்று அரசை அத்துறையில் தூண்டி னார். எண்ணெய் பிழியும் ஆலைகள், சர்க்கரை ஆலைகள், சீமைக்காரைத் (Cement) தொழிற்சாலைகள், கண்ணாடி, சோப்புத் தொழிற்சாலைகள் ஆகி யவை விரைவில் நிறுவப்பட வேண்டுமென்றும், அவற்றிற்கான வசதிகள் நாட்டில் எங்கெங்கு எவ்வெவ்வாறு அமைந்துள்ளன என்பதைப் பற்றியும் தக்க சான்றுகளுடன் அரசுக்கு எடுத்துரைத்தார். இக்கருத்துக்களைத் தாம் கலந்து கொள்ளும் தொழில் வளர்ச்சி மாநாடுகளிலெல்லாம் மீண்டும் மீண்டும் வற்புறுத்தினார்.[46]

தொழில் வளர்ச்சிக்கென அரசு அமைத்த கீழ்காணும் குழுக்கள் பலவற் றிலும் உறுப்பினராக இருந்து தமது பரிந்துரைகளை அளித்தார்.

(க) கைத்தொழில்களுடன், வேளாண்மைத் தொழில் வளர்ச்சியிலும் நாட் டங் கொண்ட விக்டோரியாத் தொழிற்கூடம், வேளாண்மைத் தொழில் வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ளுவதற்காக ஆளுநர் ஆம்ப்தில் பிரபு (Lord Ampthill) தலைமையில் அமைக்கப்பெற்ற குழு.[47]

(உ) புதுத்தொழில்களைத் தொடங்குவதற்கும், வளர்ச்சியுறாத தொழில்களை வளர்ச்சியுறச் செய்வதற்கும், குடிசைத் தொழில்களை வளர்ப்பதற்

கும் அரசு கடன் வழங்குதல், புதிய பொறிகளை நிறுவுதல், அவற்றிற் கான ஆய்வுகளை மேற்கொள்ளுதல், தொழிலாளர்கள் பங்குதாரர் களாகச் சேர வாய்ப்பளித்தல், முதலீடு செய்வதற்கும், மிகைப்பற்றுப் (Overdraft) பெறுவதற்கும், முன்பணம் பெறுவதற்கும் உதவுதல், நிலம், மூலப்பொருள், விறகு, நீர் ஆகியவற்றைப் பெறுவதில் சலுகையளித்தல் இன்னபிற திட்டங்களைச் செயல்படுத்துவதற்கென அமைக்கப்பெற்ற குழு.[48]

(ங) கைத்தொழில் ஆலோசனைக் குழு.[49]

(ச) அனைத்திந்தியத் தொழில் மாநாட்டுக் குழு.[50]

தியாகராயரின் இத்தகைய முயற்சிகளின் விளைவாகப் பின்வரும் பயன்கள் விளைந்தன.

தொழிற்றுறைக்கென ஓர் இயக்குநரகம் நிறுவப்பெற்று, இயக்குநர் ஒருவர் நியமிக்கப் பெற்றார். அதனால் கைத்தொழில்கள் பலவற்றின் வளர்ச்சிக்கும் வழிவகுக்கப் பெற்றது.[51] இதனை இந்தியா அமைச்சர் மார்லி ஏற்றுக் கொள்ள மறுத்தார். தியாகராயர் இதனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து அமைச்சரைப் பணி யச் செய்து, தொழிற்றுரை இயக்குநரகத்தை மீண்டும் நிலைபெறச் செய்தார்.[52] இது தொடர்பாகத் தாமே டெல்லிக்குச் சென்று அரசப் பிரதிநிதியை நேரில் கண்டு பேசியதாகவும் தெரிகிறது.[53] தியாகராயரின் விடாமுயற்சியால் விக்டோரி யாத் தொழிற்கூடம் நிறுவப்பெற்றது.[54]

## 5.4. இந்திய மருத்துவத் தொழில்

இந்திய மருத்துவத் தொழில் பண்டு தொட்டுச் சிறப்புற்று விளங்கிய ஒன் றாகும். நம்நாட்டு மலைகளிலும் காடுகளிலும் விளையும் மூலிகைகள் பல்திறப் பட்ட நோய்களையும் நீக்கும் ஆற்றல் வாய்ந்தனவாக இருந்தன. இம்மூலிகை களைப் பயன்படுத்தி, நோய்களைத் தீர்க்கும் மருத்துவத் தொழிலும் சிறந்த நிலையில் இருந்தது. ஆங்கிலேயரின் வருகைக்குப்பின் இத்தொழிலும் மெல்ல மெல்ல நலிவுறத் தொடங்கிற்று. இதையுணர்ந்த தியாகராயர் இத்துறையிலும் தமது கவனத்தைச் செலுத்தி இந்திய மருத்துவ முறைகள் மீண்டும் தழைப் பதற்கு ஆவன செய்தார். சென்னை அரசு, மருத்துவக் கல்லூரிகள் அமைக்க முற்பட்டபொழுது, அவற்றில் ஒன்று இந்திய மருத்துவம் கற்பிப்பதாக அமைய வேண்டுமென்று வற்புறுத்தினார். மாநிலத் தொழிலுதவிச் சட்டத்தில் இந்திய மருத்துவத் தொழிலுக்கு உதவும் பிரிவையும் சேர்க்கச் செய்தார். இவரது தலைமையிலான ஜஸ்டிஸ் கட்சி இச்சட்டத்தை[55] நிறைவேற்றி இந்திய மருத்து வத் துறைக்குப் புத்துயிரளித்தது. சித்த மருத்துவத்தைத் தமிழ் மருத்துவம்

என்று கூறி, அதன் சிறப்பை அனைவரும் அறியச் செய்தார். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு மருத்துவமா என்று ஒருசிலர் எள்ளி நகையாடினாலும், தியாகராயர், உறுதியுடன் நின்று சித்தமருத்துவம் பண்டைத் தமிழ் மருத்துவம் என்பதை விளக்கிக் கூறி அதனைப் பயிற்றுவிக்கக் கல்லூரியில் சித்தமருத்துவப் பிரிவைத் தோற்றுவித்தார்.[56]

## 5.5. சர். வில்லியம் மேயருடன் சந்திப்பு

1916-இல் நிதிக்குழு உறுப்பினரான சர். வில்லியம் மேயர் சென்னைக்கு வந்தபொழுது அவரைச் சந்தித்து, எந்த முடிவுகள் எடுத்தாலும், அவற்றில் இந்தியர்களுடைய கருத்துக்களுக்குப் போதுமான இடமளிக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினார்.[57]

## 5.6. போக்குவரத்துச் சாதனங்கள்

வாணிக வளர்ச்சிக்குப் போக்குவரத்துச் சாதனங்கள் நரம்பு மண்டலம் போன்றவையாகும். எனவே, அமிழ்தண்டூர்தி (Tr'' ''), பேருந்துகளின் வளர்ச்சிக்கு வழி வகுத்தார். பக்கிங்காம் கால்வாயை விரிவுபடுத்தி, அதன்மூலம் நீர்வழிப் போக்குவரத்தை ஏற்படுத்தலாம் என்று திட்டம் வகுத்துக் கொடுத்தார்.[58] ஆனால், இத்திட்டம் அரசினரால் சரிவர நிறைவேற்றப் பெறவில்லை. இன்றைய தமிழக அரசு இத்திட்டத்தைச் செயல்படுத்' விழைகிறது[59] என்பதைக் காணும்போது, தியாகராயரின் தொழில் - வணிகச் சிந்தனை எத்துணை முன்னோக்குடையது என்பது உணரத்தக்கது.

## 5.7. தென்னிந்திய வர்த்தகச் சங்கம்

வாணிகம் முழுவதும் ஐரோப்பியர் கையில் இருப்பதையும், அதனால் இந்திய வாணிக வளர்ச்சி தடைப்படுவதையும் உணர்ந்து மனம் நொந்த தியாகராயர், இந்திய வாணிக வளர்ச்சிக்கென ஓர் அமைப்பு வேண்டும் என்று கருதினார். அதன் விளைவாக 1909-ஆம் ஆண்டு தென்னிந்திய வர்த்தக சங்கம் அமைக்கப்பெற்றது.[60] தியாகராயர் 1909 முதல் 1921 வரை இதன் தலைவராய் இருந்து பணியாற்றினார். நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கான மக்கள் கருத்துக்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக இச்சங்கம் திகழ்ந்தது. தியாகராயர் பொதுவாகப் பொது மக்களுக்கும், குறிப்பாக வணிகர்களுக்கும் ஏற்படும் இடையூறுகளை அரசுக்கு எடுத்துக்கூறி, அவற்றைக் களைந்திடப் பாடுபட்டார். வணிகர்கள் தங்களுக்கெனத் தனிமுத்திரைகள் பெறுதல்,[61] இலங்கை - இந்தியப் படகுப் போக்குவரத்தைப் பாதுகாப்புடன் நடத்தல்,[62] வணிகர் சங்க உறுப்பினர்களுக்கான நூலகம் அமைத்தல்,[63] கொப்பரை ஏற்றுமதியை விரிவுபடுத்துதல்[64] ஆகிய பல நன்மைகளை இச்சங்கத்தின் மூலம் தியாகராயர் பெற்றுத் தந்தார்.

இந்தியரல்லாதாரின் வணிகத்திற்கு முற்றுப்புள்ளி வைத்து, இந்தியாவைப் பொருளாதாரச் சுதந்திரம் பெறச் செய்வதே தமது குறிக்கோள் என்பதை அரசுக்கு எடுத்துரைத்து ஓரளவு வெற்றியும் கண்டார்.[65] சங்கப் பிரதிநிதிகள் சட்டமன்றத்தில் இடம் பெறவும் ஆவன செய்தார்.[66] இந்தியக் கம்பெனிச் சட்டம் கொண்டுவரப்பட்டபோது அதன் குறைகளைச் சுட்டிக்காட்டி, ஆங் கிலக் குழுமங்களுக்கும், இந்தியக் குழுமங்களுக்குமிடையே அரசு எவ்வித வேற்றுமையையும் பாராட்டாது ஒரே மாதிரி நடத்த வேண்டுமென்று வற்புறுத்தி வெற்றியும் பெற்றார்.[67] அரசுக்கு அவ்வப்போது கடிதங்கள் மூலம் தம் கருத் துக்களை எடுத்துக்கூறி, இந்தியத் தொழில் - வாணிக வளர்ச்சிக்கு ஓயாது உழைத்தார்.[68] இதனால் தென்னிந்திய வர்த்தக சங்கம், வாணிகத் தொழில் வளர்ச்சிக்குப் பாடுபடும் அமைப்புக்களில் தலை சிறந்ததாக விளங்கிற்று. இவரது தொண்டினைப் பாராட்டுமுகமாக இவரது உருவப்படம் சங்கக் கட்ட டத்தில் திறந்து வைக்கப் பெற்றுள்ளது.[69]

## 5.8. சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழகம் (Port Trust, Madras)

தியாகராயர் சென்னைத் துறைமுகப் பொறுப்புக்கழகத்தின் (Port Trust, Madras) உறுப்பினராக 1912 முதல் 1918 வரை பணியாற்றினார்.[70] இக்கழக உறுப்பினர் என்ற முறையில் தியாகராயர் தொழில் - வணிக வளர்ச்சிக்கான திட்டங்களைச் செயல்படுத்துவதில் முன்னின்றார். துறைமுகத்தில் வணிகர்கள் தங்கள் பொருள்களைப் பாதுகாப்புடன் வைப்பதற்கும், எளிதாகக் கப்பல்களில் ஏற்றுவதற்கும், வானிலை அறிக்கைகளை முறையாக அறிவிப்பதற்கும் தக்க ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. இவற்றைப் பற்றிய விரிவான விளக்கங்கள் கழ கக் குறிப்பேடுகளிலும்,[71] ‘அஸ்லும் பிரஸ் அல்மனேக் அண்டு டைரக்டரி’ (Aslum Press Almanack and Directory) என்ற நூலிலும் காணப்படுகின்றது.[72]

## 5.9. கூட்டுறவு முறை

கூட்டுறவு முறையே பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரியும் என்பது தியாகராயரின் பொருளாதாரக் கொள்கையாகும். எனவே, கூட்டுறவு முறை யில் வங்கி அமைத்து, அதன் மூலமாக ஏழை மக்கள் கடன் வசதி பெறச் செய்ய விரும்பினார். தம் நண்பர்களுடன் இணைந்து ‘நகரக் கூட்டுறவு வீட்டுத் திட்ட நிறுவனம்’ (The city co-operation Housing Society) என்னும் நிறுவனத்தையும், ஒரு வங்கியையும் நிறுவினார்.[73] இந்நிறுவனம் தொழில் வளர்ச்சிக்கு உதவுவதுடன், எழை மக்களுக்கு வீடுகட்டக் கடனுதவி யும் செய்து வந்தது; இன்னும் செய்து வருகிறது. தியாகராயர் இந்நிறுவனத்தின் தொடக்க காலத்திலிருந்து சுமார் பத்தாண்டுகள் இதன் தலைவராக இருந்து பணியாற்றினார்.[74]

## 5.10. தொழிலாளர் நலன்

தொழில்வளம் பெருக வேண்டுமாயின் தொழிலாளர்களின் நலன் காக்கப் படவேண்டும் என்பது தொழிலியற் கோட்பாடாகும். இக்கோட்பாட்டை நன் குணர்ந்த தியாகராயர் தாம் ஒரு தொழிலதிபராக இருந்தும், தொழிலாளர்களின் நலனில் அக்கறை காட்டினார். 1918-ஆம் ஆண்டு திரு. வி. க. அவர்களால் நிறுவப்பெற்ற சென்னைத் தொழிற்சங்கத்திற்குத் தமது முழு ஒத்துழைப்பை யும் நல்கினார். இச்சங்கம்தான் இந்தியாவிலேயே முதன்முதல் தொழிற்சங்க முறை அடிப்படையில் தொடங்கப்பெற்ற சங்கமாகும்.[75]

தியாகராயர் தொழிலாளர்களின் பணி நேரத்தைக் குறைத்தல், பெண் தொழிலாளர்களின் வசதிகளைக் கூட்டுதல், போதுமான சுகாதார வசதிகளை யும் வாழ்விடங்களையும் தொழிலாளர்களுக்கு அமைத்துக் கொடுத்தல் ஆகிய தொழிலாளர் நலத்திற்கான பல தீர்மானங்களை நிறைவேற்றி அரசுக்கு அனுப் பினார்.[76] அதற்கேற்ற வகையில் தொழிற்சாலைச் சட்டத்தைத் திருத்தி அமைக் கச் செய்தார்.

1921-ஆம் ஆண்டு பஞ்சாலைத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைத் தடுத் துத் தொழிலாளர் நலத்திற்கு ஆவன செய்தார்.[77] இம் முயற்சியை அரசும், தொழிலாளரும் மகிழ்ந்து பாராட்டினர்.[78]

## 5.11. தியாகராயரின் தொழிலியற் சிந்தனை

தொழிலாளர் என்றும் தொழிலாளர்களாகவே இராமல், படிப்படியாகத் தங்களைத் தொழிலதிபர்களாக வளர்த்துக்கொண்டு, தொழில் வளத்தைப் பெருக்க வேண்டும் என்பதே தியாகராயரின் தொழிலியற் சிந்தனை. இத்தகைய கருத்துக்களை மக்கள் எண்ணிப் பார்க்கவும் நினைக்காத அக்காலத்திலேயே தியாகராயர் தமது இச்சிந்தனையை அஞ்சாது வெளிப்படுத்தினார்.[79] ஆனால், அக்காலத்தில் நாடு இச்சிந்தனையை ஏற்கும் திறம் பெற்றிருக்கவில்லை.

அரசே பல்வேறு தொழில்களைத் தொடங்குதல், அவற்றின் வளர்ச்சிக் கான ஆய்வுகளை மேற்கொள்ளுதல், அவற்றில் இந்திய மாணாக்கர்களுக்குப் போதிய பயிற்சியளித்தல், பின்னர், அத்தொழில்களை இந்தியர்களிடமே ஒப்படைத்தல் என்பதே தியாகராயரின் தொழிலியற் சிந்தனையின் மற்றொரு நிலையாகும். அரசு தொழில் துறையில் இந்திய மக்களுக்குப் போட்டியாக இராமல் வழிகாட்டியாக இருக்கவேண்டும் என்பதே அவரது அவா. இதற்குத் தடையாக இருக்கும் ஆங்கிலேயரை எதிர்க்கவும் கண்டிக்கவும் அவர் என் றும் தயங்கியதில்லை. "ஆங்கிலேயத் தொழிலதிபர்கள் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பர்களேயாயினும் எனது நாட்டுத் தொழில் வளத்துக்காக அவர்களது நட்பை இழக்கவும் தயாராக இருக்கிறேன். மேலும், அவர்கள்

என்மீது பகை கொள்ளினும் அப்பகையை வரவேற்கவும் தயங்கேன்”[50] என்னும் அவரது கூற்றே இதனை மெய்ப்பிக்கிறது.

## 5.12. தியாகராயரின் சுதேசிய உணர்வு

ஆங்கில அரசின் ஒத்துழைப்பைத் தொழில் வளத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ளுவதில் ஆர்வம் மிக்கவராக இருந்ததால் தியாகராயரை அக்கால அரசியல்வாதிகள் ‘ஆங்கிலேயரின் அடிவருடி’ என்று இகழ்ந்தனர். ஆனால் அவருடைய சுதேசிய உணர்வு அக்காலச் சுயாட்சிப் போராட்ட வீரர்களின் சுதேசிய உணர்விற்குச் சற்றும் சளைத்ததன்று என்பதற்கு ஒரு நிகழ்ச்சியைக் குறிக்கலாம். ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இளவரசராக இருந்தபோது 1905-இல் இந்தியாவிற்கு வருகை தந்தார். தியாகராயர் இளவரசருக்கு அளிக்கும் அன்பளிப்பு தென்னிந்தியத் தேசியக் கைவினைப் பொருளாக இருக்கவேண்டும்; தென்னிந்தியக் கலை நுட்பத்தின் பெருமையை விளக்குவதாக இருக்க வேண்டும் என்று கூறிச் சிறந்த கைவேலைப் பாடமைந்த சந்தன மரப்பெட்டியில் வரவேற்பிதழை வைத்துப் பரிசாக வழங்க ஏற்பாடு செய்த நிகழ்ச்சி[51] அவரது சுதேசியப் பற்றை உணர்த்துவதாகும்.

### இயல் சுருக்கம்

தியாகராயர் வேளாண்மைத் தொழிலின் முன்னேற்றத்திற்காகப் பல திட்டங்களை எடுத்துரைத்தார். நம் நாட்டுத் தொழில் வளர்ச்சியுற வேண்டுமென்ற நோக்கில் நெசவு, தோல்பதனிடுதல், சாயத்தொழில் போன்ற சில தொழில்களைத் தாமே மேற்கொண்டு நடத்தினார். அவற்றில் புதுமுறைகளைப் புகுத்தினார். கைத்தறிச் சங்கத்தைத் தோற்றுவித்தார். வெளிநாட்டு வாணிகத்தையும் மேற்கொண்டுத் தரமான தமது பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ததன் மூலம் நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்குத் துணை நின்றார். நம் நாட்டுப் பொருள்களின் சிறப்பை வெளிநாட்டினரும் உணரச் செய்தார். பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரியும் பல்வேறு கருத்துக்களைத் தாம் கலந்து கொண்ட மாநாடுகளிலும், அரசுத் துறைக் குழுக்களிடமும் ஓயாது எடுத்துரைத்துத் தொழிற்றுறை இயக்குநரகம், விக்டோரியா தொழில் நுட்பக்கூடம் ஆகியவை எற்பட வழிவகுத்தார். தென்னிந்திய வர்த்தக சங்கத்தைத் தோற்றுவித்து அதன்மூலம் வணிகர்களின் இடர் களையப் பாடுபட்டார். துறைமுகப் பொறுப்புக் கழகத்தில் உறுப்பினராக இருந்து, வாணிகம் பெருகுதற்கான முயற்சிகளை மேற்கொண்டார். இந்திய மருத்துவத் தொழிலின் மறுமலர்ச்சிக்கு ஆவன செய்தார். போக்குவரத்துத் துறையில் பல சீர்திருத்தங்களுக்கு அடிகோலினார். கூட்டுறவு வங்கி அமைத்துக் கடனுதவி வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

தொழிற்கல்வி பெருக ஆவன செய்தார்; தொழிலாளர் நலனுக்கான முயற்சிகளையும், திட்டங்களையும் மேற்கொண்டு, அரசின் உதவியுடன் செயல்படுத்தினார்; சுதேசிய உணர்வு மிக்கவராதலால் நம்நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு இடையூறு செய்யும் ஆங்கிலேயர்களை அஞ்சாது எதிர்த்து வாதாடி வெற்றி கண்டார்.

அந்நிலையில் அக்காலத்துத் தோன்றிய சுதேசியவாதிகளில் தியாகராயர் தலைசிறந்து நின்றார். வறட்டுக் கொள்கைக்காரராக இல்லாமல் செயல்படுத்தும் திட்டங்களை வகுக்கக்கூடிய சிந்தனையாளராக, (Practical Ideolist) கொள்கைப் பிடிப்பாளராக இருந்து நாட்டின் தொழில், வணிக வளர்ச்சிக்கு அவர் ஆற்றிய பணி சீரிய பணியாகும்.

## எண் விளக்கம்

1. ஜே. எஸ். மில்லின் மேற்கோள், திரு. சி. வேலாயுதம், பொருளாதாரம், ப.8.
2. மே.கு. நூல், ப.8
3. Proceeding of the Legislative council of the Governor of Madras, 7th March 1911, pp.280 -300.
4. மேற்படி, 21st February 1911, p.21.
5. The Andrapatrika, 16th July 1920 (NNR).
6. South Indian Chamber of Commerce - Annual Report 1911 - 1912, pp.134 -135.
7. A. Govindaraja Mudaliar (Ed.), The Weaving Competition and Conference, pp. 58-73.
8. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.59.
9. 'பிட்டி' - என்பது தியாகராயரின் குடும்பப் பெயர். தேவாங்கர்கள் தமக்குள் பல குடும்பப் பிரிவுகளைக் கொண்டவர்கள். சில குடும்பங்களுக்குச் சேர்ந்து ஒரு ரிஷியின் கோத்திரம் அமைந்திருக்கும். அந்தக் கோத்திரத்தைச் சார்ந்த குடும்பங்கள் தாயாதிக் குடும்பங்களாகும். அவர்கள் தமக்குள் திருமணவுறவு கொள்ள மாட்டார்கள். பேர்செட்லு, கலவா, மொசனம், கொசனம் என்று பல குடும்பப் பெயர்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று 'பிட்டி' என்பது. தியாகராயர் தமது குடும்பப் பெயராகிய பிட்டி என்பதைத் தமது வாணிப முத்திரையாகப் (Trade mark) பயன்படுத்தினார்.
10. Aslum Press Almanack and Directory, 1920, p.1541.
11. Leonards Metronome, Modern Reference Encyclopedia, Vol -12, p.98.

12. Maganlal Gandhi, 'A Modern Weaving School', Young India, Vol - 111, 8th Sepetmber 1921, p.287.

13. Henry W. Nevaison, The New Spirit in India pp.123- 124.

14. Mohammed Ibrahim Sahib Bahadur, Municipal Council Meeting Proceedings on 1st may 1925.

15. Alfred Chatterton, Report of the Salem weaving factory, pp. 14, 19, 21.

அரசுக்குழுவின் குறிப்பும் இதனை விளக்குகிறது.

Report of the fact - finding committee (Hand-loom and Mills) by Government of India , 1952, p. 33.

16. B.S. Baliga, Compedium on History of Handloom Industry in Madras, pp.1-11.

17. 'ஜெக்காட்' என்பது கைத்தறிகளில் சித்திரப்பூ வேலைக்குரிய இசைவு வாய்ப்பு அளிக்கும் ஒரு அமைப்பு.

18. Southern India Chamber of Commerce, Annual Report 1911-1912, pp.134-135.

19. B.S. Baliga, Compedium on History of Handloom Industry in Madras, p.12

20. A. Govindaraja Mudaliar (Ed.), The Weaving Competition and Conference, pp.52-53.

Special Prizes

1. Dungaries (20's) - P. Theagaraya Chetty's Pit loom with fly-shuttle, Rs.50.
2. Mulls (60's) - P. Theagaraya Chetty's fram loom with fly-shuttle, Rs.100.
3. P. Theagaraya Chetty's Pit loom with fly shuttle Rs.75.
4. Arani Thupta, Etc. (100's) - P. Theagaraya Chetty's Pit loom with fly-shuttle Rs.50.
5. Madras Handkerchiefs (40- 40's) - P. Theagaraya Chetty's fram loom with fly-shuttle Rs.100.
6. and Pit loom with fly-shuttle Rs.75.
7. (60-40's) - P. Theagaraya Chetty's Fram loom and fly-shuttle Rs.100.
8. and Pit loom and fly-shuttle Rs.75.

Weavers's Prizes

1. (20's) K. Gangiah Chetty (P. Theagaraya Chetty) Rs.25
2. (60's) Ayalu Chetty Abbu Chetty (P. Theagaraya Chetty) Silver Medal & Rs.25

3. (40-40's) K. Munuswamy Gurwappa (P. Theagaraya Chetty) Bronze Medal & Rs.25
4. (60-40's) Narayana Chetty (P. Theagaraya Chetty) Silver Medal & Rs.25

   Lingiah Chetty (P. Theagaraya Chetty) Bronze Medal & Rs.25.
5. Madras Handkerchiefs (60's)

   Polu Chetty (P. Theagaraya Chetty) Rs.75

   Siddiah Chetty (P. Theagaraya Chetty) Rs.75

21. சுதேசமித்திரன், 13 மார்ச், 1908, 17 மார்ச், 1908.
22. A. Govindaraja Mudaliar (Ed.), The Weaving Competition and Conferences, Press Comments, pp.58-75.
23. மேற்படி, பக்.54-55.
24. மேற்படி, p.XI.
25. G.O.No.1949, M, dated 18th Dec. 1903.
26. சுதேசமித்திரன், 15 செப்டம்பர், 1922.
27. Sreeramulu Chetty, 'Sir Pitti Theagaraya Chetty Life Sketch', Sir Theagaraya College Silver Jubilee, 1976, p.1.
28. Proceedings of the legislative council of the Governor of Madras, July to Dec.1920, Vol-XLVIII, pp.1788-89.
29. Legislative Assembly Debates, Vol-I, part-II, 1921, 19th March 1921, p.1343.
30. தேவாங்க பத்திரிகா (தெலுங்கு), 30 ஏப்ரல், 1925, ப.1
31. செங்கல்வராயன், (பச்சையப்பன் கல்லூரி ஓய்வு பெற்ற நூலகரும் தியாகராயரின் உறவினருமாவார்) அவர்களை இவ்வாய்வாளர் 17.04.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
32. Victoria Technical Institute Memorial, An account of its work and the Exhibits in the New Hall, Madras, 1909, pp.801-802.
33. Report of the Industrial Conference, Letter from P. Theagaraya Chetty Garu to Mr. Chatterton, pp.130-131.
34. Mr. K. Vyasarao, Municipal Council Meeting Proceedings on 1st May 1925.
35. இராமசாமி செட்டியாரின் தலைமையனார் புதல்வர் துரைராசு அவர்களை இவ்வாய்வாளர் 8.10.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து. இத்தொழிற்சாலை அமைந்திருந்த இடத்தை ஆய்வாளர் நேரிலும் சென்று கண்டார்.

36. வ. ஞானசாமி (தோல்பதனிடும் தொழிலாளி) அவர்களை இவ்வாய்வாளர் அவரது இல்லத்தில் 6.9.85 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து. அத்தொழிற்சாலையில் ஒரு கொட்டகை மட்டும் இன்றும் மாறாமல் பழைய நிலையில் இருப்பதையும், பிறபகுதிகள் இடித்துக் கட்டப்பட்டு அவ் விடத்தில் பூச்சிமருந்து தொழிற்சாலை அமைந்திருப்பதை யும் ஆய்வாளர் நேரில் கண்டறிந்தார்.

37. மேற்படி.

38. எம்.எஸ். தண்டபாணி (கோயில் அர்ச்சகர்) அவர்களைச் சுண்ணாம்புக் குளத்திலுள்ள அவரது இல்லத்தில் 10.5.85 அன்று ஆய்வாளர் சந்தித்துப் பெற்ற கருத்து.

39. Fortnightly Report Dt. Ootacamund, the 5th Sep. 1916, No.3274, W-1, p.1, and the 16th Sep. 1916, No.3567-W-1, p.1.

40. Southern Indian Chamber of Commerce, Annual Report, 1911-1912, p.77.

41. மேற்படி, பக்.76-78.

42. மேற்படி, ப.133.

43. Southern India Chamber of Commerce, Annual Report, ending the year 1915, pp.74-75.

44. மேற்படி, ப.122.

45. மேற்படி, Meeting with Sir George barness, the Member for Commerce and Industry of the Government of India on 9th January 1917, at 4 p.m., pp.166-167.

46. கீழ்க்காணும் கடிதங்களும், மாநாட்டுக் குறிப்புக்களும் தியாகராயரின் கருத்துக்களை விரிவாக விளக்குகின்றன.

   1. Report of the Industrial Conference, Letter of Mr. Chatterton, p.130.
   2. மேற்படி, க.131.
   3. மேற்படி, Letter from p. Theagaraya Chetty Garu to Mr. Chatterton, p.130.
   4. மேற்படி, ப.131.
   5. மேற்படி, பக்.96-97.
   6. கோ. குமாரசாமி, 'உதகமண்டலத் தொழில் மாநாடு', திராவிடப் பெருந்தகை தியாகராயர், கையெழுத்துப் படி, பக்.19-28.
   7. மேற்படி, ப.10.
   8. மேற்படி, பக்.78-84.
   9. மேற்படி, ப.22.

10. 'காங்கிரசும் கான்பிரன்சுகளும்', ஜனாபிமானி, புத்தகம் - 7, ஸஞ்சிகை - 4, பக்.192-194.

11. மேற்கோள், இந்தியத் தொழிற்றுறை மாநாடு, 1915 -ஆம் ஆண்டுச் சிறப்பு வெளியீடு, கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், பக்.104-105.

12. Appendix, Indian Industrial Commission, Memorandum of Evidence of Rao Bahadur P. Theagaraya Chetty, Southern India Chamber of Commerce Golden Jubilee 1910-1960, pp.I-VIII.

13. Indian Patriot, 11th May 1912 (NNR).

14. Prapancha Mitran, 11th May 1918 (NNR).

15. Dravidan, 12th Jan. 1918 (NNR).

16. C.M. Ramachandran Chettiar, My Daily Notes, Book-IV, 23rd May 1916.

17. G.A. Natesan (Ed.) Indian Review, "The War and Indian Industries", Vol-XXVI, Year 1916, p.590.

18. திராவிடன், ஆகஸ்டு 22, 1917.

19. Victoria Technical Institute Memorial, An Account of its work and the Exhibits in the New Hall, Madras, 1909, pp.801-802.

20. மேற்படி, ப.387.

48. Proceedings of the Legislative Council of the Governor of Fort. St. George, July to Dec.1920, Vol-XLVIII, p.653.

49. சுதேசமித்திரன், 15, செப்டம்பர், 1922.

50. G.A. Natesan (Ed.), 'The Indian Industrial Conference', Indian Review, Vol-XXVI, Year 1915, p.84.

51. G.O.No.2894, Revenue, dated 17th October 1908.

52. இந்தியத் தொழிற்றுறை மாநாடு, 1915-ஆம் ஆண்டுச் சிறப்பு வெளியீடு (அமராவதி)யில் வெளிவந்த உரை யைக் கோ. குமாரசாமி தமது நூலில் விரிவாகத் தந்துள்ளார். பக்.104-105.

53. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், கையெழுத்துப்படி, ப.22.

54. Victoria Technical Institute Memorial, An Account of its work and the exhibits in the New Hall, Madras, 1909, pp.881-882.

55. M.R.O. Public, Health, G.O.964, Oct.17, 1921.

இதே செய்தியினை இந்து ராஜகோபால் அவர்களும் தமது ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளார், ப.115.

56. சித்தமருத்துவ நிபுணரும், தியாகராயரின் உற்ற நண்பருமாகிய பண்டிட். எஸ்.எஸ். ஆனந்தம் அவர்களின் புதல்வர், சித்தமருத்துவர் டாக்டர். ஏ. ஆனந்தகுமார் அவர்களை 16.8.86 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

57. Victoria Technical Institute Memorial, An Account of its work and Exhibits in the New Hall, Madras, 1909, pp.801-802.

58. Southern India Chamber of Commerce, Annual Report 1917 (Meeting with Sir. George Barnes, the Member for Commerce and Industry of the Government of India on the 19th Jan. 1917 at 4 p.m.) p.168.

59. தமிழகச் சட்டமன்ற பட்ஜெட் கூட்டத்தொடர், தீர்மானம் (ஏப்ரல் 1987) வானொலிச் செய்தி.

60. Southern Indian Chamber of Commerce Golden Jubilee 1910-1960, p.3.

61. மேற்படி, ப.5.

62. மேற்படி, ப.6.

63. மேற்படி,ப.9.

64. மேற்படி, ப.10.

65. மேற்படி, ப.12.

66. Southern India Chamber of Commerce, Annual Report 1911-12, p.18.

67. மேற்படி, ப.12.

68. Southern India Chamber of Commerce, Administrative Report, 1916-1930.

    i. Economic and Social Bulletin - அரசிடமிருந்து இலவசப் பிரதி பெறுவதற்குக் கடிதம்.

    ii. A Letter to the Chief Secretary to the Government of Madras on 29th July 1912 to store fire works in the shed in the port.

    iii. A Letter to the Chief Secretary to Government Stone House Hill on 9th Sep.1912 - Attachment of the Military Officers.

    iv. A Letter to the Chairman of the Port-Trust on 13th Dec.1912- on Draft Explosive landing rules.

    v. A Letter to the President, Corporation of Madras on 8th march 1913, on Iron dealers and Licence Tax.

vi. A Letter to the Collector of Madras on 20th March 1913 on Introduction of Gold Currency.

vii. A Letter to the President, Corporation of Madras on 13th May1913, requesting to put lights on the Godown street.

viii. A Letter to under Secretary to the Government of India on 11th July 1913, regarding to Hamp preparation in India.

ix. A Letter to under Secretary to the Government of India on 27th May 1913, regarding Barley freeart.

x. A Letter to under Secretary to the Government of India on 1st October 1914, regarding with Defence of Madras Port and got the order to protect the Port, G.O.No.1319, dt.12th Oct.1914.

xi. A Letter to the Secretary to the Government of Madras on 2nd Jan. 1915, with State Hospitals and Dispensaries.

xii. A Letter to the Chief Secretary to the Government of Madras on 2nd jan. 1915, regarding to the Hall marking in India.

69. Southern India Chamber of Commerce Administrative Report 1916-1930, p.45.

70. G.O.No.10, Marine dated 18th jan.1912, and the Minites of the Proceedings of the Board Meeting of the Port Trust, Madras of the years 1912-1918.

71. Minites of the Proceedings of the Board Meeting of the Port Trust of Madras, p.1 and Proceeding of the Board Meeting of the Port Trust, Madras, p.1 and the G.O.No.37, Marine dt.8th Feb.1912, and the following meetings of the Port Trust on 22nd march 1912, p.1, 24th May 1912, p.1, 23rd Feb. 1912, p.1, 6th Sep. 1912, p.1, 24th Aug. 1912, p.1, 20th Sep. 1912, p.1. 10th Jan. 1913, p.2, 9th May 1913, p.1, 23rd May 1913, p.1, 10th Octo. 1913, p.1, 7th Nov. 1913, p.1, 3rd April 1914, p.2, 17th April 1914, p.1, 15th May 1914, p.1, 20th Aug. 1915, p.1, 15th May 1914, p.1, 20th Aug. 1915, p.1, 24th Dec. 1915, p.1, 5th Jan. 1917.

72. Aslum press Almanack & Directory, p.918.

73. Golden Jubilee, 1912-1962; The City Co-operative Housing Society, 3rd Sep. 1962, p.2.

74. மேற்படி, ப.4.

75. கோ. குமாரசாமி, திராவிடத்தலைவர் டாக்டர். நடேசனார் வாழ்வும் தொண்டும், ப.83.

76. G.A. Natesan (Ed.), Indian Review, Vol-XXVI 1920, pp.30-31.

77. திரு. வி. கல்யாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.402.

78. Fortnightly Report 1920, Dt. Fort. St. George, 1st Nov. 1921, No.5781-1, Public, p.1 and Indu Rajagopal, Ideology and Political Development in Madras, 1919 to 1923 of the Non-Brahmin Movement, University of Toronto, Ph.D., 1979, p.114.

79. M. Sreeramuly Chetty, 'Sir. Pitty Theagaraya Chetty Life Sketch', Golden Jubilee Souvenir, Theagaraya Chetty High School, 1948, p.4.

80. கோ. குமாரசாமி, 'உதகமண்டலத் தொழில் மாநாடு', திராவிடப் பெருந்தகை தியாகராயர் கையெழுத்துப்படி, ப.22.

81. M.C.M.P. on 29th May 1905, p.11.

# 6

# தியாகராயரின் அறப்பணி

## 6.0 முன்னுரை

தன்னலங் கருதாது பிறர் நலத்துக்கென்றே தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்ட தியாகராயர், தம்மாலியன்ற அத்துணைத் துறைகளிலும் மக்களுக் காக உழைத்தார். சமயம், அறம் போன்றவற்றிலும் ஈடுபாடு கொண்டவராகத் திகழ்ந்தார். கோவில்களுக்கு நன்கொடைகள் வழங்கி இறைபணியிலும் வல்ல வராக ஒளிர்ந்தார். அதே நேரத்தில் ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும் பண்பினராகவும் திகழ்ந்தார். ஏழை எளியவர்களுக்கு வாரி வழங்கித் தமது பெயருக்கேற்பத் தியாகராயராகவே வாழ்ந்தார். அவர்தம் தந்தையாரும் ஏழை களின் துயரம் கண்டு பொறாத ஈரநெஞ்சினராக வாழ்ந்தவர். எனவே, வள்ளன்மை என்பது தியாகராயருக்கு வந்த பரம்பரைச் சிறப்பு எனலாம். இவ்வியலின் கண் அவரும், அவரது குடும்பத்தாரும் ஆற்றிய சமய, அறப் பணிகள் ஆய்வு செய்யப் பெறுகின்றன.

## 6.1. விக்டோரியா மன்றம்

தியாகராயரின் முன்னோர் தம் உற்றார், உறவினர்களின் உறவையும், தொடர் பையும் போற்றத் தவறவில்லை. இக்குடும்பத்தாருக்குப் பல நூறாயிரம் ரூபாய் மதிப்புள்ள நிலங்களும், பலநூறு காணிப் பரப்பளவுள்ள தோட்டந் துரவுகளும், செங்குன்றம், தேர்வாய் ஆகிய இடங்களில் பல நிலபுலன்களும் இருந்தன. தியாகராயரின் தமையனார் பிட்டி. முனுசாமி செட்டியார் உற்றாரை ஓம்பு தலைத் தவறாது செய்து வந்தார். வறுமையால் வாடும் மக்களைக் காணின் அவர்கள்பால் இரக்கங்கொண்டு அவர்தம் பசி தனித்து, கைப்பொருளும் தந்து உதவுவார். பிட்டி. முனுசாமி செட்டியாரைக் கொடை வள்ளல் முனுசாமி செட்டியார் என்றே அக்காலத்தில் புகழுவார்கள் எனத் தெரிகிறது.[1] அவர் சென்னையில் விக்டோரியா மன்றம் கட்டுவதற்கு ரூ.1000/- நன்கொடையாக வழங்கினார்.[2]

## 6.2. ஆட்சய ஆண்டுக் கருப்பு

1876-ஆம் ஆண்டில் நாட்டில் பெரு வறட்சி ஏற்பட்டது. மக்கள் உண்ண உணவின்றிப் பெருந்துன்பத்திற்காளாயினர். அரசும் பலவிடங்களில் கஞ்சித் தொட்டிகள் அமைத்து, மக்களுக்குக் கஞ்சி வழங்க ஏற்பாடு செய்தது. அரசுடன் ஒத்துழைத்த பெருங்குடியினருள் தியாகராயரின் குடும்பம் குறிப்பிடத் தக்கது. தம் தமையன்மார் பிட்டி. முனுசாமி செட்டி, பெரிய தியாகராய செட்டி ஆகியோருடன் சேர்ந்து தியாகராயரும் ஏழை எளியவர்கள் பட்டினிக் கொடுமையைப் போக்கினார்; ஏறக்குறைய மூன்றுமாத காலம் தொடர்ந்து ஏழை எளியவர்களுக்கு உணவளித்து வந்தார். இவரது இச்செயல் அனைவராலும் பாராட்டப்பெற்றது.[3]

## 6.3. மாணவர்க்கு உதவி

பிட்டி. குடும்பத்தினர் மேனிலைக் கல்வித்துறையிலும் அக்கறை கொண்டிருந்தனர். ஆகவே, முனுசாமி செட்டியின் பெயரால் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஓர் அறக்கொடையை, (Endowment) 3.2.1986-இல் ஏற்படுத்தினார். இது 'பிட்டி. முனுசாமி செட்டியார் பதக்கம்' என்று வழங்கப்பெற்றது. இளங்கலை அல்லது முதுகலை வகுப்பில் வடமொழியில் முதல் மதிப்பெண் பெறுபவர்க்கு ஒரு பதக்கமும், கீழ்த்திசை மொழிப் பிரிவில் வடமொழியில் சிரோமணிப் பட்டப்படிப்பில் முதல் மதிப்பெண் பெறுவோர்க்கு ஒரு பதக்கமும், இள அறிவியல் அல்லது முது அறிவியலில் முதல் மதிப்பெண் பெறுவோர்க்கு ஒரு பதக்கமுமாக மூன்று பதக்கங்கள் வழங்குவதற்கு ஆவன செய்தார்.[4] இதற்காக அவர் ரூ.2,600/- அளித்தார்.[5] இப்பரிசுகள் இன்றும் வழங்கப் பெறுகின்றன.

## 6.4. திருமணவுதவி

குறைந்த வருவாய் உள்ள குடும்பங்களில் பெண்களுக்குத் திருமணம் செய்வது பெருஞ்சிக்கலுக்குரியதாக இருந்தது. எனவே அவர்களின் துன்பத்தைத் தியாகராயர் குடும்பத்தார் நீக்கக் கருதினார். தங்கள் குடும்பத்தில் ஒரு திருமணம் நடைபெறும் பொழுது அவ்வட்டாரத்திலுள்ள ஏழை எளியவர்களையெல்லாம் அழைத்து, அவர்கள் இல்லத்தில் யார் யாருக்கு திருமணம் நடைபெறவேண்டியுள்ளதென்று கேட்டறிந்து, அவர்கள் அனைவருக்கும் தங்கள் செலவிலேயே திருமணம் செய்து அனுப்பி வைப்பார்கள். தியாகராயரும் இதனைத் தொடர்ந்து செய்துவந்தார். ஒரே நேரத்தில் நூறு திருமணங்களை தியாகராயர் நடத்தி வைத்துள்ளார்.[5] பலமுறை இத்தகு திருமணங்களைத் தியாகராயர் நடத்தி வைத்துள்ளார். 1917-ஆம் ஆண்டு தமது இல்லத்தில் நடைபெற்ற ஒரு திருமணத்தன்று சென்னை நகரம் முழுவதும் ஆடு வெட்டுதலை நிறுத்தி வைக்குமாறு செய்தார் என்றும் தெரிகிறது.[7]

### 6.5. ஏழைப்பிராமணர்களுக்கு உதவி

தியாகராயரின் இல்லத்தில் ஒருபுறம் நீண்ட தாழ்வாரம் இருந்தது. அதில் சுமார் இருநூறு பேர் அமரலாம். அந்த இடத்தில் நாள்தோறும் பிராமணச் சிறுவர்கள் வந்தமர்ந்து வடமொழி கற்றுக் கொள்ளுவார்கள். அவர்களது வட மொழிப் பயிற்சிக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் தியாகராயர் செய்து வந்தார். பிராமணரல்லாதார் இயக்கம் தொடங்கப் பெற்ற பிறகும் இவ்வுதவி தொடர்ந்து நடைபெற்று வந்தது. அவர்தம் நண்பர்கள் சிலர், "தாங்கள் பிரா மணரல்லாதார் இயக்கம் தொடங்கியுள்ளீர்கள்; இல்லத்தில் பிராமணச் சிறுவர் களுக்கு இத்தகைய உதவியைச் செய்து வருகிறீர்களே" என்று கேட்டனர். அதற்குத் தியாகராயர், "நான் பிராமணர்களை வெறுக்கவில்லை. பிராமணர் கள் தங்கள் குலத்தொழிலைச் செய்யட்டும். நாடாளுவது அரச பரம்பரையின ராகிய நமது பணி. பிராமணர்களைத் தங்களுக்குரிய குலத்தொழிலையும் செய்யாதீர்கள் என்று தடுத்தால் அவர்கள் எங்கே போவார்கள்?" என்று கூறு வார்.[8] இந்நிகழ்ச்சி தியாகராயரின் பரந்த மனப் பான்மைக்குச் சிறந்த எடுத்துக் காட்டெனலாம்.

### 6.6. வீரபத்திரசாமி கோயில்

தியாகராயரின் குடும்பத்தாருக்குத் தேர்வாய் என்னும் கிராமத்தில் பெரு மளவில் நிலங்கள் இருந்தன. அவற்றில் இரண்டு ஏக்கர் நன்செய் நிலத்தை மாதர்பாக்கத்திலுள்ள வீரபத்திரசாமி கோயிலுக்கு நன்கொடையாக வழங்கி னார்.[9] அந்நிலத்திலிருந்து வரும் நெல் கோயில் நிவேதனத்திற்குப் பயன்படுத் தப்பெற்றது. இன்றும் ஆண்டிற்கு ஐந்தரை மூட்டை நெல் கோயிலுக்கு வந்து கொண்டிருக்கிறது. தியாகராயரின் குடும்பம் நல்ல நிலையில் இருந்த காலம் முழுவதும் ஆண்டுதோறும் அக்கோயிலுக்குச் சென்று வழிபாடு நிகழ்த்திய தாகவும் தெரிகிறது.

### 6.7. கபாலீசுவரர் கோயில்

சென்னை கபாலீசுவரர் கோயில் குடமுழுக்கு விழாவிற்குத் தியாகராயர் ரூபாய் பத்தாயிரம் நன்கொடை வழங்கினார் என்று தெரிகிறது.[10] மேலும், 1920-ஆம் ஆண்டு கபாலீசுவரர் கோயில் குளத்தில் சிலபடிகளைக் கட்டுவதற் குப் பெரும்பொருள் வழங்கியுள்ளார்.[11] இச்செய்தி குளத்தின் கீழ்க்கரைப் படித் துறைச் சுவரில் தென்கோடியில் ஒரு கல்லில் பொறிக்கப் பெற்றுள்ளதை இன் றும் காணலாம்.

### 6.8. பார்த்தசாரதி கோயில்

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலுக்கும் சுண்ணம்பாகவும், பொரு ளாகவும் பல நன்கொடைகளை அளித்துள்ளார்.[12] இவர் அளித்த நன்கொடை

யைப் பற்றிய செய்தி பார்த்தசாரதி கோயிலின் முன் மண்டபத்துப் படிக்கட்டு ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ளது.

## 6.9. சௌடம்மன் கோயில்

வண்ணாரப்பேட்டையிலுள்ள சௌடம்மன் கோயில் சிங்க வாகனத்தின் கண்களில் பதிப்பதற்கான கண்ணாடிக் கண்விழிகளை (Glass eye balls) இலண்டன் நகரத்திலிருந்து தருவித்து, நன்கொடையாக வழங்கினார். இச்சிங்க வாகனத்தில்தான் இன்றும் இறைவியின் திருவுலா நடைபெறுகிறது.[13]

## 6.10. தொழிலாளர்க்கு உதவி

1921-ஆம் ஆண்டில் சென்னை பக்கிங்ஹாம் கர்னாடிக் நெசவாலைத் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் நடைபெற்ற காலத்தில் தொழிலாளர்கள் பலர் வருவாய் ஏதுமின்றிப் பட்டினியால் துன்புற்றனர். அப்போது தியாகராயர் தமது கைப்பொருள் தந்து உதவியதுடன் தமது செல்வாக்கையும் பயன்படுத்தி அவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் நாள்தோறும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்தார்.[14] இங்ஙனம் பசிக் கொடுமையினின்றும் பலகுடும்பங்களைக் காப்பாற்றினார் என்று தெரியவருகின்றது.

அதுமட்டுமன்றித் தொழிலாளர்களின் குடிசைகளில் தீ விபத்து நேர்ந்த போது, அவர்களின் குடிசைகளுக்கும் மற்றுமுள்ள கட்டிடங்களுக்கும் வரி விலக்கு அளித்து, மீண்டும் குடிசைகள் கட்டிக் கொள்ளுவதற்குப் பொரு ளுதவியும் செய்ய வழி வகுத்தார்.[15] அதே ஆண்டில் புளியந்தோப்புத் தீ விபத்து நேர்ந்தபோதும் நகராட்சி மன்றத்தில், “இதற்கு யார் காரணமாக இருந்தாலும் சரி, தீவிபத்தைப் பற்றிய காரணங்களை ஆராய்வதை விட, முதலில் பாதிக்கப்பட்ட அந்த ஏழை மக்களுக்கு உதவியளிக்க வேண்டும்”[16] என்று கூறி உதவியளிக்கச் செய்தார். இவரது தலைமையில் புளியந்தோப்பில் வீடிழந்த நானூறிலிருந்து ஐநூறு தொழிலாளர் குடும்பங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன.[17]

## 6.11. உற்றார் உறவினர்க்கு உதவி

சுற்றந்தழுவி வாழ்ந்த தியாகராயர் தமது உறவினர்க்கு இயன்ற வகை யிலெல்லாம் உதவியளித்து வந்தார். தமது நெசவாலையை மூடியபொழுது, அங்கிருந்த பொருள்களையெல்லாம் ஏழை உறவினர்களுக்கு இலவசமாக அளித்தார். மாநெல்லூர், மாதர்பாக்கம் பகுதிகளிலிருந்து வரும் உறவினர் களுக்கு விருந்தளித்துப் பொருள்களையும் கொடுத்து அனுப்பி வைத்தார். அவ்வுறவினர்கள் தியாகராயரின் நெசவாலைப் பொருள்களைக் கொண்டு தமக்குரிய இல்லங்களைக் கட்டிக்கொண்டனர் என்று தெரிகிறது.[18]

## 6.12. இந்து அறநிலையத்துறை

மடங்களும், திருக்கோயில்களும் சரிவரக் கவனிக்கப்பட வேண்டுமென் பதற்காகத் தியாகராயரின் தலைமையில் இந்து அறநிலையச் சட்டம் கொண்டு வரப்பெற்று, அதற்கென இந்து அறநிலையத்துறை அமைக்கப் பெற்றது. மடாதி பதிகளும், கோயில் நிர்வாகிகளும் இதனை எதிர்த்தனர். மகந்து* ஒருவர், இம் முயற்சியைக் கைவிட்டால், தாம் பெருந்தொகை தருவதாகத் தியாகராயரிடம் கூறினார். ஆனால், தியாகராயரோ தமது கொள்கையில் பிறழாதவராய் நின்று அம் மகந்துவைக் கடிந்து விரட்டி அனுப்பினார்.[19]

## 6.13. தரும அன்னசாலை

சென்னை வண்ணாரப்பேட்டையில், ஏழை எளியவர்க்கு உணவளிப்பதற் காக இவ்வன்னசாலை 1.3.1897-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது. ஒவ்வொரு ஞாயிறன்றும் ஐம்பது ஏழைகளுக்கு உணவளிக்கப் பெற்றது. அமாவாசை போன்ற சிறப்பு நாட்களில் விருந்துணவு அளிக்கப்பெற்றது. அத்துடன் சிற்சில சமயங்களில் ஏழைகளுக்கு உடைகளும் வழங்கப்பெற்றன. தியாகராயர் இவ் வன்னசாலையில் தலைவராகப் பல ஆண்டு காலம் பணி ஆற்றினார்.[20] சுமார் இருபதாண்டு காலம் இப்பணியைத் திறம்பட நடத்தி வந்தார் எனத் தெரிகிறது.

## 6.14. பூவலம்பேடு பாலம்

சென்னையிலிருந்து தேர்வாய் செல்லும் வழியில் பூவலம் பேட்டிற்கு அருகில் உள்ள ஓடையின் போக்கை மாற்றி, அங்கு ஒரு பாலம் கட்டி, மக்கள் எளிதாக ஓடையைக் கடப்பதற்குத் தியாகராயர் வழி வகுத்தார்.[21]

## இயல் சுருக்கம்

தியாகராயரின் முன்னோர்கள் அறம்பல செய்து வந்தனர். தியாகராயரின் தமையனார் முனுசாமி செட்டி, விக்டோரியா மன்றம் கட்டுவதற்கு நன்கொடை அளித்தார். 1876-ஆம் ஆண்டு ஏற்பட்ட கொடிய வற்கடத்திலிருந்து மக்களைக் காக்க, சுமார் மூன்றுமாத காலம் தொடர்ந்து அவர்களுக்கு உணவளித்தனர் தியாகராயர் குடும்பத்தினர். மேலும், அவர்கள் பல்கலைக் கழகத்தில் அறக் கொடையளித்து மாணவர்களுக்கு உதவி செய்தனர்; ஏழை எளியவர்களுக்கு திருமணங்கள் செய்து வைத்தனர்.

அதனைத் தொடர்ந்து தியாகராயரும் முடிந்தவரையில் அறங்களைச் செய்து வந்தார். ஏழைப் பிராமணர்களுக்கு உதவி செய்து வந்தார். வீரபத்திரசாமி கோயில், கபாலீசுவரர் கோயில், திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில், சௌடம்மன் கோயில் ஆகிய கோயில்களுக்குப் பல திருப்பணிகளைச் செய் தார். தொழிலாளர்கள் நலிவுற்றபோது அவர்களுக்குச் சமயமறிந்து பற்பல

உதவிகளைச் செய்தார். தம் உற்றார் உறவினர்களுக்கும் தேவைப்பட்ட உதவிகளை மறுக்காது செய்து வந்தார். இந்து அறநிலையத்துறை ஏற்பட வழிவகுத்தார். அதன்மூலம் மடங்கள், திருக்கோயில்கள் ஆகியவற்றின் நிர்வாகம் சீர் திருத்தப் பெற்றது.

வடசென்னையில் தரும அன்னசாலை நிறுவி, ஏழை மக்களுக்கு உணவும், உடையும் வழங்க ஏற்பாடு செய்தார். இங்ஙனம் தியாகராயரின் அறப்பணி பல துறைகளிலும் விரிந்து பயனளித்தது.

## எண் விளக்கம்

1. கோ. குமாரசாமி, *திராவிடப் பெருந்தகை தியாகராயர்*, ப.9.
2. Aslum Press Almanack and Directory, p.1183.

   (விக்டோரியா மன்றத்தின் சுவரில் அமைந்துள்ள நன்கொடையாளர் பெயர்ப்பட்டியலில் பிட்டி. முனுசாமி செட்டியாரின் பெயர் இன்றும் காணப்படுகிறது.)
3. மா.சு. சம்பந்தன், *சென்னை மாநகர்*, ப.111.

   கோ. குமாரசாமி, *திராவிடப் பெருந்தகை தியாகராயர்*, ப.10.

   *ஆய்வாளர் சந்தித்த பெரியோர்கள், ம.பொ.சி., உம்மிடி ஸ்ரீ ராமுலு செட்டி, பிருத்வி, தியாகராய செட்டி, பம்மி. தியாகராச செட்டி போன்ற பலரும் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுக் கூறியுள்ளனர்.*
4. University of Madras, Endowment of the University, 1976, p.256.
5. Aslum Press Almanack and Directory, p.884.
6. கோ. குமாரசாமி, *திராவிடப் பெருந்தகை தியாகராயர்*, ப.12.

   பி. சம்பந்த முதலியார், "*தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளர்*", Theagaraya Chetty High School Golden Jubilee Souvenir, p.38.

   *ஆய்வாளர் சந்தித்த பெரியோர்கள் உம்மிடி. ஸ்ரீராமுலு செட்டி, மாநெல்லூர் பிட்டி. செங்கல்வராய செட்டி மற்றும் பலரும் இதனைக் கூறியுள்ளனர்.*
7. இச்செய்தியும் ஆய்வாளர் சந்தித்த பல பெரியோர்களால் கூறப்பெற்றது. தேவாங்க குலகுரு (படிவேடு) ஸ்ரீ சாம்ப லிங்க மூர்த்தி சுவாமிகள் தாம் ஆறு வயது சிறுவனாக இருந்தபோது இத்திருமண விழாவிற்குத் தம் தந்தையாருடன் சென்று, தியாகராயரின் இல்லத்தில் தங்கிய

தாகவும், அப்பொழுது தண்டோரா அடித்து இச்செய்தி நகர மக்களுக்கு அறிவிக்கப்பட்டதைத் தாம் நேரில் கேட்ட தாகவும் கூறுகிறார்.

8. ஆய்வாளர், ம.பொ.சி. அவர்களை 17.4.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

9. ஆய்வாளர், திரு. டி. செங்கல்வராய செட்டி அவர்களை மாநெல்லூரில் சந்தித்துப் பெற்ற கருத்து. தியாகராயரால் அளிக்கப்பெற்ற நிலத்தின் பட்டா எண்.479.

10. வி.ஆர். சந்திரன், நீதிக்கட்சியின் வரலாறு, ப.15.

இச்செய்தியும் ஆய்வாளர் சந்தித்த பல பெரியார்களாலும் உறுதி செய்யப்பட்டுள்ளது.

11. கபாலீசுவரர் கோயில் திருக்குளக் கீழ்க்கரைக் கல்வெட்டு.

"திவான்பகதூர். பிட்டி. தியாகராய செட்டியார் அவர்கள் குளம் திருப்பணிக்காகத் தானமாகக் கொடுத்த சுண்ணாம்பு மதிப்பு ரூ.1235-8-0 34 அடி அகலத்தில் 36 படிக்குத் தருமம்".

12. மேற்காட்டிய செய்தியும், பார்த்தசாரதி கோயிலுக்கு அளித்த நன்கொடை பற்றிய செய்தியும் திரு.வி.க. அவர்களை, கோ. குமாரசாமி அவர்கள் சந்தித்துப் பெற்ற கருத்தாகக் கூறுகிறார். மேலும் அப்படிக்கட்டைத் தாம் கண்டபோது அதிலிருந்த எழுத்துக்கள் முற்றிலும் சிதைந்து காணப்பட்டன என்றும் கோ. குமாரசாமி அவர் களை இவ்வாய்வாளர் நேரில் சந்தித்த போது கேட்டறிந்தார் (4.2.1986). பின்னர், தாமும் நேரில் காணவேண்டு மென்று சென்றுபார்க்க, அக்கல் இருக்கும் இடத்தை ஆய் வாளரால் கண்டுபிடிக்க முடியவில்லை.

13. ஆய்வாளர், தியாகராசசெட்டி (கோயில் தர்மகர்த்தாவின் தந்தையார்) அவர்களை 4.5.85 அன்றுஅவரது இல்லத் தில் சந்தித்துப் பெற்ற கருத்து. இச்சிங்க வாகனத்தை ஆய் வாளர் நேரிலும் சென்று கண்டார்.

14. திரு.வி. கலியாண சுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.406.

15. Administration report of the Madras Corporation 1922-23, p.9.

16. Municipal Council Meeting proceedings on 26th July 1921.

17. மேற்படி, on 13th Dec. 1921.

18. ஆய்வாளர், பிட்டி. செங்கல்வராயர் அவர்களை மாநெல் லூரில் அவரது இல்லத்தில் 18.6.1985 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து. தியாகராயரின் ஆலையிலிருந்து கொண்டு வரப்பெற்ற இராட்டினத்தை இவரது இல்லத்தில் இன்றும் காணலாம்.

19. ஆய்வாளர், தியாகராயரின் பேரர் (கடைசிமகள் கௌசல்யாவின் புதல்வர்) பி. கந்தசாமி அவர்களை 21.6.85 அன்று சென்னையில் அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

* இயல் இரண்டில் விளக்கம் தரப்பட்டுள்ளது.

20. Aslum Press Almanack and Directory, p.1168.

21. செங்கல்வராயன், (பச்சையப்பன் கல்லூரி முன்னாள் நூலகர்) ஆய்வாளர், 10.5.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து. தியாகராயரால் கட்டப்பெற்ற பாலத்தை ஆய்வாளர் நேரிலும் சென்று கண்டார்.

# 7

# தியாகராயரின் ஆளுமை

## 7.0. முன்னுரை

ஆளுமை என்பதை வரையறுப்பது மிகவும் கடினம். ஆளுமை என்பது ஒருவனது உடலமைப்பே என்றும், ஒருவனது உடல் அமைப்பு, அவன் வாழும் சூழ்நிலை ஆகியவற்றின் தன்மைக்குத்தக அமையும் இயல்புகளெல்லாம் ஒன்று சேர்ந்ததே என்றும், ஒருவனது இயல்பூக்கங்களும் உள்ளக் கிளர்ச்சிகளும் ஒருங்கே சேர்ந்தமைவதே என்றும், மனிதனது நனவிலி மனச் சக்தியும், சூழ்நிலைச் சக்தியும் ஒன்றோடொன்று மோதுவதனாலும், இழைவதனாலும் அமைவதே என்றும் பலவாறு கருதப்படுகிறது.[1]

ஆளுமை எனப்படுவது ஒருவனைப் பிறரால் விரும்பும்படியோ, வெறுக்கும் படியோ செய்யும் அவனிடமுள்ள விளக்க முடியாத பண்பு என்று எளிய மக்கள் கருதுகின்றனர்.

ஒவ்வொருவனும் தன் வாழ்க்கையின் பல்வேறு சூழல்களில் தனக்கே உரித்தான முறையில் செயல்படுவதைக் காணலாம். இச்செயல்பாட்டு முறைகள் அவனது ஆளுமையின் தன்மையை வெளிப்படுத்துகின்றன. ஒவ்வொரு மனிதனின் நடத்தையிலும் ஊன்றிக் கவனிக்கும்பொழுது சில அடிப்படைப் போக்குகளைக் கண்டறிய முடியும். இப்போக்குகளின்படியே தனக்கே உரிய தன்மையில் அவன் எத்தகைய நிலைமைகளிலும் நடந்து கொள்ளுவதைக் காணலாம். இதுவே அவனது ஆளுமையாகும்.

மனிதனின் நடத்தை பல கூறுகளைக் கொண்டது. இக் கூறுகள் அறிவுசார் நடத்தைகள், மனவெழுச்சிகள், பழக்கங்கள், பற்றுக்களால் உந்தப்படும் நடத்தைகள் போன்றவையாகும். ஆனால் ஆளுமை எனப்படுவது இத்தகைய எல்லாக் கூறுகளின் தொகுப்பினாலும் ஒருவனுக்கு ஏற்படும் தனித்தன்மையைக் குறிப்பதாகும். ஆளுமை ஒருவனுடைய உடற்பண்புகள், உள்ளப் பண்புகள், மனப்போக்குகள், சமூக அறநெறிப் பண்புகள் போன்ற எல்லாப் பண்புகளின் கலவையையும் குறிக்கிறது.

ஆளுமை ஒரு மனிதனைப் பற்றிய முழு விளக்கம் ஆகும். ஒருவனுடைய ஆளுமையில் அவனது உடல் தோற்றம், அனுபவங்கள், நினைவுகள், கற்பனை, பழக்க வழக்கங்கள், பற்றுகள், ஆர்வங்கள், நடையுடை பாவனைகள், வாழ்க்கை முறை ஆகிய யாவும் உள்ளடங்குவன. இதனையே 'ஆல்போர்ட்' (Albort) என்பார் மிகச் சுருக்கமாக 'உடல், உள்ளப் பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பே ஒருவனது ஆளுமையாகும்'[2] என்று கூறுகிறார். இத்தகைய ஆளுமைக்கு மரபும் சூழ்நிலையும் ஒருங்கே காரணங்களாக உள்ளன[3] என்பதும் உளவியலார் கருத்தாகும்.

மேற்கூறிய உளவியல் கருத்துவழி நின்று தியாகராயரின் ஆளுமை இவ்வியலில் ஆராயப் பெறுகிறது. தியாகராயரின் தோற்றப்பொலிவு, பழக்க வழக்கங்கள், உள்ளப்பாங்கு என்னும் நிலைகளில் அவருடைய ஆளுமையை விளக்கலாம். இத்தகைய ஆளுமைப் பண்புகள் அவருடைய கொள்கைகளை மக்கள் ஏற்று விழிப்புணர்வு கொள்ளுவதற்குக் காரணமாய் இருந்தன என்பதைப் பின்வரும் கருத்துக்களால் தெளியலாம்.

## 7.1. தோற்றப் பொலிவு

தியாகராயர் நல்ல சிவப்பு நிறமுள்ளவர். அவரது நெற்றியில் திருநீறும் சந்தனப்பொட்டும் துலங்கும். அவரது ஆளுமைக்கு அணிகலமாக முகத்தில் அடர்ந்த மீசை இலங்கியது. ஐந்தரை அடி உயரமே உடையவர். ஆயினும் தலைப்பாகையுடன் காணும்போது ஆறடி மனிதராகத் தோற்றமளிப்பார்; சட்டைப்பையில் தங்கச் சங்கிலியுடன் கூடிய ஒரு சிறு கடிகாரமும், பேனாவும், மூக்குக் கண்ணாடியும் வைத்திருப்பார்; இராச கம்பீரமான தோற்றமும் சிங்க நோக்கும் உடையவர். "சிம்மராசன் பார்க்கிறார்"[4] என்று அவரைக் காண்போர் கூறுவரெனத் தெரிகிறது.

திருவள்ளுவர் கூறும் ஏறுபோன்ற பீடுநடை தியாகராயருக்கு உரியது. அவரது தோற்றமே காண்போரிடத்து ஒருவிதப் பயபக்தியைத் தோற்றுவிக்கும்.[5] "தியாகராயரின் கம்பீரத் தோற்றமும் ஆளுமை வல்லமையும் மாற்றாரை மிரளச்செய்யும்; பணிந்திடவும் செய்யும்; இராச கம்பீரத்தோடு சிறுகணப் பொழுது உற்றுப் பார்ப்பாரேயானால் அவரிடம் அணுகிய வேற்றாரும் மாற்றாரும் அப்பார்வையில் மருண்டு மயங்கி விடுவர்."[6]

"ஆறும் மலையும், கூவலும் குளமும், கலையும் தொழிலும், மக்களும் ஒழுக்கமும் பலபடச் செறிந்த ஒரு பெருந்திரு நகரம்" என்றும், "ராச கம்பீரப் பெருமிதத் தோற்றமும், திருநீற்றொளியும், அரிமா நோக்கும், மலர்ந்த முகமும், அஞ்சா நெஞ்சும், ஆவின் இயல்பும் உடைய ஒரு பெருவடிவு"[7] என்றும் 'நவசக்தி' இதழ் அவரது உருவையும் திருவையும் ஒருங்கே புகழ்ந்துள்ளது.

"பரந்த முகம், அடர்ந்தமீசை, அகன்றநெற்றி, அறிவொளி வீசும் கண்கள், எடுப்பான தோற்றம் அனைத்தும் அவர் தனிப்பேராண்மையாளர் என்பதை எடுத்தியம்பும்"[8] என்று அவரது தோற்றப்பொலிவை இளங்கோ தமது நூலில் படம் பிடித்துக் காட்டுகிறார். "அவரது தோற்றத்தில் கம்பீரம் இருந்தது. அவர் சினமுறும் போது ஒரு புலி போன்றே தோற்றமளிப்பார். ஒளி மிகுந்த கண்களும், வெண்மையான அடர்ந்த புருவங்களும், ஒளிபடைத்த மீசையும் உடையவர். தன்னைப் பற்றிய திறனாய்வைப் பொறுத்துக் கொள்ள இயலாத, நகைச்சுவை மிளிரும் கிழப்புலி"[9] என்று மலோனி குறிப்பிடுவது சாலப் பொருந்தும் எனலாம். இத்தகைய அவருடைய தோற்றமே மக்களை அவர்பால் ஈர்த்து, விழிப் புணர்வு கொள்ளச் செய்தது எனலாம்.

## 7.2. பழக்கவழக்கங்கள்

தியாகராயர் உடற்பயிற்சி செய்து உடலை நன்கு ஓம்பி வந்தார்; இளங் காலையில் எழும் பழக்கமுடையார்; குளிர்ந்த நீரில் நீராடும் வழக்கமுடையார்; தயிரன்னத்தை விரும்பி உண்பார்; இவ்வழக்கத்தை அரித்துவாரம் சென்ற போதும் விடாது கடைப்பிடித்தார்.[10] எளிய, ஆனால் உயர்ந்த வாழ்வு வாழ்ந் தார். ஒருமுறை தமது சட்டை சிறிது கிழிந்திருந்ததைக் கண்ட தியாகராயர் அதைத் தம் கையாலேயே தைத்து அணிந்து சென்றார்.[11] மற்றொருமுறை தன் நண்பர் தமக்கு குடை பிடித்ததை விரும்பாதவராய்த் தாமே குடையுடன் சென்று தம் அலுவலை முடித்துத் திரும்பினார்.[12] ஒருவனுக்கு மற்றொருவன் குடை பிடிப்பது கெட்ட பழக்கம் என்பது அவரது கருத்து. இந் நிகழ்ச்சிகள் அவரது எளிய, உயர்ந்த வாழ்வுக்குச் சான்றுகளாகின்றன.

## 7.3.0. உளப்பாங்கு

கம்பீரத் தோற்றமுடையவராக இருப்பினும் கருணையும், அன்பும் மிளி ரும் ஆவின் இயல்புடையவர். ஏழை எளியவர்களின் துன்பத்தைக் கண்டு உருகும் இயல்பினர்.[13] தாம் கொண்ட கொள்கையில் உறுதியும் நேர்மையும் நாணயமும் அஞ்சாநெஞ்சும் வாய்ந்தவர். தமது தவற்றினை ஒப்புக்கொண்டு மன்னிப்புப் பெறும் பான்மையர்.[14] தலைசிறந்த பேச்சாளராக இல்லாவிடினும் கேட்போர்ப் பிணிக்கும் தகையவாய சொற்களை, உள்ளத்தில் பதியுமாறு பேசும் இயல்பினர்.[15] அவரது பேச்சில் நகைச்சுவை மிளிரும். திறனாய்வுக்கு அஞ்சாது தாம் கருதியதைக் கூறும் மனமுடையவர்.[16] உறுதியான கருத்துக்களை யும் எண்ணங்களையும் கொண்ட ஒரு தனிப்பெரு மனிதராக விளங்கினார்.[17]

கொள்கைப் பற்றையும் தன்மான உணர்வையும் காற்றில் பறக்கவிட்டு விட்டுத் தம்மையும் தம் கட்சியையும் மறந்து பட்டத்திற்கும் பதவிக்கும் அலைந்து திரிந்த அக்காலத்து மிதவாதிகளுக்குத் தியாகராயர் ஒரு பாடமாக

விளங்கினார். தமக்கு அளிக்கப்பட்ட அமைச்சர் பதவியை மறுத்து, தம்மினும் இளையவர்கள் அப்பதவியைப் பெறுமாறு செய்த அவரது பெருந்தகைமை என்றென்றும் நினைவு கூர்தற்குரியது.[18] தியாகராயரின் இத்தகைய தன்னலம் இன்மை, பதவி விரும்பாத்தன்மை.[19] கொள்கைப்பிடிப்பு.[20] பீரங்கி வாயில் நிறுத்தினாலும் அஞ்சாது தமது கருத்துக்களையும் கொள்கைகளையும் கடைப் பிடிக்கும் தன்மை[21] ஆகியவற்றை முறையே திரு.வி.க., ஜஸ்டிஸ் எம்.டி. தேவ தாஸ், கே. வியாசாராவ் ஆகியோர் நெஞ்சாரப் பாராட்டியுள்ளனர்.

தியாகராயர், "தூய்மைக்கு அறிகுறியான வெள்ளை உடைகளையே உடுப் பவர்; கள்ளங்கபடு அற்றவர்; பார்ப்பனர் பறையர் முதலிய அனைவரையும் உள்ளங்கனிய நேசித்தவர். அவர் ஏற்படுத்திய பள்ளியில் பார்ப்பனரே பெருந் தொகையில் ஆசிரியர்களாகப் பணி புரிந்தனர் என்றறிவதின் வழி அவரது பரந்த நோக்கோடு கூடிய பெருந்தன்மையைப் பகுத்தறியலாம். தமது இயக் கத்தினரை நேசிப்பதும், அவர்கட்கு உற்றுழி உதவுவதும் தியாகராயரின் நற் பண்புகளில் குறிக்கத்தக்கவையாகும்"[22] என்று பாராட்டுகிறார் டாக்டர். இராச மாணிக்கனார்.

தியாகராயர், காந்தியடிகள் உள்ளிட்ட பெருந்தலைவர்களுடனும், ஆங் கிலப் பெருமக்களுடனும் கலந்து பழகினார். அத்தொடர்புகள், அவர்தம் மேற் காட்டிய பண்பு நலன்களும், ஆளுமையின் பல்வேறு கூறுகளும் வெளிப்பட வாய்ப்பாயமைந்தன. அவ்வெளிப்பாடு, மக்கள் விழிப்புணர்வுற்று அவரைப் பின்பற்றுவதற்கேதுவாயிற்று என்று கூறலாம். ஈண்டு அவரது ஆளுமையின் பல்வேறு பண்புக் கூறுகளைக் காணலாம்.

### 7.3.1. சான்றாண்மை

திரு.வி.க. அவர்கள் தியாகராயரைக் காட்டிலும் வயதில் மிகவும் இளைய வர்; காங்கிரசில் ஈடுபாடு கொண்டவர். அவர் 'தேசபக்தன்', 'நவசக்தி' ஆகிய இதழ்களின் வாயிலாக நீதிக்கட்சியைத் தாக்கியும் தியாகராயரின் அரசியற் கொள்கைகளை எதிர்த்தும் எழுதி வந்தார்.[23] நீதிக்கட்சியை ஒழிப்பதே தமது கடமை என்றும்[24] கருதினார். தமது முயற்சியால் நீதிக்கட்சிக்கு எதிராகச் சென்னை மாகாணச் சங்கத்தையும் தோற்றுவித்தார்.[25] ஆனால் தியாகராயரோ இவ்வெதிர்ப்புகளையெல்லாம் பொருட்படுத்தாது பெரும்பான்மையினரான பிராமணரல்லாத மக்களின் நல்வாழ்வு ஒன்றையே குறிக்கோளாகக் கருதி எதையும் தாங்கும் மனவுறுதியுடன் உழைத்து வந்தார்.

இவ்வாறு அரசியலில் தமக்கு எதிராக இருந்த திரு.வி.க.விடமும் தியாக ராயர் பண்புடனும் பெருந்தகைமையுடனும் பழகினார். முதல்நாள் மாலை கடற்கரையில் தம்மைத் தாக்கிப் பேசிய திரு.வி.க.வை மறுநாள் வழியில்

சந்தித்தபோது அவருடன் இன்முகத்துடன் உரையாடித் தமது மகிழ்வுந்திலே (Motor Car) ஏற்றிச் சென்றார்.[26]

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்[27]

என்னும் வள்ளுவரின் வாக்கிற்கு இலக்கணமாகத் தியாகராயர் திகழ்ந்தார் என்பது இதனால் பெறப்படுகின்றது.

சென்னை மாநிலக்கல்லூரியில் தமிழாசிரியர் பதவியைத் திரு.வி.க.விற்கு அளிக்கத் தியாகராயர் பெருமுயற்சி செய்தார்.[28] இம்முயற்சியும் தம்மோடு கருத்து வேறுபாடு கொண்டவர்க்கும் இனியவே செய்யும் அவரது சால்பின் வெளிப்பாடே எனலாம்.

தியாகராயர் 1921-ஆம் ஆண்டு, தொழிலாளர் வேலை நிறுத்தத்தின்போது திரு.வி.க.வை நாடு கடத்துதலினின்றும் தடுத்துக் காத்தார். அதற்காகத் தமது கட்சி அமைச்சரவை பதவியினின்றும் விலகவும் ஆயத்தமாக இருந்தமை[29] கொண்டும் அவரது பெருந்தன்மையையும், சான்றாண்மையையும் உணரலாம். புளியந்தோப்புக் கலவரங்களுக்குக் காரணம் திரு.வி.க.வே என்று கருதப்பட்ட காலத்தில் ஒருமுறை திரு.வி.க.வைச் சந்தித்த தியாகராயர் அவருக்காக உருகிக் கண்கலங்கியதோடு, கடவுள் உதவி அவருக்கு உண்டு என்று வாழ்த்தியும் சென்றார்.[30]

பகைவனுக்கும் அருளும் நன்னெஞ்சம் படைத்திருந்ததால் திரு.வி.க.வே. தியாகராயரைக் 'குணமலை' என்றும், அக்குணமலை தம்மைக் காந்தம் போல் ஈர்த்து விட்டது என்றும் மனமாரப் பாராட்டியுள்ளார்.[31]

டாக்டர். டி.எம். நாயருடன் தியாகராயர் கொண்டிருந்த தொடர்பும் அவரது சான்றாண்மைக்குச் சான்றாகிறது. டாக்டர். டி.எம். நாயர் தியாகராயருடன் இணைந்து நின்று பிராமணரல்லாதார் இயக்கத்தைத் தோற்றுவித்தவர்; தியாகராயரைப் போன்றே தோற்றப்பொலிவு மிக்கவர்;[32] மிகச்சிறந்த வாதத்திறமை மிக்க பேச்சாளர்;[33] தியாகராயருடன் இணைந்து நகரமன்ற உறுப்பினராகச் செயலாற்றினார். அந்நிலையில் டாக்டர். டி.எம். நாயருக்கும் தியாகராயருக்கும் கருத்து வேறுபாடுகள் தோன்றின.[34] கழிவுநீர் வயல்கள்,[35] திருவல்லிக்கேணிக் குளத்தை மூடுதல்[36] போன்ற திட்டங்களில் இவ்விருவரிடையே கருத்து வேறுபாடு வளர்ந்தது. இவ்வேறுபாடு பிராமணரல்லாதார் இயக்கம் தோன்றுவதற்குத் தடையாக இருந்தது எனலாம். அதையுணர்ந்த டாக்டர். நடேசனார் மிக முயன்று இவ்விருவரையும் இணைத்து வைத்தார்.[37] பிராமணரல்லாதார் இயக்கத்தின் வளர்ச்சிக்கு டாக்டர். நாயரின் பேச்சாற்றல் பெரிதும் உதவியது.[38]

ஆதி திராவிடரின் ஒத்துழைப்பையும் பெற்றுத் தந்தது.[39] தியாகராயரின் கொள்கையறிக்கையை மக்களிடையே பரப்பியதில் டாக்டர். டி.எம். நாயரின் பங்கு வியக்கத்தக்கது.[40] டாக்டர் நடேசனாரின் கருத்துக்கு மதிப்பளித்த தியாக ராயர் நகராட்சி மன்றத்தில் தம்மிடம் கருத்து வேறுபாடு கொண்டிருந்த டாக்டர். டி. எம். நாயருடன் இணைந்தது தியாகராயரின் சான்றாண்மைக்குச் சான்றாகும். அத்துடன் டாக்டர் டி.எம். நாயரின் தன்னலம் அற்ற போக்கும், பேச்சாற்றலும் தியாகராயரை ஈர்த்தன எனலாம். மேலும் தியாகராயர் அவ ரிடம் கொண்டிருந்த அன்பு ஆன்மீகமானதாகும். அவரது மறைவு, எதற்கும் கலங்காத தியாகராயரையே கலக்கிற்று. தியாகராயர் தமது வலக்கையை இழந்ததாகக் கூறி வருந்தினார்.[41] இயக்கத்தைத் தொடங்கும் போது நீண்ட காலத்திற்குப் பிறகு மீண்டும் டாக்டர். டி.எம். நாயரைச் சந்தித்த தியாகராயர் கண்கலங்கி, அவரை மார்புறத் தழுவிக்கொண்டார். இக்காட்சி உடனிருந் தோரையும் நெகிழச் செய்தது.[42]

பிறர்பால் கருத்து வேற்றுமை காரணமாகக் கோபங்கொள்ளுவதோ, பிற ரின் வெறுப்பைத் தேடிக் கொள்ளுவதோ மனிதனின் இயற்கைப் பண்பாகும். ஆயினும், தியாகராயர் இயற்கையாகவே இப்படிப்பட்ட கோபத்தையும் வெறுப்பையும் கொள்ளாது, மகிழ்ச்சியும் விருப்பும் கொண்டு வெள்ளை உள்ளத்துடன் பழகும் சால்புடையவராக இருந்தார். வாசு நாயுடுவுடன் அவர் கொண்டிருந்த இணக்கம் இதனை மெய்ப்பிக்கிறது. வாசு நாயுடு நகரமன்ற உறுப்பினர்களுள் ஒருவர்; தியாகராயரின் நண்பர். அவர் தியாகராயருடன் 'பாசு திருமண நகல் குறிப்பு' (மசோதா) பற்றிப் பேசினார். அவருடைய கருத் துக்களைத் தியாகராயர் உடனுக்குடன் தக்க விடையிறுத்து மறுத்து வந்தார். வாதத்தில் வெல்ல இயலாத நிலையில் வாசு நாயுடுவுக்குச் சினம் மூண்டது. தகாத சொற்களைக் கூறி ஏசத் தொடங்கிவிட்டார். தியாகராயரோ அவரது அறியாமையை எண்ணி வாய்விட்டு நகைத்தார். அதன்பிறகு வாசுநாயுடு பல முறை பல செய்திகள் குறித்துத் தியாகராயருடன் பேசி உள்ளார். ஆனால் தியாகராயரோ அன்று நடந்த விவாதத்தைக் குறித்தோ, வாசுநாயுடுவின் தவறு குறித்தோ சிறு சொல் கூறிக் கடிந்தவரல்லர். அதைப் பற்றி நினைவூட்டி அவரை வருந்தச் செய்தவருமல்லர்.[43]

ஆங்கில இளவரசரின் வருகையின்போது ஒத்துழையாமை இயக்கத்தினர் தியாகராயரைத் தாக்கியதுடன், அவரது இல்லத்தையும் சேதப்படுத்தினார். இதனால் வெகுண்ட தியாகராயரின் நண்பர் பார்த்தசாரதி நாய்க்கர், ஒத்துழையாமை இயக்கத்தினரைத் தண்டிக்க விரும்பினார். தியாகராயர் அவ ரைத் தடுத்ததோடு, பழிவாங்கும் மனப்பான்மையுடையவர்களுக்குத் தமது கட்சியில் இடமில்லை என்றும், இத்தகைய மனப்போக்குடன் இருப்பவர்கள்

தமது கட்சியிலிருந்தே வெளியேறலாம் என்றும் மிகக் கடுமையாக எச்சரித்தார்.[44] தியாகராயரின் சான்றாண்மைக்கு இந்நிகழ்ச்சி மிகச்சிறந்த எடுத்துக் காட்டாகும்.

## 7.3.2. மாற்றுக் கொள்கையினராலும் பாராட்டப்படும் தன்னலமின்மையும் பெருந்தகைமையும்

1923-ஆம் ஆண்டுத் தேர்தலில் தியாகராயரின் வெற்றிக்குத் திரு.வி.க.வின் வாழ்த்தும் பெரிதும் பயன்பட்டதெனத் தெரிகிறது.[45] கட்சிக் கொள்கைகளில் மாறுபட்ட கருத்துடையவர்களாக இருந்தாலும், தியாகராயர் என்ற தனி மனிதரின் வெற்றி அனைவராலும் பாராட்டப்பெற்றது. அதற்குக் காரணம் தியாகராயரின் தன்னலமற்ற பொதுப் பணியேயாகும்.

சர்.சி.பி. இராமசாமி அய்யர் அரசியலில் தியாகராயருக்கு எதிராக இருந்தார். தேர்தல் கூட்டங்களில் தியாகராயரைக் கடுமையாகத் தாக்கினார்; தம்மிடமிருந்த துப்பாக்கியைக் காட்டிச் சுட்டுவிடுவதாகக் கூறி அச்சுறுத்தினார்.[46] ஆனால் தியாகராயரின் அமைதியான, அழுத்தமான பேச்சு இத்தகைய அச்சுறுத்தல்களையும் வென்றது. அத்தேர்தலில் போட்டியிட்ட அனைவரைக் காட்டிலும் அதிக வாக்குகளைப் பெற்றுத் தியாகராயர் வென்றார்.[47] இத்தகைய தேர்தல் களத்தில் தம்மோடு முரணிய சர். சி. பி. இராமசாமி அய்யருடனும் நட்புரிமை பூண்டவராகத் திகழ்ந்தார் அவர். அவர்கள் சட்டமன்றத்தில் ஒருவருக்கொருவர் எலியும் பூனையுமாகக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுவர். ஆனால் மன்றத்தை விட்டு வெளி வந்ததும் உற்ற நண்பர்களாகத் திகழ்வார்கள்.[48] இந்நிகழ்ச்சி தியாகராயரின் பெருந்தகைமைக்குச் சான்றாவதுடன் அக்கால அரசியல் தலைவர்களின் பரந்த, பண்பட்ட உளப்பாங்கிற்கும் எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது எனலாம். தண்டையார்ப் பேட்டைப் பகுதியிலும், வண்ணாரப்பேட்டைப் பகுதியிலும் வாழ்ந்திருந்த பிராமண நண்பர்கள் பலரும் தியாகராயருக்கே தங்கள் வாக்குகளை அளித்தனர் என்னும் செய்தி உணரத்தக்கது.[49] இவையாவும் தியாகராயரின் தன்னலமற்ற போக்கிற்கும், தூய உள்ளத்திற்கும் தக்க சான்றுகள் எனலாம்.

தியாகராயர் மறைந்தவுடன் சட்டமன்றத்தில், இரங்கல் தீர்மானத்தை முன்மொழிந்த சர். சி.பி. இராமசாமி அய்யர் தியாகராயரின் வரலாற்றையும், அவர் ஆற்றிய தொண்டினையும் குறிப்பிட்டு, இறுதியாக அவரால் பிராமணர் அல்லாதார் பெற்ற விழிப்புணர்வையும் நன்மைகளையும் எடுத்துக் கூறினார். மேலும் அவர் ஒரு வீரம்மிக்க போராளி என்றும், நம்பத்தக்க தோழர் என்றும் பாராட்டினார்.[50] தம்மால் எதிர்க்கப்பட்ட பிராமணச் சமுதாயத்தைச் சார்ந்த ஒருவராலேயே இவ்வாறு பாராட்டப் பெறவேண்டுமானால் அவர்தம் நாணயமும், நேர்மையும், பெருந்தகைமையும் அறிந்து மனங்கொள்ளத் தக்கன.

அன்னிபெசன்ட் அம்மையார் அயர்லாந்து நாட்டுப் பெண்மணி. இந்திய அரசியலில் ஈடுபாடுகொண்டு 'ஹோம்ரூல்' இயக்கத்தைத் தொடங்கினார். இந்தியாவிற்கு உடனே சுயாட்சி பெறுவது இவ்வியக்கத்தின் நோக்கம் என்று கூறப்பட்டது. பிராமணர்கள் இவரைச் சூழ்ந்து கொண்டனர். இவ்வியக்கம் முதல் உலகப்போரில் ஜெர்மனிக்குச் சார்பாக இருந்து செயல்பட்டது என்று கருதப்பட்டது. இவ்வம்மையார் தமது 'நியூ இந்தியா' இதழின் வாயிலாகத் தியாகராயரையும் அவரது இயக்கத்தையும் வன்மையாக எதிர்த்தார்.[51] அவ்வமயம் தியாகராயருடன் இருந்த டாக்டர். டி.எம். நாயர் 'ஜஸ்டிஸ்' இதழ் வாயிலாக 'நியூ இந்தியா'வின் கேள்விக் கணைகளுக்கும், முறையற்ற பிரச்சாரத்திற்கும் தக்கவிடையிறுத்தார். 'ஜஸ்டிஸ்' இதழில் வெளியாகும் கருத்துக்களையும்[52] மறுப்பையும்[53] தமது இதழில் வெளியிட்டார் அம்மையார். ஆனால் இத்தகைய செயல்கள் தியாகராயரின் உள்ளக்கிடக்கையை மக்களுக்கு நன்கு எடுத்துக் காட்டுவனவாகவே அமைந்து, தியாகராயரின் செல்வாக்கை மேலும் வளர்ப்பதற்கே உதவின என்பது குறிப்பிடத்தக்கது. சுயாட்சி அடைந்தால், அதிகாரம் பெறுபவர் பிராமணர்களா அல்லது பிராமணரல்லாதாரா என்பது தான் சென்னை அரசியலில் உள்ள முக்கியமான சிக்கல் என்பதை உணராதவராக அம்மையார் விளங்கினார்.[54]

இவ்வாறு அரசியலில் தியாகராயருக்கு மாறுபட்டவராக இருந்த அம்மையாரும் தியாகராயரின் பெருந்தகைமைப் பண்பில் ஈர்க்கப்பட்டவராகவே இருந்தார்.[55] தியாகராயர் அம்மையாரைக் காணும் போதெல்லாம் வெறுப்புக் காட்டாது, அன்புடன் உரையாடுவார். "என்னம்மா! எங்கள் நாட்டுக்கு வந்து எங்கள் மக்களுக்கே எதிராக இருக்கிறீர்களே!"[56] என்றெல்லாம் வேடிக்கையாகப் பேசுவார். இந்தியா, மனிதத் தன்மை, சமயம், தத்துவம், இலக்கியம், நாடகம் ஆகியவற்றை மட்டுமல்ல, தலை சிறந்த வீரர்களையும் அழியாத நம்பிக்கையையும் உலகத்திற்கு அளித்துள்ளது. அதனை உணர்ந்து வாழுமாறு இந்தியர்களைத் தூண்டுவதில் இருவருக்கும் ஒருமித்த கருத்து இருந்தது.[57] ஆனால் அம்மையார் பிராமணர்களின் சார்பாகவே இருந்ததால் அரசியலில் தியாகராயருடன் மோதும் நிலையில் இருந்தார். ஆயினும் தியாகராயரின் எளிய, தன்னலமற்ற, கள்ளமில்லாத பண்புதான் மற்ற எல்லாப் பகையுணர்வுகளையும் கடந்த நிலையில் நட்புக் கொள்ள வைத்தது எனல் பொருந்தும்.

தியாகராயரைப் போன்றே பெரியாரும் காங்கிரசில் ஈடுபாடு கொண்டு உழைத்தவர். தியாகராயர் காங்கிரசிலிருந்து விலகி, நீதிக்கட்சியை அமைத்த போது அதனை முழுமுச்சுடன் எதிர்ப்பவராக இருந்தார். அவர் அதைத் தமது கடமையாகவும் கருதினார்.[58] இருப்பினும் தனிப்பட்ட முறையில் தியாகராயரின் பண்பு நலனுக்கு ஆட்பட்டவராகவும், நட்புப் பூண்டவராகவுமே

இருந்தார். பெரியார் தியாகராயரின் இல்லத்துக்குச் சிலமுறை வந்ததாகவும் நட்புரிமையுடன் கலந்துரையாடியதாகவும் தெரிகிறது.[59] பின்னர்த் தாமும் காங்கிரசில் பிராமணர்களின் ஆதிக்கம் பெருகுவதைக் கண்டு மனம் வெறுத்து வெளியேறினார்.[60] தாம் நீதிக்கட்சியை வன்மையாகத் தாக்கி அதன் அழிவிற்காக உழைத்த காலத்திலும் தியாகராயரும் அவருடைய நீதிக்கட்சித் தலைவர்களும் தம்மிடம் மதிப்புடனும் அன்புடனுமே நடந்து கொண்டதாகப் பெரியார் குறிப்பிட்டுள்ளார்.[61] மேலும் அவர், "அரசியல் உலகில் எமக்கும் அப்பெரியாருக்கும் உள்ள வேற்றுமை வடதுருவம், தென்துருவம் எனின் குன்றக் கூறுதலேயாகும். எனினும் அப்பெரியாரின் அருங்குணங்களையும், அளவில்லாத் தேசபக்தியையும், ஆற்றலையும் நாம் போற்றுகிறோம். உறங்கிக் கிடந்த பார்ப்பனரல்லாதவர்களை உயிர்ப்பிக்கச் செய்த பேராற்றலையும் நாம் போற்றி, அப்பெரியாரைத் தமிழ்நாடு இழக்க நேர்ந்தமைக்குப் பெரிதும் வருந்துகிறோம்"[62] என்று கூறியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

தியாகராயர் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தைத் தோற்றுவித்தபோது, கேசவப்பிள்ளை தியாகராயருக்கு எதிராகத் தோற்றுவிக்கப்பட்ட சென்னை மாகாணச் சங்கத்தில் தலைவராக இருந்து பணியாற்றினார். தியாகராயரை எதிர்த்துப் பிரச்சாரம் செய்தார். ஆனால் ஓரிரு ஆண்டுகளில் அச்சங்கம் கலைக்கப்படக் கேசவப்பிள்ளை தியாகராயருடன் இணைந்தார். கேசவப்பிள்ளை தமக்கு எதிராகப் பணியாற்றிய காலத்திலும் தியாகராயர் அவருடன் நட்பும் அன்பும் கொண்டே பழகி வந்தார். கேசவப்பிள்ளைக்குத் திவான் பகதூர் பட்டமளிக்கப்பட்டபோது, தனிப்பட்ட முறையில் தமது பாராட்டுதல்களைத் தெரிவித்து மடல் வரைந்தார்.[63] அத்துடன் தமது தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் நோக்கத்தைக் கூறி, அதில் சேர்ந்து தம்முடன் பணியாற்றுமாறு அவருக்கு வேண்டுகோளும் விடுத்தார்.[64]

காங்கிரசின் சார்பில் கேசவப்பிள்ளை அனந்தப்பூர் மாவட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டபோதும் அவ்வெற்றி பிராமணரல்லாத சமூகத்தின் வெற்றி என்று கருதி, நெஞ்சாரப் பாராட்டினார்.[65] மேலும் பன்முறை பல சிக்கல்களுக்குக் கேசவப்பிள்ளையின் கருத்தையறியப் பல கடிதங்கள் எழுதியுள்ளார்.[66] இக் கடிதங்கள், பொது நன்மைக்காகத் தமது கௌரவத்தையும் பாராட்டாது, எதிரியையும் அணுகி, அவர் தம் கருத்தையும் தெரிந்து செயலாற்ற விழையும் தியாகராயரின் தன்னலமற்ற போக்கை வெளிப்படுத்துகின்றன.

சத்தியமூர்த்தி சுயராச்சியக் கட்சியைச் சேர்ந்தவர். 1923-ஆம் ஆண்டுத் தேர்தலில் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அரசியலில் தியாகராயரைக் கடுமையாகவும் வன்மையாகவும் எதிர்த்தார்.

1923-ஆம் ஆண்டு நீதிக்கட்சியின் அமைச்சரவையின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப் பெற்றது. அதை ஆதரித்து உரையாற்றிய சத்தியமூர்த்தி, தாம் பட்டம் பதவிகளை விரும்பாத கட்சியைச் சார்ந்தவர் என்று கூறியதோடு, சேமங்கலத்தை எடுத்து மணியடித்தும், சங்கு ஊதியும் நீதிக் கட்சிக்குச் சாவு மணியடிப்பதாகவும் கூறினார்.[57] இவ்வாறு நீதிக்கட்சியின் மீது ஆழ்ந்த வெறுப்புணர்வு கொண்ட சத்தியமூர்த்தியையும் தியாகராயரின் பண்பு நலன்கள் வெற்றி கொண்டன.

"தியாகராயரது அரசியல் பற்றிய கருத்து வேறுபாடு எத்தகையதாக இருப்பினும், அவரது பண்பையும் தன்னலமற்ற போக்கையும் பொதுநலப் பணியையும் யாராலும் பாராட்டாமலிருக்க முடியாது"[58] என்னும் சத்தியமூர்த்தியின் கூற்றே இதற்குச் சான்றாகும். தியாகராயர் தமது கோடிக்கணக்கான சொத்து முழுவதையும் நலிவுற்ற மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டவும் ஏழை எளியவர்களின் துயர் துடைக்கவுமே பயன்படுத்தினார். அவரது மறைவுக்குப் பின்னர் அவரது வளமனையும் கூட விற்கப்பட்டது. அக்காலச் சூழ்நிலையில் ஆங்கிலேயரின் ஆதரவாளர் என்று குற்றஞ்சாட்டப் பெற்ற நிலையிலும் அவற்றையெல்லாம் தாங்கிக்கொண்டு அவர் செய்த தன்னலமற்ற தியாகம் அளவிடற்கரியது.

தியாகராயர், 'பிராமணத் துவேஷம்' கொண்டவர்; அவர் மாநகராட்சித் தலைவரானால், மன்றத்தில் பிணக்குகள் நேரலாம் என்று சிலர் ஐயுற்றனர். அவ்வமயம் வியாசராவ் என்னும் உறுப்பினர் தியாகராயர் தமக்கு எழுதிய கடிதத்தைப் படித்துக் காட்டினார்.[69] இக்கடிதம் தியாகராயரின் தெளிந்த உள்ளத்தையும், தன்னலமற்ற இயல்பையும், சென்னை நகரின் வளர்ச்சியில் அவர் கொண்டிருந்த ஆர்வத்தையும் வெளிப்படுத்தும் ஆவணமாக அமைந்திருந்தது.

டி.எஸ். இராமசாமி அய்யர் என்பவர் ஒருமுறை தியாகராயருக்கு எதிரணியில் தேர்தலுக்கு நின்றார். இருவரும் தேர்தல் பிரச்சாரம் செய்தனர். ஆனால் தியாகராயரோ இராமசாமி அய்யரைப் பற்றி குறை கூறாததுடன் அவரது நிறைகளையே எடுத்துக்கூறியது கண்டு அனைவரும் மிக வியந்தனர்.[70] தியாகராயர் பிராமணர்களின் ஆதிக்கத்தை வெறுத்தார்; ஆயினும், தனிப்பட்ட முறையில் அவர்களுடன் பெருந்தன்மையுடன் நட்புடனும் பழகினார் என்பது இதனால் பெறப்படுகின்றது. மற்றொருமுறை மன்றத்தில் தாம் ஆற்றிய உரை இராமசாமி அய்யரின் உள்ளத்தைப் புண்படுத்தியிருக்குமாவென ஐயுற்றார் தியாகராயர். மறுநாள் உலகப் பொதுப் பற்றாளர் கழகத்தில் (Cosmopolitan Club) அவரைச் சந்தித்து அன்புடனும் ஆதரவுடனும் அதுபற்றி விசாரித்தார். இந்நிகழ்ச்சியைக் கூறிய இராமசாமி அய்யர் "தியாகராயரது உண்மையும், நேர்மையும், ஒப்புரவும், தன்னலம் இன்மையும் வியத்தற்குரியன"[71] என்று பாராட்டினார்.

தியாகராயர் தோல் பதனிடும் தொழிலை மேற்கொண்டிருந்ததால் அவருக் கென உப்பளங்களும் இருந்தன. அவர் உப்பு வரியினால் நேரடியாகப் பாதிக் கப்பட்டார். இருப்பினும் உப்பு வரியை எதிர்த்துப் போராடுவதைவிட, மாநிலங் கள் மத்திய அரசுக்கு அளிக்கும் நிதியைக் குறைப்பதற்காகப் போராடுவது தான் முக்கியமானது என்று கருதிச் சட்டமன்றத்திலும் எடுத்து உரைத்தார்.[72] இந்நிலையில் அவர் காந்தியடிகளின் உப்புச் சத்தியாக்கிரகத்தை ஆதரிக்காத வராக இருந்தார். தமக்கு நேரும் இழப்பைக் காட்டிலும், தமது மாநிலத்துக்கு நேரும் இழப்பையே பெரிதாகக் கருதும் அவருடைய உளப்பாங்கு பாராட்டு தற்குரியது.

டாக்டர் நடேசனார் பிராமணரல்லாதாரின் நலத்தில் நாட்டங் கொண்டு உழைத்து வந்தார். அவரது பணி தியாகராயரை ஈர்த்தது. இருவருக்குமிடையே இறுக்கமான நட்பு வளர்ந்தது.[73] தியாகராயரின் பிராமணரல்லாதார் இயக்கத் திற்கு தூண்டுதலாகவும் முன்னோடியாகவும் திகழ்ந்தவர் டாக்டர் நடேசனார் எனலாம். தியாகராயரின் தாய்மைக் குணமும், அன்பும், பிற நலத் தியாகமும், டாக்டர் நாயரின் வீரம் செறிந்த மறக் குணமும், ஆழ்ந்த அறிவுத் திறனும், வசீகரப் பேச்சு வன்மையும் ஒன்று சேர்ந்து நீண்டகாலம் நிலைத்திருக்கும்படி செய்ததன் வாயிலாகப் பிராமணரால்லாதாரின் எழுச்சிக்கு முயன்றவர் டாக்டர். நடேசனாரே எனலாம்.[74]

ஆற்காடு இராமசாமி நீதிக்கட்சியின் மூளையாக விளங்கினார் என்றால், டாக்டர் நடேசனார் அதன் இருதயமாக விளங்கி வந்தார்[75] என்று பாராட்டும் அளவுக்கு தியாகராயருடன் இணைந்து நின்று பணியாற்றினார். ஆயினும் அரசியலில் நண்பர்களும் எதிரிகளாக மாறுவது இயற்கை. டாக்டர். நடேசனா ரும் இவ்விதிக்கு விலக்கல்லர். 1923-ஆம் ஆண்டு தேர்தலில் தமக்குரிய இடம் கொடுக்கப்பெறவில்லை என்று டாக்டர் நடேசனார் கருதினார். ஆகவே நீதிக்கட்சிக்கு எதிராகத் தனித்து நின்று தேர்தலில் வெற்றி பெற்றார்.[76] சட்ட மன்றத்தில் தியாகராயருக்கு எதிர் வரிசையில் அமர்ந்தார். இந்நிலையிலும் தியாகராயர் நடேசனாருடன் முன்பு போலவே அன்புடன் பழகி வந்தார். டாக்டர் நடேசனாரும் எதிர் வரிசையில் அமர்ந்திருந்தாலும், பஞ்சாலை வேலை நிறுத்தத்தின்போது தியாகராயர் அதனைத் தடுக்க எடுத்துக்கொண்ட முயற்சிகளை நெஞ்சாரப் பாராட்டினார்.[77]

அத்துடன் தியாகராயரின் மறைவு குறித்து நடேசனார் ஆற்றிய உரை தியாகராயரின் வெளிப்படையான பேச்சு, தன்னலமற்ற போக்கு, உண்மை, நேர்மை, எளிமை, ஒப்புரவு ஆகியவற்றை உலகுக்கு எடுத்துக்காட்டும் சீரிய உரையாகத் திகழ்ந்ததை உணரலாம்.[78]

தியாகராயர் மக்கள் அனைவரும் சரிநிகர் சமானமாக வாழும் குடியரசை விரும்பி அதற்காகத் தன்னலமற்ற பான்மையில் பணியாற்றினார். தியாக ராயருடன் தொடர்புகொண்டு, நீதிக்கட்சியின் முதலமைச்சராகவும் விளங்கிய பனகல் அரசரின் கூற்றுக்கள் இதனை மெய்ப்பிக்கின்றன.

பனகல் அரசர் இளமையிலேயே தியாகராயரின் பண்பு நலன்களால் ஈர்க்கப்பட்டனர். பனகல் அரசர் கல்லூரிப் புகுமுகத் தேர்வில் முதலிடம் பெற்றபோது தியாகராயர், "குழந்தாய்! அகங்காரம், ஆணவம் இரண்டையும் அண்டவிடாது வாழவேண்டும்"[79] என்று அறிவுறுத்தினார். இதனால் தியாக ராயரின் பண்புநலன் வெளிப்படுவதன்றி, அவ்வழியில் இளையோரைக் கொண்டு செலுத்தும் வழிகாட்டியாகவும் அவர் விளங்கியமை புலப்படுகின் றது. எனவேதான், பனகல் அரசர் கூவம் ஆறு சீர்படுத்தப்பட்டால் அதற்குத் 'தியாகராய நதி' என்று பெயரிட வேண்டும்[80] என்று கூறினார். முதலமைச்சர் என்ற நிலையில், தியாகராயரின் உள்ளக்கிடக்கைகளைச் செயல்படுத்துவதில் பனகல் அரசர் சிறந்து விளங்கினார்.

நோய்வாய்ப்பட்டிருந்த நிலையிலும் தியாகராயர் ஆதிதிராவிடர் நல னையே கருதிக் கொண்டிருந்தார். அவர்களுக்குப் பொதுவிடங்களில் மற்ற மக்களுடன் சரிநிகர் சமானமாகப் பழகும் உரிமைகள் கிடைக்க வேண்டு மென்று விரும்பினார். அதற்கான சட்டம் நிறைவேற்றப் பெற்றது என்று தமது இன்னுயிர் நீங்குவதற்கு முன் உணர்ந்தார்.[81] தியாகராயரைச் சிலர் பிற்போக் காளர் என்று கருதுகின்றனர். மேற்காட்டிய நிகழ்ச்சிகளை நோக்குமிடத்து அவர்தம் கூற்று வெற்றுரை என்பது தெளிவாகக் கூடும். எல்லா மக்களும் சரிநிகர் சமானமாக வாழும் உண்மைக் குடியரசையே விரும்பி, அதற்காகத் தன்னலமற்ற பான்மையில் உழைத்த தலைவர்[82] அவர் என்பது இதனால் உறுதியாகிறது.

### 7.3.3. நட்புடைமை

தியாகராயர் எதிரியையும் நட்பாக்கிக் கொள்ளும் தகைமையுடையவர் என்பது முன்னர் விளக்கப் பெற்றது. அந்த நட்பையும் கூட நாட்டு நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ளுவதில் வல்லவர். கோலாப்பூர் அரசருடன் தியாகராயர் கொண்டிருந்த நட்பு இதற்குத் தக்க சான்றாகிறது.

இந்திய நாட்டிலேயே சென்னை மாநிலமும், பம்பாய் மாநிலமும் தான் துணிந்து பிராமணர்களின் ஆதிக்கத்தை எதிர்த்துக் குரலெழுப்பின. பிராமண ரல்லாதார் இயக்கமும் இவ்விரு மாநிலங்களில்தான் முதன்முதலில் தோன் றிற்று. பம்பாய் மாநிலத்தில் அரசரும் கூடப் பிராமணர்களால் அவமதிக்கப் படும் நிலை இருந்தது.[83] ஆகவே, பிராமணரல்லாதார், தீண்டாதார் என்னும்

மக்கள் கூட்டத்தை விழித்தெழச் செய்தார் கோலாப்பூர் அரசர். இத்துறையில் தியாகராயரும் கோலாப்பூர் அரசரும் இணைந்து செயலாற்றினர். தியாகராயர் தாம் தொடங்கிய இயக்கத்தை நாடு தழுவிய இயக்கமாக்கப் பாடுபட்டார். அதற்காக கோலாப்பூர் அரசரின் நட்பைப் பயன்படுத்திக்கொண்டார். வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவக் கோரிக்கையை வலியுறுத்தவதற்கு அவரை இணங்கச் செய்தார்.[84] 1920-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 27-ஆம் நாள் ஹுப்ளியில் நடைபெற்ற பிராமணரல்லாதார் மாநாட்டிற்குத் தலைமை தாங்கி,[85] அம்மாநிலத்து மக்களிடையே விழிப்புணர்வு ஊட்டினார்.[86]

உறுதியான சாதிகளற்ற சமுதாயமும் கல்வியிற் சிறந்த இந்தியாவுமே தியாகராயர் கண்ட கனவாக இருந்தன.[87] அதற்காகக் கோலாப்பூர் அரசரின் நட்பையும் துணையையும் பெற்றார். இந் நட்பின் விளைவாகச் சென்னை மாநில மக்களின் கல்வி வளர்ச்சிக்காகச் சென்னையில் 'மராட்டியக் கல்வி நிதி' கோலாப்பூர் அரசரால் ஏற்படுத்தப் பெற்றது.[88] இந் நட்பின் இறுக்கம் காரணமாகத் தியாகராயர் தமது முதுமையையும் தளர்ச்சியையும் பொருட் படுத்தாது பெல்காமில் நடைபெற்ற அனைத்திந்தியப் பிராமணரல்லாதார் மாநாட்டில் கலந்து கொண்டார்.[89] கோலாப்பூர் அரசருக்கு நினைவுச் சின்னம் அமைக்க ஏற்படுத்தப்பட்ட குழுவில் தியாகராயரும் ஓர் உறுப்பினராக இருந்து ஆவன செய்தார்.[90]

தியாகராயர் சாதி, இனம், மதம் என்னும் எவ்வித வேறுபாடுமின்றி நட் புரிமை பூணும் இயல்பினராக இருந்தார். தியாகராயர் சென்னை நகர மன்ற உறுப்பினரான முகம்மது உஸ்மானுடன் கொண்ட நட்பு இத்தகையது. முகம்மது உஸ்மான் தியாகராயரின் இல்லத்திற்குச் சென்று உடனுண்ணும் அளவிற்கு ஆழ்ந்த நட்புக் கொண்டார்.[91]

தியாகராயர் தம்முடன் பழகிய நண்பர்களிடம் என்றும் உண்மையாக நடந்து கொள்ளுவார். அவரைப் போன்ற உற்ற நண்பரைப் பெறுதல் அரிது[92] என்பது இராசா. சர். அண்ணாமலை செட்டியாரின் கூற்றாகும். தம் நண்பர் களுடன் பழகும்போது குழந்தைபோல் பழகும் தன்மை வாய்ந்தவர். தம் நண்பர் அப்பாசாமிப் பிள்ளையுடன் குதிரைக்காரனைப் போன்ற தோற்றத் துடன் தியாகராயர் எடுத்துக்கொண்ட படம் இப்பண்பிற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது.[93]

பிராமணரல்லாதார் இயக்கத்தைத் தோற்றுவித்த மூலவரேயாயினும், தியாகராயர் வைதிகப் பிராமணர் பலரைச் சிறந்த நண்பர்களாகப் பெற்று இருந்ததும், அவர்களிடம் நேய மனப்பான்மையுடன் பழகியதும் அவரது பண்பிற்கு முடிக் கலனாக விளங்குகின்றன.[94]

தாம் 'சர்' பட்டம் பெற்றவராகவும், புகழ் படைத்தவராகவும், செல்வராக வும் இருந்தாலும் மற்றவர் யாரையும் துச்சமாகவோ அல்லது குறைவாகவோ மதித்தாரில்லை. தம்மிடம் வருபவர்களை இன்முகத்துடன் வரவேற்று அவர் களுக்கு தம்மாலியன்ற உதவிகளைச் செய்து அனுப்புவது இவரது இயல்பாகும்.

### 7.3.4. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத் தூய உள்ளம்

தியாகராயர் தமக்குச் சரியென்றுபடும் கருத்துக்களை ஒளிவு மறைவு இன்றி எடுத்துக் கூறும் இயல்பினர்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத பெருந்தகை. சுதேசித் தொழில் வளர்ச்சியில் காந்தியடிகள் கருத்துச் செலுத்தினார், கைத்தறி நெசவை ஆதரித்தார். அதைத் தமது ஆசிரமத்தில் கற்பிக்க ஏற்பாடு செய்தார்.[95] நெசவுத் தொழிலைக் கற்பதற்காக மகன்லால் காந்தியையும்,[96] மணிலால் காந்தியையும்[97] சென்னைக்கு அனுப்பி வைத்தார்.

அவர்கள் தியாகராயரின் நெசவாலையில் ஆறு மாதங்கள் தங்கியிருந்து நெசவுத்தொழிலைக் கற்றனர்.[98] 1920-ஆம் ஆண்டு காந்தியடிகள் தியாகராயரின் நெசவாலையைக் கண்டு நெகிழ்ந்து (Impressed) பாராட்டினார். இருப்பினும் தியாகராயர் கைராட்டையில் நூல்நூற்பது இக்காலத்துக்குப் பொருந்தாது என்று காந்தியடிகளிடம் வெளிப்படையாக எடுத்துக் கூறினார்.[99] தவிர, காந்தியடி களின் கதர்த் திட்டத்தையும் தியாகராயர் ஆதரிக்கவில்லை. கைத்தறிக் கண் காட்சியைத் திறந்து வைப்பதற்குமுன் கதரைப் பற்றி எள்ளி நகையாடும் பான்மையில் தம் கருத்துக்களைக் கூறினார்.[100] சட்டமன்றத்திலும் இதே பாங் கில் உரையாற்றியுள்ளமையும்[101] குறிப்பிடத்தக்கது.

தியாகராயர் தேசிய மொழி பற்றிய கருத்திலும் காந்தியடிகளுடன் மாறு பட்ட கருத்துக் கொண்டிருந்தார். காந்தியடிகள் இந்திமொழி இந்தியத் தேசிய மொழியாக இருக்கவேண்டுமென்று கருதினார். முதலில் சென்னை மாநில மக்கள் இதனை ஏற்குமாறு செய்யவேண்டும் என்னும் முடிவுக்கு வந்தார்.[102] அதற்கான முயற்சிகளையும் மேற்கொண்டார். தியாகராயர் இதனை வன்மை யாக எதிர்த்து ஆங்கிலமே தேசிய மொழியாக இருக்கவேண்டும் என்று வலியுறுத்தினார்.[103]

காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் குண்டர்களும் முரடர்களும் பங்கு கொண்டதையும், அவர்கள் மக்களுக்கும் பொதுச் சொத்துக்களுக்கும் இழைத்த தீங்கையும் எடுத்துக் காட்டித் தியாகராயர் தமது 'ஜஸ்டிஸ்' இதழில் கண்டித்தார்.[104] காந்தியடிகள் சிறைப்பட்ட போது அவரது நாட்டுப்பற்றையும், தன்னலமற்ற பணியையும் புகழ்ந்துரைத்தார்.

அதே நேரத்தில் சுயாட்சி கோரும் காந்தியடிகளின் கிளர்ச்சி அக்காலத்திற்கு ஏற்றதன்று என்னும் தமது கருத்தையும் ஒளிக்காது வெளியிட்டார்.[105]

1921-ஆம் ஆண்டில் காந்தியடிகள் சென்னைக் கடற்கரையில் 'உண்மையான பிராமணத் தன்மை' என்பது பற்றி உரையாற்றினார்.[106] திராவிட மொழி, பண்பாடு, தத்துவம், இலக்கியம், வரலாறு இவை பற்றியறியாத நிலையில் காந்தியடிகள் பிராமணர்களை வானளாவப் புகழ்வதைக் கண்டித்து தியாகராயர் ஓர் அறிக்கை வெளியிட்டார்.[107]

ஒருமுறை காந்தியடிகள் தியாகராயரின் இல்லத்திற்கு வந்து, தமது சுயாட்சி இயக்கத்திற்கு ஆதரவு வேண்டியபொழுது தியாகராயர் அவரை உரிய சிறப்போடு வரவேற்றார். தாம் சுயாட்சியை விரும்பாதவரல்லர் என்றும், ஆனால் காந்தியடிகளின் போராட்ட முறையைத் தாம் ஏற்கவில்லை என்றும், தாம் தமது வழியிலேயே செல்ல விரும்புவதாகவும் கூறித் தமது மறுப்பைத் தெரிவித்தார்.[108] இந்நிகழ்ச்சிகள் யாவும் தியாகராயர் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத மனம் படைத்தவர் என்பதைத் தெளிவாக்குகின்றன.

இங்ஙனம் சில கொள்கைகளில் காந்தியடிகளும் தியாகராயரும் கருத்து வேற்றுமை கொண்டிருந்த போதிலும் இவ்விரு தலைவர்களும் ஒருவரை ஒருவர் மதித்தும், தமக்குள் அன்பு பூண்டவர்களாகவும் வாழ்ந்தனர். 1915-ஆம் ஆண்டு காந்தியடிகள் உலகப் பொதுப் பற்றாளர் கழகத்தில் (Cosmopolitan Club) வருகை தந்தபோது அதன் துணைத் தலைவராக இருந்த தியாகராயர் காந்தியடிகளுக்கு மாலையணிவித்துச் சிறப்புச் செய்த நிகழ்ச்சி[109] இதனை மெய்ப்பிக்கிறது.

இராஜாஜி அவர்களுடன் தியாகராயர் கொண்ட தொடர்பும் மேற்காட்டிய பண்பு நலனை விளக்குவதாக அமைந்துள்ளது. இராஜாஜி பிராமண குலத்தவராயினும் அவ்வுணர்வின்றித் தாழ்ந்த குலத்தோரெனக் கருதப்பட்ட மக்களுக்கு தொண்டாற்றுவதில் முனைந்து நின்றார். தியாகராயர் பிராமணர் அல்லாதார் இயக்கத்தைத் தோற்றுவித்தபொழுது அதிலுள்ள நியாயத்தையும், தியாகராயரின் நேர்மையையும், துணிவையும் இராஜாஜி வியந்து பாராட்டினார். பிராமணர்கள் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையுடன், தமது பழைய உயர்ந்த மனநிலைக்குத் திரும்ப வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.[110]

பின்னாளில் நீதிக்கட்சியின் நிலை மோசமான போதும் "பிராமணரல்லாதார் இயக்கம் நாட்டிற்குப் பெருமளவில் நன்மை செய்து உள்ளது. ஆனால் தற்பொழுது மோசமான நிலையை அடைந்து வருகிறது"[111] என்று கூறி உண்மையான தமது வருத்தத்தைத் தெரிவித்தார். "இராஜாஜியைப் போல் எல்லாப்

பிராமணர்களும் இருந்தால் பிராமணர் அல்லாதார் இயக்கமே தேவையில்லை"[112] என்று நெஞ்சாரப் பாராட்டினார் தியாகராயர்.

### 7.3.5. கொள்கைப் பிடிப்பு

தியாகராயர் கொள்கைப் பிடிப்புள்ளவராக இருந்தார். ஆங்கில இளவரசரின் வருகை, ஆளுநர் மாளிகை விருந்து போன்ற நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளத் தமது தூய வெள்ளை ஆடையிலேயே சென்றார். அவ்வாறு அனுமதிக்காவிடில் அந்நிகழ்ச்சிகளில் தாம் கலந்துகொள்ள இயலாது என்று திட்டவட்டமாக அறிவித்தார். அரசு அவருக்குப் பணிந்தது.[113] இதனால் தியாகராயர் 'வெள்ளுடை வேந்தர்' என்றே அழைக்கப் பெற்றார்.

தியாகராயர் பரந்த நோக்கமும், பகைவரையும் நண்பராக்கிக் கொள்ளும் பண்பும் வாய்ந்தவராக இருப்பினும், கொள்கை என்றும் பிராமணரல்லாதாரின் நலம் என்றும் வரும்பொழுது, சிறிதும் விட்டுக் கொடுப்பவரல்லர். ஒதுக்கப்பட்ட தொகுதிகளைப் பற்றிய கலந்துரையாடல்களை வெளியிடாதிருக்க வேண்டுமென்று சர். சி.பி. இராமசாமி அய்யர் விரும்பியபொழுது, அது முறையன்று என்று கருதிய தியாகராயர், அக்கலந்துரையாடலைத் தமது 'ஜஸ்டிஸ்' இதழிலும், 'இந்து' இதழிலும் வெளியிடச் செய்து அனைவரும் அறியுமாறு செய்தார்.[114] இந்நிகழ்ச்சிகள் தியாகராயரின் கொள்கைப் பிடிப்பிற்குச் சிறந்த சான்றுகளாகின்றன.

### 7.3.6. நேர்மைத் திறனும் பொருளில் பற்றின்மையும்

காந்தியடிகள் கூறிய 'தர்மகர்த்தா' (Trustship) முறையைத் தியாகராயர் தம் வாழ்வில் முதலிலேயே கடைப்பிடித்துக் காந்தியடிகளுக்கும் முன்னோடியாகத் திகழ்ந்தார். தம்மை இறைவனின் தொண்டனாக எண்ணித் தமது செல்வத்தை அவனது செல்வமாகக் கருதிப் பொது நலத்திற்காகச் செலவிடுவதுதான் 'தர்மகர்த்தா' முறை எனப்படும். தியாகராயர் பெருஞ்செல்வராக இருந்தும் தம் செல்வத்தில் பற்றில்லாதவராகப் பொதுநலத்திற்கே அச்செல்வத்தைப் பயன்படுத்தினார். சேலத்தைச் சேர்ந்த சிறுவன் ஒருவன் தாய் தந்தையரை இழந்து விட்டான். தியாகராயர் அவனுடைய செல்வத்தைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். பின்னர் அவன் வளர்ந்து இளைஞனானவுடன் அவனுடைய செல்வத்தைச் சிறிதும் குறைவற்ற நிலையில் அவனிடம் ஒப்படைத்தார்.[115]

### 7.3.7. இனிய நகைச்சுவை மிளிரும் பேச்சாற்றல்

தியாகராயர் சிறந்த சொற்பொழிவாளர் அல்லர். ஆயினும் அவரது பேச்சு அழுத்தமானதாகவும் இனிமையும் நகைச்சுவையும் பொருந்திக் கேட்போரைப் பிணிக்கும் தகையதாகவும் இருக்கும். டி. கன்னையா நாயுடு, தமது

இளமைப்பருவத்தில் தியாகராயரைச் சந்தித்த நிகழ்ச்சி பற்றிக்கூறும் உரை, அவரது உரு, திரு*, நகைச்சுவை மிளிரும் பேச்சுத்திறன் ஆகியவற்றை ஒரு சேர விளக்குகின்றது.[116]

"தியாகராயர் சிங்கம் போல் கர்ஜிக்கும் வீரப் பண்புடையவர். அதே நேரத்தில் அவருடைய பேச்சில் கேலி இருக்கும்; நகைச்சுவை மிளிரும். வேடிக்கையும் விளையாட்டும் பொருந்தியதாக அவர் பேச்சு இருக்கும். அவர் மொழி கேட்க என் செவி விழையும்"[117] என்னும் திரு.வி.க.வின் கூற்று தியாகராயரின் சொல்லாற்றலின் திறத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

### 7.3.8. இளையோரை வழிநடத்தும் இனிய பண்பு

தியாகராயர் தாம் படைத்திருந்த நற்பண்புகளை இளையோருக்கும் ஊட்டி, அவர்களை வழிநடத்தும் இனிய பண்புடையவராக இருந்தார். டி. கன்னையா நாயுடு, தமது இளமைப் பருவத்தில் தியாகராயரைச் சந்தித்த நேரங்களில், அவரிடமிருந்து தாம் பெற்ற அறிவுரைகள் தமக்கு என்றென்றும் வழிகாட்டி களாக அமைந்தன என்று குறிப்பிடுவது[118] நோக்கத்தக்கது. அதேபோன்று பனகல் அரசரும் இளமையில் தமக்குத் தியாகராயருடன் நேர்ந்த அனுபவத் தைக் குறிப்பிட்டுள்ளார்.[119]

ஏ. இராமசாமி முதலியார் இளமையில் மிகுந்த கூச்சவியல்புடையவராக இருந்தார். அதனால் வழக்கறிஞர் தொழிலையும் சரிவர நடத்தவியலாதவராக வும் இருந்தார். ஆனால் தியாகராயருடன் இணைந்து, நீதிக்கட்சிக்காக உழைக் கத் தொடங்கியவுடன் அவருடைய இயல்பில் பெருத்த மாற்றம் உண்டாயிற்று. சிறந்த மேடைப் பேச்சாளராகவும் கட்சியின் மூளையாகவும் விளங்கினார். இவ்வாறு அவரை மாற்றிய பெருமை தியாகராயரையே சாரும்.[120] தம்முடன் இருப்பவர்கள் சிறியவராயினும் எளியவராயினும் அவர்களை மதித்து, அவர் தம் நலனில் கருத்துச் செலுத்தும் தியாகராயரின் பண்பு போற்றத்தக்கது.

மற்றொரு நிகழ்ச்சியில் ஓர் இளைஞர், 'நீங்கள் ஏன் சுயாட்சியை வெறுக் கிறீர்கள்?' என்று தியாகராயரைக் கேட்டார். தியாகராயர் முன்னோக்கி வர, அவ்விளைஞர் பின்னுக்கே சென்றார். "ஏன் பின்னிடுகிறீர்? உம்மைப் பின்னுக் கிழுப்பது ஏன்? அதைக் கவனியும்! ஏன் முன்னுக்கு வரலாகாது? ஏன் என் னைத் தாக்கலாகாது? இரத்தத்திலே அச்சமிருக்கிறது. வாய் மட்டும் சுயாட்சி என்று நடுக்குறுகிறது. அச்சத்தை உதறும். சுயாட்சி தானே வரும்"[121] என்றார். தம்மைப் போன்றே இளைஞர்களும் அச்சமற்றவர்களாகவும், நாட்டுப்பற்று உடையவர்களாகவும் உருவாகவேண்டும் என்னும் அவரது பேரவா இதனால் வெளிப்படுவதை உணரலாம். அவருடைய சான்றாண்மை, மாற்றுக் கொள்கை யினராலும் பாராட்டப்படும் தன்னலமின்மை, பெருந்தகைமை, நட்புடைமை,

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத் தூய்மை, கொள்கைப்பிடிப்பு, நேர்மைத்திறம், பொருளில் பற்றின்மை, இனிய நகைச்சுவை மிளிரும் பேச்சாற்றல், இளையோரை வழிநடத்தும் இனிமை ஆகிய பண்புகள் இளைஞர்களிடையே விழிப்புணர்வூட்டின என்று கூறலாம்.

## 7.3.9. கடவுள் நம்பிக்கை

இன்று நாத்திகர்களும் தியாகராயரைத் தம் முன்னோடி என்று கூறிக்கொண்டாலும் அவர் உண்மையில் கடவுள் நம்பிக்கையுடையவராக இருந்தார். அவரது நெற்றியில் சமயச் சின்னம் என்றும் துலங்கும். இளையோரை வாழ்த்தும் போதும், அறிவுரை பகரும் போதும் அவா கூறும் கூற்றுக்கள் கடவுள் நம்பிக்கையை வெளிப்படுத்தவனவாகவே அமைந்திருப்பதைக் காணலாம். கன்னையா நாயுடு,[122] பனகல் அரசர்[123] ஆகியோருடன் உரையாடும் போது கடவுளை நம்புமாறு வலியுறுத்தினார். திரு.வி.க. ஒரு சிக்கலில் இருக்கும் போது கடவுளின் உதவி அவருக்குண்டு எனத் தியாகராயர் வாழ்த்தினார்.[124]

## 7.3.10. விருந்தோம்பல்

பகுத்துண்டு வாழும் பண்பும், விருந்தோம்பும் இயல்பும் தியாகராயரிடம் குடிகொண்டிருந்தன. அவரது இல்லத்தில் என்றும் விருந்தினர்களின் கூட்டம் இருந்துகொண்டேயிருக்கும். விருந்தினர் ஒருவர் நெய்யைச் சாறு என்று எண்ணி எடுத்துப் பரிமாறிவிடும் அளவுக்குச் செல்வச் செழிப்பும் விருந்தோம்புதலில் தாராள மனமும் படைத்தவராக தியாகராயர் இருந்தார்.[125] தேவாங்க குலகுரு ஸ்ரீ சாம்பலிங்கமூர்த்தி சுவாமிகளும் இதே பான்மையில் தியாகராயரின் விருந்தோம்பற் சிறப்பை எடுத்துக் கூறியுள்ளார்.[126]

ம.பொ.சி.யும், "தியாகராயர் வளமனையின் முற்றத்தில் சிற்றுண்டியும் தேநீரும் வைக்கப்பட்டிருக்கும். வளமனைக்குச் செல்லுவோர் அனைவருக்கும் சாதி, மொழி, இனம், மதம் என்ற எவ்வேறுபாடுமின்றிச் சிற்றுண்டியும் தேநீரும் வழங்கப்படும்"[127] என்று குறிப்பிட்டுள்ளார். தமது இயக்கத்தைச் சார்ந்தவர்கள், ஆளுநர், நகரமன்ற உறுப்பினர்கள் ஆகியோருக்குத் தமது வளமனையில் அடிக்கடி விருந்தளிப்பதும் தியாகராயரின் வழக்கமாக இருந்தது.

## 7.3.11. அஞ்சாநெஞ்சும் நாட்டுப் பற்றும்

தியாகராயர் அஞ்சாநெஞ்சம் படைத்தவர். தாம் சரியென்று கருதும் கருத்துக்களைச் சிறிதும் அஞ்சாது எடுத்துரைப்பார். யாருக்காகவும் எதற்காகவும் அக்கருத்துக்களைத் திரித்தோ, மழுப்பியோ கூறமாட்டார். சட்டமன்றத்திலும், சென்னை மாநகராட்சி மன்றத்திலும் அவர் ஆற்றிய உரைகள் இதற்குத் தக்க

எடுத்துக்காட்டுகளாகும். இளவரசரின் வருகையின்போது ஒத்துழையாமை இயக்கத்தினர் வன்முறைகளில் இறங்கியதைக் கண்டித்துத் தியாகராயர் அவர் களைக் கொள்ளைக்காரர்களைவிடக் கேவலமானவர்கள் என்று கூறினார்.[128] அதைச்சுட்டிக் காட்டி, சத்தியமூர்த்தி தியாகராயரை வன்மையாகத் தாக்கிப் பேசினார்.[129] தியாகராயரோ அவற்றைத் தாம் மறுக்கவில்லை என்றும், இன்றும் அதையேதான் திரும்பக் கூறுவதாகவும் அஞ்சாது எடுத்துரைத்தார்.[130]

மாநகராட்சி மன்றத்தில் பலமுறை ஆங்கில அலுவலர்களின் தவறுகளைத் தியாகராயர் அஞ்சாது சுட்டிக்காட்டியுள்ளார். கீழ்க்காணும் நிகழ்ச்சிகள் அவரது அஞ்சாமைக்குச் சான்று பகருவதுடன், நாட்டுப்பற்றையும் விளக்குவனவாக அமைந்துள்ளன.

கொசப்பேட்டையில் கட்டப்படும் பாலம் பற்றிய உரையாடலில் பொறியியலாளர் ஜோன்ஸ் கூறிய கூற்று, மன்ற உறுப்பினர்களை அவமதிப்பதாக இருந்தால் "பொறியியல் வல்லுநர்களும் கூடச் சில நேரங்களில் கண்மூடிப் பிழை (Blunders) செய்துவிடுவதுண்டு; பொறியியல் அறிவில்லாத சாதாரணப் பொதுமக்கள்கூட அவர்களின் தவறுகள்ளச் சுட்டிக் காட்டுவதும் உண்டு"[131] என்று கூறித் தியாகராயர் ஜோன்சின் சொற்களைத் திரும்பப் பெறுமாறு வற்புறுத்தினார்.

மேய்ச்சல் நில உடன்படிக்கை, குப்பை கூளங்கள் உடன்படிக்கை, இறைச்சிக் கொட்டில் உடன்படிககை போன்றவற்றில் நகராட்சி மன்றத்திற்குப் பொருளிழப்பு ஏற்பட்டபொழுது தியாகராயர் அதை ஆராய ஒருகுழு நியமிக்கப்படவேண்டுமென்று தீர்மானம் கொண்டுவந்தார்.[132] அதன் பயனாக அப்பொருளிழப்புக்குக் காரணமாக இருந்த ஆங்கில அதிகாரிகளை எச்சரித்தது நகராட்சி. தீங்கு தருவனவும், தடுக்கப்பட்டனவுமான பொருட்களை விற்பனை செய்வதற்குரிய அனுமதிச்சீட்டு வழங்குவதில் ஊழல் நடந்திருப்பதைத் தியாகராயர் அறிந்தார். உடனே அவற்றை விசாரிப்பதற்கு மன்ற உறுப்பினர்கள் முழுச் செயலுரிமையும் பெறுமாறு ஒரு தீர்மானம் கொண்டு வந்து செயல்படுத்தினார்.[133]

நகரமன்றத் தலைவர் செய்து கொள்ளும் உடன்படிக்கைளுக்கு அனுமதி மறுப்பதற்கு, நகரமன்ற உறப்பினர்களுக்கு உரிமை கிடையாது என்ற தீர்மானத்தைத் தியாகராயர் எதிர்த்துத் தோற்கடித்தார்.[134] உறுப்பினர்களின் உரிமையைக் குறைக்கும் எந்த நடவடிக்கையையும் எதிர்ப்பதில் அவர் உறுதியாக இருந்து செயல்பட்டார்.

ஜோன்சின் ஊழல் பற்றிய குற்றச்சாட்டில், தியாகராயர், தலைவருக்குப் பலமுறை கடிதங்கள் எழுதி, அவர் மீது நடவடிக்கை எடுக்கச் செய்தார்.[135]

அதே நேரத்தில் தாம் கூறியுள்ள குற்றச்சாட்டுகளில் அவதூறு ஏதுமிருந்தால், ஜோன்சிடம் தாம் மன்னிப்புக் கேட்கவும் ஆயத்தமாக இருப்பதாகவும் அஞ்சாது அறிவித்தார்.[136] இருபத்து நான்கு மணிநேர அறிவிப்பில், உறுப்பினர்கள், ஆங்கிலத் தலைவரை, எந்த வினாவையும் வினவலாம் என்னும் தீர்மானத்தை வழிமொழிந்து செயல்படுத்தச் செய்தார்.

தெருவிளக்குகளைப் பார்வையிடுவதற்குத் தனிப்பட்ட ஒரு செயலாண்மைக் குழு (Agency) அமைப்பதுதான் நல்லது என்று வலியுறுத்தினார்.[137] இது தொடர்பாகச் சுமித் என்ற ஆங்கிலேயரின் போக்கைக் கண்டித்தும், காண்ட் கொண்டு வந்த தீர்மானத்தை ஆதரித்தும் உரையாற்றினார்.[138] தியாகராயரின் அஞ்சாமைக்கு இந்நிகழ்ச்சி சான்றாவதுடன் தியாகராயரின் நடுநிலைத் தன்மைக்கும் எடுத்துக்காட்டாகிறது.

சாக்கடையின் சீர்கேடுற்ற நிலையைச் சுட்டிக்காட்டி, ஆங்கில அலுவலர்களின் பொறுப்பின்மையைக் கண்டித்தார். அவர்கள் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்யாமல், அந்த வீதியில் வசிக்கும் மக்களின்மீது வழக்குத் தொடுக்கின்றனர் என்றும், தமக்கே அத்தகைய அனுபவம் ஏற்பட்டது என்றும் எடுத்துரைத்தார்.[139]

நகரமன்ற அலுவலர்களின் தனிப்பட்ட உதவித்தொகையை (Personal Allowances) அனுமதிப்பது தொடர்பாக ஒரு தீர்மானம் கொண்டுவரப் பெற்றது.[140] அதனை வழிமொழிந்த தியாகராயருக்கும் மன்றத் தலைவருக்கும் இடையே ஏற்பட்ட கருத்து மோதலால் நீண்ட வாக்குவாதம் நடைபெற்றது. தியாகராயர் மன்றத்தில் உரையாற்ற உறுப்பினர்களை அனுமதிப்பதில் தலைவர் ஒரு சார்பாக நடந்து கொள்ளுகிறார் என்று நேரடியாகவே குற்றஞ் சாட்டினார்.

டி. சில்வா என்னும் ஆங்கிலேயர் தம் பணியை விட்டு விலகிச் சென்ற நேரத்தில், அவர் செலுத்தியிருக்க வேண்டிய தொகையைப் பெற்றுக் கொள்ளாமல், அவரைப் பணியிலிருந்து விலக அனுமதித்தது தவறு என்று சுட்டிக்காட்டிய தியாகராயர், இவ்விழப்பு தலைவர் மெக்கன்ஸியினால் நேர்ந்தது; எனவே, அத்தொகையைத் தலைவர் செலுத்தவேண்டும் என்று கூறித் தொகையைக் கட்டுமாறு செய்தார்.[141] பொதுப் பணத்தைக் கையாளுவதில் தாம் கடைப்பிடித்த நேர்மையை ஆங்கிலேயரும் கடைப்பிடித்தேயாக வேண்டும் என்று வற்புறுத்தும் அவரது நேர்மைத் திறமும் அஞ்சாமையும் பின்னோருக்குச் சிறந்த வழிகாட்டிகளாகும்.

சென்னையில் காலரா பரவியிருந்த நேரத்தில் சுகாதார அலுவலர் 'குக்' புனாவுக்குச் சென்று விட்டதற்காகவும் அவரைத் திரும்ப அழைக்காத

தலைவரின் தவற்றுக்காகவும் அவரைத் தியாகராயர் வன்மையாகக் கண்டித் ததோடு, கடமையிலிருந்து தவறிய அக் 'குக்'கின் மேல் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று தீர்மானமும் கொண்டுவந்தார்.[142] அதே சமயத்தில் மணியக் காரர் சத்திரத்தில் காலரா நோயாளிகளைப் பராமரிப்பதில் கவனம் செலுத்திய குக்கின் சிறந்த பணியினைப் பாராட்டவும் செய்தார்.[143] பணி செய்பவர்கள் தவறும்போது இடித்துரைப்பதிலும், அவர்களே சிறப்பாகப் பணியாற்றும் போது அவர்களைப் பாராட்டுவதிலும் தியாகராயர் முன்னின்றார்.

வடசென்னைப் பகுதிச் சுகாதாரத் துறையில் முறைகேடுகள் நடந்திருப் பதையும் ஆங்கில அலுவலர்கள், நகரமன்றச் சுகாதாரப் பணியாளர்களைத் தங்கள் சொந்த அலுவல்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளுவதையும் தக்க சான்றுகளுடன் நிறுவிய தியாகராயர் தாமே அவர்கள் மீது நடவடிக்கையும் எடுத்தார்.[144]

நார்ட்டன் என்னும் ஆங்கிலேய உறுப்பினர் தொடர்ந்து பல கூட்டங் களுக்கு வராதிருந்ததால், அவரை உறுப்பினர் பதவியிலிருந்து நீக்க வேண்டு மென்று தமது கருத்தைத் தியாகராயர் அழுத்தமாக எடுத்துரைத்தார்.[145] இந் நிகழ்ச்சி அவரது துணிவைக் காட்டுவதுடன் ஆளுவோர் என்பதனால் ஆங்கி லேயர் எவ்வாறு வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாம் என்று கருதுவது தவறெனச் சுட்டிக்காட்டும் உள்ளத் திண்மையையும், குடியரசுப் பண்பில் கொண்டிருந்த ஆர்வத்தையும் வெளிப்படுத்துகிறது.

எல்லிஸ் என்னும் ஆங்கிலப் பொறியியலாளர் ஊதிய உயர்வு கோரிய பொழுது, அவர் ஆற்றியுள்ள பணியைப் பற்றியாராய்ந்த தியாகராயர் அதற்கு மறுப்புத் தெரிவித்து அத்தீர்மானத்தைத் தோற்கடித்தார்.[146]

'மக்கள் பூங்கா'வில் அங்காடிகள் கட்டுவதற்கு அனுமதிப்பது பற்றி விவாதம் நடைபெற்றது. அத்தீர்மானத்தை ஆதரித்து ஏழு வாக்குகளும், எதிர்த்து ஏழு வாக்குகளும் கிடைத்தன. தலைவர் தமது வாக்கையளித்து அத் தீர்மானத்தை நிறைவேற்றக் கருதியபொழுது தியாகராயர், 'தலைவர் அவ்வாறு வாக்களிப்பது முறையற்றது' என்று கூறித் தடை செய்தார்.[147]

தியாகராயர் காலரா ஒழிப்பில் சுகாதார அலுவலர்கள் தக்க கவனம் செலுத் தாததைக் கண்டித்தார்.[148] தண்ணீர் வழங்கல், சாக்கடைப் பராமரிப்புப் பற்றிய விவாதம் தொடர்ந்தபோது தலைவராகிய ஆங்கிலேயர் உறுப்பினர்களை அவமதித்தார். உடனே தியாகராயர் வெகுண்டெழுந்து "எங்களைப் பள்ளிப் பிள்ளைகள் போன்று நடத்த வேண்டாம். அரசின் கணிப்புத் தவறு என்று சுட்டிக்காட்ட வேண்டியது உறுப்பினர்களாகிய எங்கள் கடமை"[149] என்று கூறி அரசு ஆணையிலுள்ள குறைபாட்டைத் தெளிவாக விளக்கினார்.

ரிப்பன்பிரபு தம்நாடு திரும்பியபொழுது தியாகராயர் பம்பாய் சென்று, அப்பிரபுவின் வழியனுப்பு விழாவில் கலந்துகொண்டார். மேலும், அவர் ஊராட்சிச் சட்டத்தைக் கொண்டு வந்தவராகையினால் தியாகராயர் ரிப்பன் பிரபுவை மிகவும் பாராட்டினார். பின்னர் ரிப்பன் பிரபுவின் மறைவுக்கான இரங்கல் தீர்மானத்தையும் தியாகராயர் வழிமொழிந்து, சிறந்த உரையாற்றி னார்.[150] நாட்டுக்கு நலம் புரியும் ஆங்கிலேயரிடம் தியாகராயர் கொண்டிருந்த மதிப்பும், அவ்வாறு அவர் கொண்டிருந்த மதிப்பு நாட்டு நலத்தை முன் னிட்டே என்பதையும் இதனால் அறியலாம். 'முர்' என்னும் ஆங்கிலத் தலை வர் அன்புடன் கூடிய கண்டிப்பை மேற்கொண்டவர் என்று கூறி மனமாரப் பாராட்டியமையும் மேற்காட்டிய பண்பிற்குச் சான்றாகிறது.[151]

சாக்கடைப் பணிகளைக் கவனிக்கும் ரிச்சர்ட்ஸ் என்னும் அலுவலரைப் பொறியாளராக மாற்றம் செய்ய அரசு விரும்பியபோது, தியாகராயர், "அவர் மிகச் சிறந்த முறையில் தம் பணிகளைச் செய்து வருவதால் அவரை மாற்று வது மக்கள் நலத்துக்கு மாறானதாகும். எனவே இதனை உறுதியாக எதிர்ப்பது எங்கள் கடமையாகும்"[152] என்று கூறினார்.

ஒருமுறை சுகாதாரத்துறை அலுவலர்கள் சரியாகப் பணியாற்றுவதில்லை; இப்படிப் பணியாற்றுவதாக இருந்தால் இத்துறையையே கலைத்து விடலாம் என்று தியாகராயர் கூறினார். அதனை விரும்பாத ஆங்கிலத் தலைவர், "அப்படியானால் முழுவதுமாகக் கலைத்து, அனைவரையுமே அனுப்பி விட லாம்" என்றார். உடனே தியாகராயர், "நான் இதைத்தான் முடிவில் கூறவிருக் கிறேன்"[153] என்று சொன்னார். தியாகராயர் ஆங்கிலேயரின் சார்பாளர் என்றும், நாட்டின் சுயாட்சிக்குத் தடையாக இருந்தவர் என்றும் கூறுபவர்களுக்கு இந் நிகழ்ச்சி தக்க மறுமொழியாவதுடன், தியாகராயரின் உரிமை வேட்கைக்கும், நாட்டுப் பற்றுக்கும் தக்க சான்றாகும். மேலும் சில நிகழ்ச்சிகள் இதற்குச் சான்று பகருகின்றன.

செல்வம் அய்யர் என்பவர் தொடர்பான முறைகேட்டைப் பற்றித் தியாக ராயர் வினவ, சரியான மறுமொழி கிடைக்காததால் "மக்களின் வரிப்பணத் தைச் சரியான முறையில் செலவிடுங்கள். நீங்கள் விரும்பியவாறு செலவிடு வதற்கோ, வெறுக்கத்தக்க முறையில் பரிசோதனைகள் செய்வதற்கோ நீங்கள் இங்கு இருக்கவில்லை"[154] என்று மிகக் கடுமையாகத் தாக்கினார்.

மற்றொருமுறை "ஆங்கில அலுவலர்கள் மகிழ்வுந்துகளில் (Motor Car) உலா வருகிறார்களே தவிரத் தம் பணிகளைச் சரிவரச் செய்வதில்லை. நாம் அவர்களுக்கு மகிழ்வுந்துகள் கொடுத்ததன் பலன் இதுதான்"[155] என்று தயங் காது எடுத்துரைத்தார்.

குடிநீர் தூய்மையற்றதாக இருந்ததால் அதனைச் சுட்டிக்காட்டி 'மலோனி மிக்சர்' என்று அதனைக் கூறலாம் என்று 'ஜஸ்டிஸ்' இதழில் எழுதினார்.[156]

1921-ஆம் ஆண்டு திரு.வி.க.வை நாடு கடத்துதலினின்றும் தியாகராயர் தடுத்ததைக் குறிப்பிட்ட ஆளுநர் வெல்லிங்கடன் பிரபு, 'அமைச்சரவையும் ஒத்துழைக்கவில்லை' என்று குறை கூறியபோது, தியாகராயர் ஆளுநரையும் எதிர்த்து, "நடுநிலையும் நீதியுங் கையாளப்பட்டால் உதவி தானே வரும்" என்று கூறினார். ஆங்கிலேயர் ஆளுநரேயாயினும் நடுநிலை பிறழ்ந்து நடக்கும் போது துணிவோடு தட்டிக்கேட்கும் உரம் படைத்தவராகத் தியாகராயர் இருந்தமை இதனால் பெறப்படுகின்றது.

இறுதியாகப் பிராமணரல்லாதாருக்கு நீதி கிடைக்காவிட்டால் அன்னி பெசண்ட்டைக் காட்டிலும் தீவிரமாகத் தாங்கள் ஆங்கில அரசை எதிர்க்க நேரும் என்பதைத் தமது 'பிராமணரல்லாதார்' இதழ் மூலம் வெளியிட்டார்.[158]

இங்ஙனம் தியாகராயர் ஆங்கிலேயர்களைக் கண்டிக்க வேண்டியவிடத்துக் கண்டித்தும், எதிர்த்துப் போராட வேண்டியவிடத்துப் போராடியும் இந்திய மக்களின் தன்மானத்தைக் காத்து வந்தார். அதேநேரத்தில் ஆங்கில ஆட்சியால் விளைந்த நன்மைகளையும் மறந்தாரல்லர். பாராட்ட வேண்டியவிடத்து உளமாரப் பாராட்டினார். ஆகவே, இவருடன் மனவேறுபாடு கொண்ட அலுவலர்களும் கூட, இவர்மீது மதிப்புக் கொண்டிருந்தனர். தியாகராயரின் அஞ்சாமையையும், நாட்டுப் பற்றையும், தியாகவுணர்வையும் மலோனி[159] பிரெட்போர்டுலெஸ்லி,[160] கோஷன்பிரபு,[161] நகரமன்ற ஆணையர்,[162] எச். என். பிரவுன்,[163] ஹென்றி டபிள்யூ நெவெய்சன்[164] ஆகிய ஆங்கிலேயர்கள் பெரிதும் பாராட்டியுள்ளனர் என்பது உணரத்தக்கது.

அக்காலத்துத் தியாகராயருடன் உடனுறைந்த பணியாற்றிய டாக்டர். நடேசனார்,[165] பனகல் அரசர்,[166] பி.டி. இராசன்[167] ஆகிய பெரியோர்களின் கூற்றுக்களும் இதனை மெய்ப்பிக்கின்றன. கோவை கிழாரும் தமது நாட்குறிப்பில் இதே கருத்தினைக் குறித்துள்ளார்.[168] எதிரணியான காங்கிரசு உறுப்பினர் செங்கல்வராயனும் தியாகராயரின் அஞ்சாமையையும் நாட்டுப்பற்றையும் வியந்து பாராட்டினார்[169] என்பது கருதத்தக்கது. நகரமன்ற உறுப்பினர்களாக இருந்த ஜி.ஏ. நடேசன்,[170] டி. அருமை நாதபிள்ளை,[171] டி. வரதராசுலுநாயுடு,[172] ஜி. நாராயணசாமி செட்டி[173] ஆகியோரும் 'தியாகராயர் தமது கொள்கைகளுக்குத்தான் நண்பராக இருந்தார். தமது கொள்கையை எதிர்ப்பவர் அரசு அதிகாரியா, ஆங்கிலேயரா என்பதைப் பற்றி அவர் என்றும் கவலைப்பட்டதில்லை; தவறு கண்டவிடத்து அஞ்சாது இடித்துரைக்கத் தவறியதில்லை' என்னும் கருத்தையே வெளியிட்டுள்ளனர் என்பதும் மனத்திற் கொள்ளற்

குரியது. அவரது கடவுள் நம்பிக்கை, விருந்தோம்பல், அஞ்சா நெஞ்சம், நாட்டுப்பற்று ஆகிய பண்புகள் மற்றவர்களையும் விழிப்படையச் செய்து வழி நடத்தினவெனலாம்.

### 7.3.12. முன்னோக்குத் திறம்

சௌரிசௌராவில் ஒத்துழையாமை இயக்கத்தினரின் முறையற்ற செயல்களால் வருந்திய காந்தியடிகள் சென்னை தந்த எச்சரிக்கையைத் தாம் புறக்கணித்தது தவறு[174] என்றும், "இந்த ஆட்சி முடியும் போது போக்கிரிகள் தாம் ஆள்வார்களே தவிர நாம் ஆளமாட்டோம்"[175] என்றும் கூறித் தமது இயக்கத்தை நிறுத்தி வைக்கவும் தீர்மானித்தார். இந்நிகழ்ச்சியை ஆய்ந்து பார்க்குமிடத்துத் தியாகராயரின் முன்னோக்கு எத்துணை உண்மையானது என்பது விளங்குகிறது.

### 7.3.13. சமுதாய நலத் திட்டங்களில் ஈடுபாடு

தியாகராயர் எதைப் பார்த்தாலும், உரைத்தாலும், செய்தாலும் அது சமுதாயத்திற்கு நலம் பயக்கக் கூடியதா என்று ஊன்றிப் பார்த்துச் செயல்படும் இயல்பினர். ஆகவே அத்தகைய திட்டங்களையே வகுத்து, அரசின் ஒத்துழைப்புடன் செயல்படுத்த முயன்றார். தீண்டாமை விலக்கு, கலப்பு மணம், சம பந்தி போசனம், எல்லோருக்கும் படிப்பு ஆகிய கருத்துக்களில் தியாகராயர் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார் என்றும் அவற்றைத் தமது கட்சியின் மூலம் முடிந்தவரை செயல்படுத்தினார் என்றும் பெரியார் ஈ.வே.ரா. கூறியுள்ளார். மேலும் அவர் தியாகராயரின் செயல்களைக் கண்டபின்னரே காந்தியடிகளும் இவற்றையெல்லாம் தமது நிர்மாணத் திட்டத்தில் சேர்த்தார்[176] என்றும் கூறுவது சிந்திக்கத் தக்கது.

### 7.3.14. மக்கள் தலைவன்

முப்பது கோடி மக்களுக்காகவும் மனமிரங்கி உளமுருகிக் கண்ணீர் வடிப்பவனே மக்கள் தலைவன்; தேசாபிமானி என்பார் பாரதியார்.[177] அத்தகைய உண்மையான தேசாபிமானியாகவும்[178] தியாகத்தின் அரசராகவும் திகழ்ந்தார் தியாகராயர்[179] என்று கூறும் உரை நினைக்கத் தக்கது. சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்த ஏ. இலட்சுமணசாமி முதலியார்,[180] நீதிக் கட்சி அமைச்சராக விளங்கிய ஏ. பி. பாத்ரோ,[181] கே.வி. ரெட்டிநாயுடு[182] ஆகியோரும் தியாகராயரின் பண்பு நலன்களை,

> "நேர்மையும் உண்மையும் மிக்கவர்; எதிரிகளும் பாராட்டும் பண்பு மிக்கவர்; அகிம்சையைக் கடைப்பிடித்த மக்கள் தலைவர்"

என்று பாராட்டியுள்ளனர்.

தியாகராயர் வாழ்ந்த காலத்துக் குழந்தைப் பருவத்திலிருந்தோரும் அவருக்குப் பின் தோன்றியோரும் அவரது பண்பு நலன்களைக் கேள்வியுற்று அவர்பால் ஈடுபாடும் பெருமதிப்பும் கொண்டு போற்றினர். அத்தகையவர்களுள் அறிஞர் அண்ணா,[183] கி.ஆ.பெ. விசுவநாதன்,[184] டி. செங்கல்வராயன்[185] ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர். அவர்கள் அனைவரும் தியாகராயர் பிற்பட்ட மக்களுக்கு ஊட்டிய விழிப்புணர்ச்சியையும், அவரது வள்ளன்மையையும், தன்னலமற்ற தியாகத்தையும், பாரதி கண்ட மக்கள் தலைவனாக விளங்கிய தன்மையையும் ஒருசேரப் பாராட்டியுள்ளனர்.

பல பிராமணரல்லாதார் குடும்பங்களும் ஆதி திராவிடக் குடும்பங்களும் 'காணும் பொங்கல்'அன்று தங்கள் நலத்துக்காக உழைத்த தியாகராயரின் உருவப் படத்தை வைத்துப் படையலிட்டு அஞ்சலி செலுத்துகிறார்கள்.[186] அவருடைய முன்னோக்குத் திறமும், சமுதாய நலத்திட்டங்களில் ஈடுபாடும் அவரைச் சிறந்த மக்கள் தலைவனாக்கியதுடன், சமுதாயத்தின் பலதிறப்பட்ட மக்களிடையேயும் விழிப்புணர்வையூட்டி எழுச்சி பெறச் செய்தன என்பது கருதத்தக்கது.

## இயல் சுருக்கம்

உடல், உள்ளப் பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பாக விளங்கும் ஆளுமையின் இலக்கணம் கூறப்படுகிறது. இவ்விலக்கணத்தின் வழி நின்று தியாகராயரின் ஆளுமைப்பண்புகள் ஆராயப் பெற்றுள்ளன.

தியாகராயரின் தோற்றப் பொலிவு, பழக்க வழக்கங்கள், உளப் பாங்கு ஆகியன விளக்கப் பெற்றுள்ளன. தியாகராயரது சான்றாண்மை, மாற்றுக் கொள்கையினராலும் பாராட்டப்படும் தன்னலமின்மை, பெருந்தகைமை, நட்புடைமை, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத் தூயஉள்ளம், கொள்கைப் பிடிப்பு, நேர்மைத் திறம், பொருளில் பற்றின்மை, இனிய நகைச்சுவை மிளிரும் பேச்சாற்றல், இளையோரை வழிநடத்தும் இனிய பண்பு, கடவுள் நம்பிக்கை, விருந்தோம்பல், அஞ்சா நெஞ்சம், நாட்டுப்பற்று, முன்னோக்குத் திறம், சமுதாய நலத்திட்டங்களில் ஈடுபாடு ஆகிய பண்புகள் விளக்கப் பெற்றுள்ளன. தியாகராயருடன் தொடர்பு கொண்ட திரு. வி.க., காந்தியடிகள் உள்ளிட்ட பல பெரியோர்களின் கூற்றுக்களின் வழி நின்று இப்பண்புகள் விளக்கப் பெற்றுள்ளன.

மேற்காட்டிய பண்புகளால் அவர் சிறந்த மக்கள் தலைவனாக விளங்கியமையும், அவற்றால் சமுதாயம் அடைந்த விழிப்புணர்ச்சியும். அத்தன்மையை உணர்ந்து ஆன்றோர் பாராட்டிய பாராட்டுரைகளும், செலுத்திய புகழாரமும் இவ்வியலுள் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

## எண் விளக்கம்

1. கலைக்களஞ்சியம், தொகுதி ஐந்து, ப.460.
2. மேற்கோள், ஆல்போர்ட், எஸ். சந்தானம், கல்வி உளவியலும் கல்விச் சமூகவியலும், ப.262.
3. டாக்டர். சண்முகம், உளவியல், இரண்டாம் பாகம், ப.262.
4. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.18.
5. மேற்படி, ப.19.
6. மேற்படி, ப.18.
7. நவசக்தி, 1.5.1925.
8. பி.எஸ். இளங்கோ, சர். பி. தியாகராயர் முதல் டாக்டர் கலைஞர் வரை, ப.21.
9. J.C. Malony, A Book of South India, p.155.
10. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.47.
11. மேற்படி, ப.38.
12. மேற்படி, ப.39.
13. மாசிலாமணி நாய்க்கரிடம் நேரில் கேட்டறிந்த கோ. குமாரசாமி அவர்களை ஆய்வாளர் 4.2.1986 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
14. M.C.M.P., on 25th April 1892.
15. Indian Review, 1921, p.435.
16. M.C.M.P., on 1st May 1925.
17. The Hindu, 30th April 1925.
18. மேற்கோள், எஸ்.டி. கிருஷ்ணமூர்த்தி அய்யர், 'மாண்டேகுவின் தோல்வி', கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.26.
19. திரு.வி.க., நவசக்தி, 5.5.1925.
20. Justice M.D. Devadas, The Hindu, 29th April 1925.
21. K. Vyasarao, Municipal Council Meeting Proceedings on 1st May 1925.
22. மா. இராசமாணிக்கனார், B.O.L., L.T., M.O.L., 'சர். பிட்டி. தியாகராய செட்டியார்' Golden Jubilee Souvenir, Theagaraya Chetty High School, 1948, p.30.

23. திரு.வி. கல்யாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்.263-266.
24. மேற்படி, ப.259.
25. மேற்படி, ப.214.
26. மேற்படி, ப.363.
27. மேற்படி, ப.314.
28. திரு.வி. கல்யாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.364.
29. மேற்படி, ப.364.
30. மேற்படி, ப.406.
31. மேற்படி, ப.363.
32. Montegu, India Diary, p.127.
33. Advocate of India, 23rd July 1919.
34. "அய்க்னோகிளாஸ்ட்" 'திராவிடர் இயக்க வரலாற்றுக் குறிப்புகள்', பெரியார் பகுத்தறிவாளர் நாட்குறிப்பு - 1985, ப.25.
35. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.304.
36. மேற்படி, ப.304.
37. Eugene F. Irshick, Politics and Social Conflicts in South India, p.47.
38. T. Varadarajulu Naidu, (Comp.), The Justice Movement, 1917, Section II, p.47.
39. திரு.வி. கலியாண சுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.212.
40. A.A. Nair, 'Dr. T.M. Nair, A Liberator of Masses', Justice Party Golden Jubilee Souvenir, 1968, p.40.
41. 'இரங்கற்கூட்டம்', தியாகராயரின் தலைமையுரை, ஜஸ்டிஸ் அலுவலகம் (19.7.1919), கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.295.
42. 'திராவிடர் இயக்க வரலாற்றுக் குறிப்புகள்', பெரியார் பகுத்தறிவாளர் நாட்குறிப்பு - 1985, ப.25.

    இதனை மாசிலாமணி நாய்க்கரின் மகள் பத்மா அவர்களும் உறுதிப் படுத்துகிறார்.
43. M.C.M.P., on 1st May 1925.
44. இவ்வாய்வாளர், பி. கன்னைய்ய நாய்க்கர் (பார்த்தசாரதி நாய்க்கரின் மகன்) அவர்களை 15.9.86 அன்று

சென்னையில் அவரது இல்லத்தில் சந்தித்து பெற்ற கருத்து.

45. திரு.வி. கலியாண சுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.365.

46. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.392.

47. மேற்படி, ப.392.

வாக்குகள் பெற்றநிலை

| | |
|---|---|
| பிட்டி. தியாகராயர் செட்டியார் | 4996 |
| சி.பி. இராமசாமி அய்யர் | 4933 |
| டாக்டர். யூ. இராமராவ் | 4408 |
| ஓ. தணிகாசலம் செட்டியார் | 4127 |
| சி. நடேச முதலியார் | 3311 |
| வி. திருமலைப்பிள்ளை | 3236 |
| சல்லா குருசாமி செட்டியார் | 2982 |
| எம். விஜயராகவலு | 1135 |
| கே. வியாசராவ் | 581 |

48. இவ்வாய்வாளர், திரு. சி.ஆர். பட்டாபிராமன் (சர். சி.பி. இராமசாமி அய்யரின் மகன்) அவர்களை, சென்னையில் அவரது இல்லத்தில் 16.7.85 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து.

49. இவ்வாய்வாளர், திரு. பாலசுப்பிரமணியம் (ஓ. தணிகாசலம் செட்டியாரின் மைத்துனர்) அவர்களை, சென்னையில் அவரது இல்லத்தில் 4.10.86 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து.

50. C.P. Ramaswamy Iyer, M.L.C.P., on 5th May 1925.

51. New India, Jan.22, 1917.

52. Contemperory Openion Justice Dec.19 1922, Dec.21 1922, Jan.8 1923, Jan.10 1923.

53. மேற்படி, Dec.1 1920, Dec.20 1922, Dec.22 1922, Jan.9 1923, Jan.11 1923.

54. Eugene F. Irshick, Politics and Social Conflicts in South India, p.49.

55. இவ்வாய்வாளர், பம்மி தியாகராய செட்டியாரை அவரது இல்லத்தில் 20.7.85 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து.

56. இவ்வாய்வாளர், பாலசுப்பிரமணியம் (ஓ. தணிகாசலம் செட்டியின் மைத்துனர்) அவர்களை அவரது இல்லத்தில் 3.10.86 அன்று சந்தித்துப் பெற்ற கருத்து.

57. Madras Mail, July 30, 1913.

58. ஈ.வெ.ரா. குடியரசு, ஆகஸ்டு 11, 1926.

59. மேற்படி, செப்.12, 1926.

60. ஈ.வெ.ரா. விடுதலை, ஆகஸ்டு 16, 1950.

61. சென்னைத் தியாகராயர் நினைவுக் கூட்டத்தில் பெரியார் ஆற்றிய சொற்பொழிவு, ஆகஸ்டு 11, 1926. இச் சொற்பொழிவு 12.9.1926 அன்று 'குடியரசு' இதழிலும் வெளியீடு பெற்றுள்ளது.

62. குடியரசு, மே 2, 1925; 'தலையங்கம்', விடுதலை, நவம்பர் 15, 1972; The Sunday Observer, Nov.6, 1938

63. Letter from P. Theagaraya Chettiar to Kesavapillai on 1st January 1917.

64. மேற்படி, on 2nd Jan.1917.

65. மேற்படி, on 15th Aug.1908.

66. மேற்படி, on 24th Dec.1909, 2nd Dec. 1912, 2nd Sep.1916, 8th Feb.1918, 10th Dec.1919, 25th Apr. 1920 & 15th Sep.1923.

67. கோ. குமாரசாமி, திராவிடப் பெருந்தகை தியாகராயர், ப.441.

68. M.C.M.P., on 4th Nov.1930.

69. மேற்படி, on 9th Feb.1920.

70. மேற்படி, on 24th Oct.1923.

71. மேற்படி, on 24th Oct.1923.

72. மேற்படி, on 1st May 1925.

73. பி.எஸ். இளங்கோ, சர். பி. தியாகராயர் முதல் டாக்டர் கலைஞர் வரை, ப.37.

74. கோ. குமாரசாமி, திராவிடத்தலைவர் டாக்டர் நடேசனாரின் வாழ்வும் தொண்டும், ப.29.

75. Eugene F. Irshick, Politics and Social Conflicts in South India, p.47.

76. கோ. குமாரசாமி, திராவிடத்தலைவர் டாக்டர் நடேசனாரின் வாழ்வும் தொண்டும், ப.33.

77. மேற்படி, ப.97.

78. M.L.C.P. on 1st May 1925.

79. The Hindu, 29th April 1925.

80. V.M. Ghatshachalam, 'Late Sir. P. Theagaraya Chettiar, The uncrowned King of South India', Souvenir, Sir Theagaraya College School Platinum Jubilee, Sir Theagaraya College Silver Jubilee, 1976, p.34.

81. ஆ.பெ.இ. தேவாங்க குல திலகம், வெள்ளுடை வேந்தர் சர். பிட்டி. தியாகராய செட்டியார், B.A., K.T., 135-வது பிறந்த நாள் விழாமலர், 27.4.1986, கோயமுத்தூர், ப.10.

82. 'Raja of Panagal's Speech on 25.5.1925', quoted by Kalidas K. Kovelekar, The Non-Brahmin Movement in South India, (1873-1949), p.113 and 'The Non-Brahmin Politics, Move for Re-union', quoted by the Hindu, May 26, 1925.

83. A.B. Latthe, Memories of His Highness Shri Shahu Chatrapathi Maharaja of Kolhapur, Vol-I, p.187.

84. மேற்படி, பக்.565-574.

85. மேற்படி, ப.577.

86. Kalidas K. Kovlekar, Non-Brahmin Movement in South India (1873-1949), p.82-83.

87. Preface, Times of India, Vol-I, P.VII.

88. Kalidas Kovelekar, Non-Brahmin Movement in South India (1873-1949), p.79 and 'Maratta Educational Fund Silver Jubilee Celebrations', The Hindu, April 6, 1937.

89. மேற்படி, ப.112.

90. 'Maharaja of Kolhapur', The Madras Mail, May 22, 1922.

91. இவ்வாய்வாளர், பம்மி தியாகராய செட்டியாரை 20.7.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

92. Silver Jubilee Souvenir, Southern India Chamber of Commerce, p.7.

93. இப்படம் அப்பாசாமிப்பிள்ளையின் இல்லத்தில் இன்றும் உள்ளது.

94. The Hindu, April 30, 1925.

95. D.S. Sharma, The Father of the Nation, p.138.

96. M.K. Gandhi, (Mahaveeradesai Translation), An Autobio graphy on the Story of My Experiment with Truth, p.599.

97. 'Letter of Mr. M.K. Gandhi', Collected works of Gandhi, Vol-XIII, p.118.

98. 'ஸ்ரீயுத ஸர். பிட்டி. தியாகராய செட்டிகாரு, B.A., M.L.C., காட்சியைத் திறந்து வைப்பதற்கு ஆற்றிய சொற்பொழிவு', தேவாங்க பத்திரிகா (தெலுங்கு) சென்னைப்பட்டிணம், 1925, ஏப்ரல் 30, வியாழக்கிழமை.

99. இவ்வாய்வாளர், திரு. ந. செங்கல்வராய செட்டியார் அவர்களை 14.7.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து, இதே கருத்தைக் கலாசாகர் ஆண்டு விழாமலர், 1984-இலும் காணலாம்.

100. சுதேசமித்திரன் 13, ஏப்ரல் 1925.
101. M.L.C.P. on 14th Jan. 1922.
102. ப. மகாலிங்கம், திரு.வி.க.வும் காந்தியக் கோட்பாடுகளும், எம்.ஃபில். ஆய்வேடு, பச்சையப்பன் கல்லூரி, சென்னைப் பல்கலைக்கழகம், அக்டோபர் 1980, ப.97.
103. மகாகவி. பண்ட்ல சுப்பிரமணியம், ஆந்திரமகாப்யுதயமு (தெலுங்கு), பக்.659-668.
104. Justice, Feb.13, 1922 (NNR), Feb.18, 1922 (NNR).
105. மேற்படி, March 10, 1922 (NNR).
106. The Hindu, April 9, 1921 (NNR).
107. Justice, April 9, 1921 (NNR).
108. இவ்வாய்வாளர், பம்மி தியாகராய செட்டியாரை 20.7.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.
109. அ. இராமசாமி, தமிழ்நாட்டில் காந்தி, ப.143; ம.பொ.சி., விடுதலைப்போரில் தமிழகம், ப. ; The Hindu, April 13, 1915 (NNR).
110. ம.பொ. சிவஞானம், சென்னை கலைவாணர் அரங்கில் 27.4.1985 அன்று நடைபெற்ற தியாகராயரின் 134-ஆவது பிறந்த நாள் விழாவில் ஆற்றிய சொற்பொழிவு.
111. The Sunday Observer, November 6, 1938.
112. குடியரசு, மே 2, 1925.
113. P. Rajaram, The Justice Party - A Historical Study (1916-1937) Ph.D. Thesis, University of Madras, April 1983, p.229.
114. Eugene F. Irshick, Politics and Social Conflicts in South India, p.162 & The Hindu, Feb.9, 1920 (NNR).
115. அனகாபுத்தூர் சி. இராமலிங்கம், சொற்பொழிவு, சர். பிட்டி. தியாகராயர் 134-வது பிறந்த நாள் விழா, கலைவாணர் அரங்கம், 27.4.1985.

தியாகராயரின் வளமான அவருடைய செல்வச் செழிப்பினை விளக்குவதாக இருந்தது. வளமனையின் முன்புறம் அமைந்துள்ள புகுமுக மண்டபம் (Portico) தெருவின் எதிர்ப் பக்கத்துடன் இணைக்கப்பட்டு, பாலம் போன்று விளங்குகிறது. தியாகராயர் தமக்குச் சொந்தமான அந்நிலப் பகுதியைத் தெரு அமைப்பதற்கு இலவசமாக வழங்கினார். எனவே பாலம் போன்ற அவ்வமைப்புக்கு எவ்வித இடையூறும் நேராதவாறு காப்பதாக நகர மன்றம் வாக்களித்ததால் இன்றும் அந்தப் புகுமுக மண்டபம் இடிக்கப்படாமல் காக்கப்பட்டுள்ளது.

116. D. Kanniah Naidu, 'Vanithas Vanithatum', Golden Jubilee Souvenir, Theagaraya Chetty High School, 1948, pp.39-58.

117. திரு.வி. கல்யாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.363.

118. D. Kanniah Naidu, 'Vanithas Vanithatum', Golden Jubilee Souvenir, Theagaraya Chetty High School, 1948, pp.39-58.

119. The Hindu, April 29, 1925.

120. The Sunday Observer, January 1, 1939.

121. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.363.

122. D. Kanniah Naidu, 'Vanithas Vanithatum', Golden Jubilee Souvenir, Theagaraya Chetty High School, 1948, pp.39-58.

123. The Hindu, April 29, 1925.

124. திரு. வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.363.

125. ஆய்வாளர், ந. செங்கல்வராய செட்டியாரை 14.7.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

126. ஆய்வாளர், ஸ்ரீசாம்பலிங்கமூர்த்தி சுவாமிகளை 29.12.85 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து.

127. ம.பொ.சி. சொற்பொழிவு, சர்.பிட்டி. தியாகராயரின் 134-வது பிறந்தநாள் விழா, கலைவாணர் அரங்கம், 27.4.1985.

128. M.L.C.P., on 13th Dec. 1921.

129. மேற்படி, on 14th Dec.1923.

130. மேற்படி, on 14th Dec.1923.

131. M.C.M.P., on 24th Sep. 1885.

132. மேற்படி, on 24th Sep. 1885.

133. மேற்படி, on 20th July 1886.

134. M.C.M.P. on 17th Jan.1887.

135. மேற்படி, on 11th Sep.1888.

The following Letter Correspondence:

i. Papers in connection with Mr. Jone's leave with remarks of the Commissioners thereon.

ii. President's letter to Mr. P. Theagaraya Chetty, G.No.293 of 27th June 1888.

iii. Mr. P. Theagaraya Chetty's reply to the above dt.28th June 1888.

iv. Two letters of Mr. P. Theagaraya Chetty to the President dt.13th June 1888.

v. Mr. Russell's papers in connection with supply of road metal.

vi. President's letter to Mr. P. Theagaraya Chetty dt. 17th July 1888.

vii. Mr. P. Theagaraya Chetty's reply dt.18th July 1888.

viii. Mr. P. Theagaraya Chetty's letter to the President dt. 18th July 1888.

ix. Papers showing what steps were taken on Mr. P. Theagaraya Chetty's letter on 18th July 1888.

x. Mr. P. Theagaraya Chetty's letter to the President dt.27th July 1888.

xi. Mr. Jone's explanation on Mr. P. Theagaraya Chetty's letter on 27th July 1888.

xii. Mr. P. Theagaraya Chetty's letter to the President dt.6th Aug.1888, to send him a copy of Mr. Jone's reply.

xiii. Mr. P. Theagaraya Chetty's letter to the President, above the outfall channel, dt.8th Aug.1888.

xiv. Mr. P. Theagaraya Chetty's letter to the President, dt.13th Aug. about Mr. Jone's reply.

xv. President's letter to Mr. P. Theagaraya Chetty G. No. 471, dt.17th Aug.1888.

xvi. Mr. P. Theagaraya Chetty's letter to the President dt.20th Aug, in reply to the President's letter of 17th Item.

xvii. President's letter dt.20th August and despatched on 31st Aug.1888, with one elclosure.

xviii. President's official memorandum on his inspection of roads in the 1st Division and the 17th and 22nd August 1888.

xix. Mr. P. Theagaraya Chetty's letter to the President, dt.31st Aug.1888 requesting him to circulate all the papers to the commissioners.

xx. Presidents's reply to Mr. P. Theagaraya Chetty replying to circulate G.No.506, dt.31st Aug.1888.

136. M.C.M.P., on 11th Sep.1888.

137. மேற்படி, on 19th July 1889.

138. மேற்படி, on 19th July 1889.

139. மேற்படி, on 8th August 1889.
140. மேற்படி, on 21st August 1889.
141. மேற்படி, on 19th December 1889.
142. M.C.M.P., on 15th Sep.1889.
143. மேற்படி, 28th Sep.1891.
144. மேற்படி, on 25th April 1892.
145. மேற்படி, on 28th Nov.1892.
146. மேற்படி, on 31st Jan. 1889.
147. மேற்படி, on 26th March 1902.
148. மேற்படி, on 28th Aug. 1906.
149. மேற்படி, on 28th Aug. 1906.
150. மேற்படி, on 27th July 1909.
151. மேற்படி, on 18th April 1911.
152. மேற்படி, on 21st April 1911.
153. மேற்படி, on 11th Oct. 1911.
154. மேற்படி, on 11th Oct. 1911.
155. மேற்படி, on 21st Oct. 1913.
156. Justice, July 12, 1917.
157. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.244.
158. Non-Brahmin 15, April 1917 (NNR).
159. J.C. Malony, A Book of South India, p.156.
160. Col. Bredford Leslie's speech on 24th Oct. 1923 in the M.L.C.P.
161. His Excellency, Lord Gosehen, Governor of Madras, quoted by V.M. Ghatshachalam, 'Late Sir. P. Theagaraya Chettiar, The Uncrowned King of South India', Souvenir, Sir Theagaraya College High School Platinum Jubilee, Sir. Theagaraya College Silver Jubilee, 1976, p.34.
162. Speech given by the Commissioner of the Corporation of Madras, M.C.M.P., on 1st May 1925.
163. மேற்படி, H.N. Brown, M.C.M.P., on 1st May 1925.
164. Henry W. Nevaison, New Spirit in India, p.123.
165. Dr. C. Natesamudaliar's Speech, M.C.M.P., on 1st May 1925.
166. Raja of Panagal's Speech, M.L.C.P., Vol-XXIV, p.5 and law and Legislative Department Ordinary Services G.O.No.395, dt.10.10.1925 (Despatched Abstact), p.67.

167. பி.டி. இராசன், வரவேற்புரை, Justice Party Golden Jubilee Souvenir, 1968, P.L.

168. C.M. Ramachandran Chettiar, My Daily Notes, Book Vol-VI (From 1925 to Aug.1927) on 29.4.1925.

169. திரு. டி. செங்கல்வராயன், தேவாங்ககுல திலகம் வெள்ளுடை வேந்தர் சர். பிட்டி. தியாகராய செட்டியார் B.A., K.T., 135-வது பிறந்தநாள் விழாமலர், 27.4.1986, கோயமுத்தூர், ப.19.

170. G.A. Natesan (ed.), Indian Review (Monthly Journal), Vol-XXVI, Year 1922, p.129.

171. T. Arumainathapillai's Speech, M.C.M.P, on 1st May 1925.

172. T. Varadarajulu Naidu's Speech, M.C.M.P., on 1st May 1925.

173. G. Narayanaswamy's speech, M.C.M.P., on 1st May 1925.

174. The Collected Works of Mahatma Gandhi, Vol-II (1896-1897), p.387.

175. அ. இராமசாமி, தமிழ்நாட்டில் காந்தி, ப.382.

176. விடுதலை, செப்டம்பர் 8, 1959.

177. பாரதியார், இந்தியா, சனவரி 12, 1907.

178. ம.பொ. சிவஞானம், விடுதலைப்போரில் தமிழகம், முதல் தொகுதி, ப.320.

179. மேற்படி, ப.597.

180. V.M. Ghatshachalam, 'Late Sir. P. Theagaraya Chettiar, The uncrowned King of South India', Souvenir, Sir. Theagaraya College High School Platinum Jubilee, Sir. Theagaraya College Silver Jubilee, 1976, p.34.

181. மேற்படி, ப.9.

182. K.V. Reddy Naidu, president's Speech, 'Sir. Theagaraya's Fourteenth Anniversary Celebration, The Sunday Observer, May 7, 1939.

183. அறிஞர் அண்ணா, அண்ணா கண்ட தியாகராயர், பக்.3-17.

184. கி.ஆ.பெ. விசுவநாதம், சொற்பொழிவு, சர். பிட்டி. தியாக ராயரின் 134-ஆவது பிறந்தநாள் விழா, கலைவாணர் அரங்கம், 27.4.1985

185. ஆய்வாளர் திரு. டி. செங்கல்வராயனை 3.10.1986 அன்று அவரது இல்லத்தில் சந்தித்து பெற்ற கருத்து.

186. ஆய்வாளர், திருமதி. ஜோதி வெங்கடாசலம் அவர்களை 15.5.86 அன்று அவரது இல்லத்தில் சந்தித்துப் பெற்ற கருத்து. இவ்வழக்கத்தை தங்கள் குடும்பத்தார் இன்றும் பின்பற்றி வருவதாகக் கூறினார்.

# முடிவுரை

இந்தியநாடு ஆங்கில ஆட்சிக்குட்பட்டிருந்ததால் அரசியல், சமுதாயம், பொருளாதாரம், வாணிகம், தொழில் வளர்ச்சி என்னும் பலதுறைகளிலும் பின் தங்கியிருந்தது. இத்தகைய சூழலில் தியாகராயர் பிறந்தார். தியாகராயர் தோன்றிய குடும்பம் நாட்டுநலனைக் கருதி அறஞ் செயும் குடும்பம். ஆகவே, இயற்கையிலேயே அறவுணர்வு படைத்தவராகவும் நாட்டுநலனிற் கருத்து உடையவராகவும் தியாகராயர் இருந்தார் என்பது விளக்கப் பெற்றுள்ளது. நாட்டுச் சூழலே அவரது உள்ளத்தில் உரிமை வேட்கையையும் நாட்டுப் பற்றையும் தொழில் வளர்ச்சியில் ஊக்கத்தையும் தோற்றுவிக்கக் காரணமாக அமைந்தது என்பது முதல் இயலில் காணப்பெற்ற உண்மையாகும்.

அரசியல் தொடர்புடைய சென்னை மகாசனசபை, அனைத்திந்தியக் காங் கிரசுப் பேரவை ஆகியவற்றில் பல்லாண்டுகள் பணியாற்றினார் என்பதும் அவ்வியக்கங்கள் சிறுபான்மையினரான ஓரினத்தாருக்கே நன்மை பயப்பதாக இருந்ததால் அவற்றினின்றும் விலகிய தியாகராயர், நாட்டின் பெரும்பான்மை யினரான பிராமணரல்லாதாரின் நலங்காக்கத் தனி இயக்கம் ஒன்றைத் தொடங் கினார் என்பதும் விளக்கப்பெற்றன. தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் என்ற பெயரில் தொடங்கப் பெற்ற இவ்வியக்கமே பின்னர் நீதிக்கட்சி என்ற பெயரில் வழங்கப்படலாயிற்று என்பதும் தியாகராயர் அதன்வழித் தமிழ்ச் சமுதாயத்தில் அரசியல் விழிப்புணர்ச்சியை ஊட்டினார் என்பதும் ஆராயப் பெற்றன. மாநாடுகள் கூட்டியும் நாளிதழ்கள் வெளியிட்டும் மக்களிடையே அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தினார் என்பது கூறப்பெற்றது.

மாண்டேகு - செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் விளைவாகத் தோன்றிய இரட்டை ஆட்சியில், தியாகராயர் சென்னை மாநிலத்தின் ஆளுங் கட்சித் தலைவ,ராக இருந்து பல்வேறு சீர்திருத்தங்களுக்கு வழி வகுத்தார் என்பதும் உணர்த்தப்பெற்றது. இவற்றின் வழியாக, இன்று தமிழ்ச் சமுதாயம் அரசியலில் பெற்றுள்ள இடத்திற்கும் பட்டறிவிற்கும் வித்திட்டவர் தியாகராயர் என்னும் உண்மையை இவ்வியல் எடுத்துக் காட்டுகின்றது.

தியாகராயர் சென்னை மாநகராட்சி மன்றம், சென்னை ஆந்திர மகாசபை, உலகப்பொதுப் பற்றாளர் கழகம், மணியக்காரர் சத்திரம், சென்னை நிலக்

கிழார்கள் கழகம், சென்னபுரி ஆயுர்வேத பிரசாரணி சபை, சென்னை ஆரியன கிளப் ஆகிய பொது நிறுவனங்களில் பங்குகொண்டு மக்கள் நலத்திற்காக அருந்தொண்டாற்றினார். அவற்றில் அவர் கையாண்ட நேர்மை வருங்காலச் சமுதாயத்திற்கு வழிகாட்டியாகும் என்பது மூன்றாம் இயல் காட்டும் உண்மையாகும். மதுவிலக்கு, மக்கள் நலம், தாழ்த்தப்பட்டோர் நலம், சமுதாயச் சமநிலை ஆகியவற்றிற்காக அருந்தொண்டாற்றினார் என்பது இவ்வியல் காட்டும் முடிவாகும்.

தியாகராயர் பிராமணரல்லாதாரும் கல்வி கற்றுப் பிராமணர்களுக்குச் சமமாக உயரவேண்டும் என்பதற்காகப் பாடுபட்டார். அதற்காக, மாநகராட்சிப் பள்ளிகள் பலவற்றைத் தோற்றுவித்ததுடன் தமது சொந்தச் சொத்தின் ஒரு பகுதியைக் கொண்டு கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தினார். சட்டமன்ற உறுப்பினர், பச்சையப்பன் அறக்கட்டளை உறுப்பினர், பச்சையப்பன் கல்லூரி முன்னாள் மாணவர் சங்கத் தலைவர் என்ற நிலைகளில் பிராமணரல்லாதாரின் கல்வி வாய்ப்பைப் பெருக்கத் துணைபுரிந்தார். பல்கலைக் கழகங்கள் தோன்றுவதற்கு வழிவகுத்தார். தொழிற்கல்வியின் இன்றியமையாமையை எடுத்துக் கூறி, செங்கல்வராயன் தொழிற்பள்ளி, விக்டோரியா தொழிற்பயிற்சிக் கூடம் ஆகியவை தோன்றுவதற்கு வித்திட்டதும், கல்வி தடைப்படுவதற்குக் காரணம் வறுமை என்பதையுணர்ந்து ஏழைக் குழந்தைகளுக்கு உணவளிக்கும் மதிய உணவுத் திட்டத்தைச் செயல்படுத்தியதும், முஸ்லீம்களும், தாழ்த்தப் பட்டோரும், தொழிலாளர்களும், பெண்களும் கல்வி பெறத் திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தியதும் இவற்றின் வாயிலாகக் கல்வித்துறையில் ஒரு விழிப் புணர்ச்சியையூட்டிய பெருமையும் தியாகராயரையே சாரும் என்பதும் இவ்வியல் அளிக்கும் முடிவாகும். விழிப்புணர்வு பெற்ற மக்களுக்கு ஏற்ற சிறந்த கல்விக் கொள்கையைத் தியாகராயர் வகுத்தார். ஆயினும், அக்கொள்கையைப் பிற்காலச் சமுதாயம் முழு அளவில் பின்பற்றவில்லை என்பதையும் இவ்வியல் உணர்த்துகிறது.

தியாகராயர் வேளாண்மைத் தொழிலின் முன்னேற்றத்திற்குத் திட்டம் வகுத்துக் கொடுத்ததுடன், நாட்டுத்தொழில் வளர்ச்சிக்காக நெசவு, சாயத் தொழில், தோல் பதனிடுதல் ஆகியவற்றைத் தாமே மேற்கொண்டு நடத்திப் புதுமுறைகளையும் புகுத்தினார் என்பது இவ்வைந்தாம் இயலுள் விளக்கப் படுகிறது. கைத்தறிச் சங்கம், தென்னிந்திய வர்த்தக சங்கம் ஆகியவற்றைத் தோற்றுவித்தும் துறைமுகப் பொறுப்புக் கழக உறுப்பினராக இருந்தும் வாணிகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஆவன செய்தார் என்பது பெறப்பட்டது. பொருளாதார வளர்ச்சிக்கான கருத்துக்களைத் தாம் கலந்துகொண்ட மாநாடுகளில் வலியுறுத்தினார் என்பதும் தொழில்துறை இயக்குநரகம், விக்டோரியா தொழில்நுட்பக் கூடம், கூட்டுறவு வங்கி ஆகியன அமைவதற்கு அடிகோலி

ளார் என்பதும் தொழிலாளர் நலத்திட்டங்களை வகுத்துக் கொடுத்தார் என்ப தும் இவ்வியல் காட்டும் உண்மைகளாம். இம்முயற்சிக்கு இடையூறு செய்யும் ஆங்கிலேயர்களை அஞ்சாது எதிர்த்து வாதாடி வெற்றி கண்டார் என்பது இவ் வியல் காட்டும் உண்மைகளாகும். சுதேசியவாதியாக, அதே நேரத்தில் வறட் டுக் கொள்கைக்காரராக இராமல் சிறந்த சிந்தனையாளராகவும், கொள்கைப் பிடிப்பாளராகவும் இருந்தார் என்பது இவ்வியலால் அறியப் பெறும் முடிவாகும்.

தியாகராயர் தம் முன்னோர் செய்த அறங்களைத் தொடர்ந்து செய்ததுடன் ஏழைப் பிராமணர், ஏழை மாணவர்க்கு உதவி செய்தார் என்பதும், பல கோயில்களுக்கு நன்கொடை வழங்கியுள்ளார் என்பதும், நலிவுற்ற உறவினர் பலருக்குத் திருமணவுதவி செய்துவந்தார் என்பதும் இவ்வாறாம் இயலில் விளக்கப் பெற்றுள்ளன. இவற்றின் வழிநின்று நோக்கின், தியாகராயர் இன்னார் இனியர் என்ற எந்தப் பாகுபாடுமின்றி அறஞ்செய்த பெருந்தகை என்பது தெளிவாகிறது.

திரு. வி.க, காந்தியடிகள் உள்ளிட்ட பல பெருந்தலைவர்களுடனும் ஆங் கில ஆளுநர், அலுவலர்களுடனும் தியாகராயர் கொண்டிருந்த தொடர்பும் அத் தொடர்பின்வழி வெளிப்பட்ட அவருடைய ஆளுமைப் பண்புகளும் இவ் வேழாம் இயலில் ஆயப்பெற்றன. தியாகராயர் சான்றாண்மை, தன்னலம் இன்மை, பகைவரும் பாராட்டும் பெருந்தகைமை, உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசாத தூய உள்ளம், நட்புடைமை, கொள்கைப்பிடிப்பு, நேர்மைத் திறம், பொருளில் பற்றின்மை, இனிய நகைச்சுவை பொருந்திய பேச்சாற்றல், இளையோரை வழிநடத்தும் இனியபண்பு, கடவுள் நம்பிக்கை, விருந்தோம் பல், அஞ்சாநெஞ்சம், நாட்டுப்பற்று, முன்னோக்குத்திறம், சமுதாய நலத் திட்டங்களில் ஈடுபாடு ஆகிய பண்புகளுக்கு நிலைக்களனாக இருந்தார் என் பது இவ்வேழாம் இயல் காட்டும் உண்மையாகும்.

அவர் ஆங்கிலேயருக்கு அடிபணிபவர் அல்லர் என்பதும், சுயாட்சியை வெறுத்து எந்நாளும் ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டுக் கிடக்க நினைத்தவர் என்று கூறப்படும் கூற்றுக்கள் உண்மைக்குப் புறம்பானவை என்பதும், நாட்டுரிமை வேட்கையிலும் இந்தியரின் தன்மானத்தைக் காப்பதிலும் அவர் வேறு எந்தப் புரட்சியாளருக்கும் தாழ்ந்தவரல்லர் என்பதும் இவ்வியல் காட் டும் உண்மைகளாகும்.

இதுகாறும் தொகுத்துச் சுட்டப்பெற்ற கருத்துக்களால் தியாகராயரின் வாழ்வு தமிழ்ச் சமுதாயத்தின் விழிப்புணர்வுக்கென்றே தம்மை ஒப்படைத்துக் கொண்ட பெருவாழ்வு என்பது தெளிவாகிறது. இதுவே இவ்வாய்வின் முடி வாகும்.

# துணை நின்ற நூல்கள்

**முதன்மைச் சான்றுகள்**

1. Administrative Reports of the Madras Corporation, Years 1882 to 1925.

2. Aslum Press Almanack and Directory, Volumes 1887 to 1925.

2.A. Cencus of India, 1911, Vol-III, Government Press, Madras, 1912, Vol-XIII, Government Press, Madras, 1921.

3. Chronological List of Events during His Excellency Hon'ble Sir Arthur Langbay's tennure of office as Governor of Madras. Printed by the Superintendent, Government Press, Madras - 1912.

4. C.I.D. - Reports, 1907 to 1919.

5. Communal Disorders in Madras Presidency, Printed by the Superintendent, Government Press, Madras - 1928.

6. Fort St.George Gezette - June 15, 1920.

7. Fortnightly Reports - 1914 to 1919 and Public Department Strictly Confidential - 1920 to 1925.

8. **Governement Orders:-**

G.O. 4th Feb. 1887, No.276, W, Public Works, Government of Madras.

G.O. 2nd May 1887, No.232, R, Public Works, Government of Madras.

G.O. 4th June 1887, No.1307, W, Public Works, Government of Madras.

G.O. 11th August 1887, No.765, M, Municipal Local, Government of Madras.

G.O. 9th Feb. 1888, No.131, Financial, Government of Madras.

G.O. 11th June 1888, No.1730, W, Public Works, Government of Madras.

G.O. 3rd Sep. 1888, No.621, Revenue, Government of Madras.

G.O. 22nd Sep. 1890, No.758, Revenue, Government of Madras.

G.O. 18th Dec. 1903, No.1949-M, Government of Madras.

G.O. 10th May 1919, No.744-M, (Mis), Government of Madras.

G.O. 18th Sep. 1919, No.1387, Government of Madras.

G.O. 21st Feb. 1920, No.271-M, (Mis) Government of Madras.

G.O. 22nd June 1920, No.833, Local & Municipal, Government of Madras.

G.O. 8th July 1920, No.921, Municipal & Local, Government of Madras.

G.O. 4th August 1920, No.1043, Government of Madras.

G.O. 17th Sep. 1920, No.1301, Municipal & Local, Government of Madras.

G.O. 23rd Oct. 1920, No.329, Municipal & Local, Government of Madras.

G.O. 1st Dec. 1920, No.1814, M (Mis), Government of Madras.

G.O. 22nd Dec. 1920, No.1917, (Mis) Local & Municipal, Government of Madras.

G.O. 6th June 1921, No.1035, (Mis) Local & Municipal, Government of Madras.

G.O. 5th Dec 1921, No.2374, (Mis) Local & Municipal, Government of Madras.

G.O. 6th Jan 1922, No.28, Law (Education), Government of Madras.

G.O. 10th April 1922, No.694, Local & Municipal, Government of Madras.

G.O. 3rd May 1922, No.781, Local & Municipal, Government of Madras.

G.O. 28th Nov. 1922, No.2336, (Mis) Local & Municipal, Government of Madras.

G.O. 9th July 1923, No.1551, (Mis) Local & Municipal, Government of Madras.

G.O. 3rd Nov. 1923, No.855, Public Department, Government of Madras.

G.O. 4934. M. from Government of India No.102, Municipal, dated 10th July 1920.

G.O. 17th April 1918, No.[illegible] T.N.A.

G.O. 16th Sep. 1921, No.613, T.N.A.

G.O. 30th June 1920, No.1130 (Home Department).

G.O. 19th Feb. 1907, No.152 (Public Department).

G.O. 8th July 1907, No.539 (Public Department).

G.O. 15th June 1919, No.1010 (Public Department).

9. i. Government of India, Home Department - Political - A - Proceedings of Oct.1918 - Nos-227-432, Jan.1922, No. 18.

ii. Government of India, File No.212, July 1920.

iii. Government of India, File 8 A-4. Progs.B.509-10, Sep.1919.
File 4 N 36, Progs 13-17, Oct.1920.

iv. Government of India, File 4 & K.W. 1921.

v. Government of India, File 4N-11, Progs.B.113-16, Feb. 1922.

vi. Government of India, File 4N-11, Progs.B.410-13, Jan. 1923 & B.115, April 1923.

vii. Government of India, File-II-2, Progs.B.312-15, Jan. 1924.

viii. Government of India, File 4 H-2, Progs.B.219, June 1922.

ix. Government of India, File p-3, Progs.B.46-47, Nov. 1922.

x. Government of India, File No.112 (Secret), April 1925.

xi. Government of India, File No.112 (Secret), May 1925.

10. Government of Maharashtra:-

i. File NO.544, 1921.

ii. File No.117-A, 1923.

iii. File No.143-E-1 (H.D. Special), 1925.

iv. File No.363(3), 1925.

v. File No.363(4), 1925.

vi. File No.363(5), 1925.

vii. File No.143-K(C) (H.D. Special), 1928.

viii. File No.K(d) (H.D. Special), 1928.

ix. File No.E-II-1930.

11. Great Britain Parliamentary Debates (5th Series)

12. Indian cencus Commission, Madras, Years 1897, 1893, 1901, 1902, 1911, 1912, 1921, 1922.

13. Indian Legislative Assembly Debates:
Vol-XLVI - 1907-1908.
Vol-XLVIII - 1909-1910.
Vol-LVI - 1917-1918.
Vol-LVII - 1918-1919.
Vol-LVIII - 1919-1920.
Vol-I-Part-II, 1921.
Vol-II, Part-I, 1921.
Vol.II, part II & III, 1921.
Vol-II, No.13-1922.
Vol-II, Part-II, No.37, 1922.
Vol-III, Part-I, 1922.

14. Minutes Book for the year 1876 to 1912 of the Monegar Choultry & Raja Venkatagiri Choultry.

15. Minutes Books for the years 1912 to 1918 of the Madras Port Trust Office.

16. Native Newspaper Reports:
Year 1884 to Year 1925.

17. Papers relating to Industrial Conference held at Ootacamund in September 1908, Government Press, 1908.

18. Proceedings of the council of the Governor of Fort St.George (Madras Legeslative Council Proceedings). Vol-XXXVIII - 1910, 1911 & 1912. Volumes I to XXVI (Year 1919 to Dec.1925).

19. Proceedings of the Municipal Council Meetings, year 1882 to 1925 and 1931.

20. Report of the Proceedings of the Third Indian National Congress held at Madras on the 27th, 28th, 29th & 30th of December 1887.

21. Report on the Administration of the Madras Presidency, 1880-81 and 1917 to 1923.

22. Report of the Central Agricultural Committee, April 1905.

23. Report of the Fact Finding Committee (Handloom and Mills), Government of India, Delhi, 1942.

24. Report of the First Coimbatore District Conference, Held on the 20th & 21st June 1914 at Coimbatore.

25. Report of the Salem Weaving Factory, Government Press, Madras, 1946.

26. Select Documents Series 1900-1947, Tamil Nadu Archieves, Madras.

27. Southern India Chamber of Commerce - Administrative Reports - 1910 to 1921.

28. Statement of large Industries in the Madras Presidency, Government Press, Madras, 1898.

29. Statement of Sundry Industries for 1907, Government Press, Madras, 1907.

30. The Madras Year Book - 1923, Victoria Building, Egmore, 7th June 1923.

31. The Madras Year Book - 1924, Government Press, Madras, 1924.

32. Tour of H.E.Lord Cannemero - Year 1887, 1888 & 1890.

33. Tour of H.E. The Right Hon.Lord Willingdon, Governor of Madras, Vol-I-1921, Vol-II-1922, Vol-III & IV-1924, Vol-V & VI - 1925.

34. Visit of His Royal Highness, The Duke of Connaught of Madras, Jan.1921, Government Press, Madras, 1921.

35. Visit of His Royal Highness, The Prince of Wales to Madras, Jan 1922, Government Press, Madras, 1922.

## துணைச் சான்றுகள்

### 1. ஆங்கில நூல்கள்


1. Ada Hart Arbitt : Adolescent Psychology. George Allen & Unwin Ltd., Museum Street, London, 1937.

2. Balasubramanian. K.M. : South Indian Celebrities. Vol-I. Printed at Solden & Co., Madras S.E., 1934.

3. Baliga.B.S. : Studies in Madras Administration Vol-I. Government of Madras, 1960.

4. Baliga.B.S. : Compendium on History of Handloom Industry in Madras. Government Press, Madras, 1960.

5. Baker.C.J. & Washbrook.D.A. : South India: Political Institutions and political change. 1880-1940. The Macmillan Company of India Ltd., Meerut. First Edition, 1975.

6. Banerjee.K. : Regional Political Parties in India B.R. Publishing Corporation, Delhi - 110 052, F.Ed., 1984.

7. Chartres Molony.J. : A Book of South India, Methuen & Co Ltd, 36, Essex Street, W.C. London, First Edition, 1926.

8. Christopher John Baker : The Politics of South India, 1920-37 Vikas Publishing House Pvt.Ltd., 5, Ansari Road, New Delhi - 110 002. First Edition, 1976.

9. Copley.A.R.H. : The Political Career of C. Rajagopalachari 1937-1954, The Macmillan Company of India Ltd., First Edition, 1978.

10. Dalal.C.B. : Gandhi, A Detailed Chronology, Gandhi Peace Foundation, New Delhi. First Edition, 1971.

11. David Arnold : Police Power and Colonial Rule, Madras, 1889 to 1947, Oxford University Press, Bombay, Calcutta, Madras, 1986.

12. David Arnold : The Congress in Tamil Nad: Nationalist Politics in South India, 1919-1937. Delhi, 1977.

13. David Arnold : The Congress in Tamil Nadu. South Asia Book. Columbia, 1977.

14. Edwin. Montegu.S. : An Indian Diary (Writer during his visit to India in 1917-18) William Heinemann Ltd., London. First Edition, 1930.

15. Eugene F.Irshick : Politics and Social Conflict in South India. (The Non-Brahmin Movement and Tamil Separation) University of California Press Berkley and Los Angeles, 1969

16. Gail Omvelt : Cultural Revolt in Colonial Society (The Non-Brahmin Movement in Western India 1873 to 1930), Scientific Socialist Education Trust; Bombay. First Edition, Jan 1976.

17. Gandhi. M.K., (Translator) : An Autobiography or the study of Mahadevi Desai My Experi ments of Truth, Navajivan Publishing House, Ahamadabad, Second Edition August 1948.

18. Gilbert Slater : Southern India; Its Political and Economic Problems, George Allen & Unwin Ltd., Museum Street, London, First Edition, 1936.

19. Gopalakrishnan. S. : Political Movements in South India, New Era Publications, Madras. First Edition, 1981.

20. Govindaraja Mudaliar. A. (Ed.) : The Weaving Competion and Conference, Srinivasaragavachari & Co., 4, Mount Road, 1908.

21. Henry Nevaison. W. : The New Spirit in India, Metropolitan Book Co., Pvt Ltd., Delhi - 110 006, 1, Nethaji Subbash Marg, Delhi - 110 006, Indian Print, 1975.

22. Indu Rajagopal : The Tyranny of Castes - The Non-Brahmin Movement and Political Development in South India, Vikas Publishing House Pvt Ltd., First Edition, 1985.

23. Innaiah. N. Dr. : The Birth and Death of the Political Parties, Published by the Author in Vijayawada. First Edition. 1982.

24. John Machane. R. : The Political Awakening in India, Prentice Hall, Engle Wood Cliffs, 1970.

25. Kamalanathan.T.P. : The Historical Facts about the Scheduled Caste's struggle for Emancipation in South India, Ambedkar's Self Respect Movement, Tiruppathur, N.A.Dt., 1985.

26. Kasimath Kavlekar.K. : Non-Brahmin Movement in South India (1873-1949), Shivaji University Publications, Shivaji University Press, 1979. First Edition, 1979.

27. Krishnaswami Naidu.W.V.S. : My Memories, Venkata Baugh, 30, Longs Garden Road, Madras - 600 002, 1977.

28. Latthe. A.B. : Memories of His Highness Shri. Shahu Chatrapati Maharaja of Kolhapur, Vol-I. Times Press, Bombay, 1924.

கொண்டவர். நல்லவர்களுக்கு நன்மை விரும்புபவர். நண்பர்களுக்கு முன்னேற்றத்தையே விரும்பியவர். எதிலும் வெற்றிகண்ட வீரர். சமரஸக் கொள்கையுள்ளவர். இத்தகையவர் நாட்டின் விடுதலைக் கொள்கையில் காந்தியடிகளுடன் ஏன் ஒன்றுபடவில்லை என்பதுதானே உன் கேள்வி. முழு சுதந்திரம் விரும்ப வெகுகால அவகாசம் விரும்பி, வெள்ளையரின் நட்புடன் எல்லா வகைகளிலும் நாட்டை முன்னேறச் செய்து பின்பு நம் நாட்டைச் சரிவர பாலித்துக் கொள்ள முடியும். அதற்குத் தகுந்த பக்குவமான நிலை நாட்டிற்கு இன்னும் வரவில்லை. கல்வியறிவின்மையில் தேர்தலின் முழுவலிவு எத்தகையதென்பது எளியமக்களுக்குப் புரியவில்லை. கிராம ஆட்சியில் சாமர்த்தியம் நம் கிராமங்களிலுள்ளவர்களுக்கு இன்னும் ஏற்படவில்லை. ஆகையால் காலத்தை எதிர் நோக்கிப் பொறுமையுடன் தகுந்த நிலை வரும் வரை பொறுத்திருப்பது நல்லது என்பது செட்டியாரின் கருத்து. இத்தகைய கருத்து வேற்றுமை காங்கிரஸ் மகாசபைத் தலைவர்களிடையேயும் தோன்றியதால் மிதவாத - அதிவாத பட்சங்கள் என்று இரண்டு வர்க்கங்கள் தோன்றியது யாவருமறிந்ததே. மிதவாதிகள் தியாகராய செட்டியாரின் கருத்துகளுடன் ஒத்த கருத்துடையவர்கள். எவ்வாறாயினும் உடனே முழு சுயராஜ்யம் அடைய வேண்டுமென்பது அதிவாதபட்சத் தலைவர்களின் கொள்கை. பந்தயக் குதிரயின் ஓட்டத்துடன் முயலின் ஓட்டம் சமமாகுமா என்பது வாதம். காந்தியடிகளுக்கும் தியாகராய செட்டியாருக்கும் ஒருவர் கருத்தை மற்றவர் அறிந்து சமரசமாகக் கருத்து கொள்ள அவகாசமிருந்தாலும் சுயராஜ்யம் பெறும் காலத்தைப் பற்றி வேறுபாடு இருந்ததால் இருவரும் ஒன்றாக லட்சியப் பாதையில் செல்ல இயலவில்லை. அதைத் தவிர - இரு தலைவர்களிடையேயும் தனிப்பட்ட முறையில் எத்தகைய பகைமையுமில்லை. எனவே தான் கண்ணன் விதுரனில்லத்தில் விருந்து உண்டது போல் காந்தியடிகள் தியாகராய செட்டியாரின் இல்லத்தில் விருந்தினராக இருந்து கை நெசவுத் தொழில் கற்றார். சூரிய சந்திரர்களைப் போல் இருவரும் நாட்டிற்கு ஒளியைத் தந்தவர்களேயன்றி இருளடையச் செய்தவர்களல்லர். ஜஸ்டிஸ் பார்ட்டித் தலைவரின் வாழ்க்கையை நானறிந்த அளவில் விளக்கினேன் என்று கூறக் கேட்டு ஸ்ரீராமுலு மகிழ்ச்சி கொண்டு நன்றியுரையை நவின்றார். அதைக் கேட்ட புலவர் இவ்வாறு உரைத்தார் .279

வேண்டுமென்று இத்தகைய அரும்பணியை மேற்கொள்ளும் தியாகப் பண்புள்ளவர் உன்னைப் போன்றவர் எவர் உளர் ? வெண்ணெய் போன்றதும், புனிதமானதுமான உன் உள்ளம் என்னும் தாமரையில் வெற்றிச் செல்வி நின்றாள். நல்ல கருத்தே உனக்கு சக்தி. இது என்றும் விடாத புகழுக்குக் காரணமாகும். 280

தேவலோகத்தில் வெள்ளை யானையின் மேல் சசிதேவியையும், அவள் கணவனையும் சேர்த்து, ஆயுதமும் தந்து அமிர்தமும் தந்தார். ஆனால் இத்தனையும் விட உனது புகழே கனமானது. 281

மேருமலை ஏறி நக்ஷத்திர லோகம் மிதித்து சுவர்க்கம் அடைந்து சந்திரனை வலம் வந்து சத்யலோகம் சென்று உன் புகழ் எங்கும் பரவியுள்ளது. 282.

என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

(தெலுங்கு நாடு ஏற்படுவதற்காக, பொட்டி ஸ்ரீராமுலு சாகும் வரை உண்ணாவிரதம் இருந்த நாட்களில் உபவாசம் துடங்கிய ஒன்பதாவது நாளில் தெலுங்கு மொழியில் வல்லமை கொண்டவரும், காந்தியடிகளின் வழியில் செல்பவருமான தேசபக்தர் சென்னை வாசியான தெலுங்கர் தான் மேற் கொண்ட தீக்ஷையையறிந்து பாராட்டும் நோக்கத்துடன் வந்தார். அப்பொழுது பொட்டி ஸ்ரீராமுலு கேட்க திரு. பிட்டி தியாகராயசெட்டியாரின் பெருமைகளை அன்னாருக்கு நண்பர் எடுத்துக் கூறிய முறையில் இப்பகுதி விளக்கப்பட்டுள் ளது. அந்த நண்பரின் பெயர் இன்னதென்று புத்தகத்தில் எங்கும் குறிப்பிடப் படவில்லை).



"Andhra Mahabhyudayamu" 1980.
Mahakavi Bandla Subrahmanyam
Weldun press, 68, Mannappa Mudali Street,
MADRAS - 600 021.

## 11. ஹம்பி ஹேமகூடம் மடத்தில் ஸ்ரீகண்ட சுவாமி குரு பட்டமளிப்பு விழாவில் சர். தியாகராய செட்டியாரின் தலைமை உரை

(செயலாளர் அவர்கள் சபையோருக்குத் தலைவரை அறிமுகப் படுத்திக் கல்வி, அனுபவம், இவற்றால் அன்னார் தலைமை தாங்குவதற்கு பொருத்த மானவர் என்பதால் தலைமையை ஏற்க வேண்டுமென்று சூசனை செய்தார். அந்த சூசனையை ம.ரா.எம். ஹம்பய்யா அவர்கள் உறுதிப்படுத்தினார். ராவ் பகதூர் சித்தஸிடிகி ஹநுமந்தகௌடு அவர்கள் அனுமதி அளித்தார். சூசனை எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டு தி ஆனரபில் ராவ்பகதூர் பி. தியாக ராய செட்டியார் அவர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் கைதட்டி ஆரவாரம் செய்ய, தலைமை தாங்கினார். அன்னார் சந்தர்ப்பத்திற்கேற்ப ஆற்றிய உரை யின் சாரம் இது)

மிஸ்டர் ஸிமித் துரையவர்களே! சபையோர்களே! இந்த சபையின் தலைமை ஸ்தானத்தை எனக்களித்தது மிகவும் வெகுமானமானதென்று நினைக்கிறேன்.

இந்த தேவாங்க சமூகத்தினர் ஆறு ஆண்டுகள் குழப்பமில்லாமல் சென்னை, பம்பாய், நாக்பூர் முதலிய இடங்களிலுள்ள தேவாங்கர்கள் அனை வரும் ஒன்றே என்னும் ஊக்கத்தால் தூண்டப்பட்டு இன்று இந்தப் புனித ஸ்தலத்தில் ஒருங்கே கூடும் அபூர்வமான சமயத்தை ஏற்பாடு செய்ததற்கு எவ்வளவு புகழ்ந்தாலும் குறைவாகவே இருக்கும். இந்த பிரசங்கம் தேவாங் கர்களின் சரித்திரத்தில் என்றும் நினைவிற்கொள்ளத்தக்கது.

நல்ல இல்லறம் பூண்டுள்ளவர்களே! தேவாங்கர்கள் முன் காலத்தில் இந்த இந்தியாவில் வசிப்பவர்களுக்குத் தேவையான சுகமும் அலங்காரமும் அமைத் துக் கொடுத்ததோடு ஆரிய வர்த்தகர்களின் மூலம் வெளிநாடுகளுக்கும் அனுப்பி வைத்து மிகவும் பெருமை கொண்டிருந்தனர். தேவாங்கர்களின் திறமையால் தான் இங்கு ஈஸ்ட் இண்டியா கம்பெனி என்னும் சங்கம் ஏற்படுத்தி இங்கிலாந்து வியாபாரிகள் இந்த நாட்டிற்கு வந்து ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்கு பொறாமை உண்டாகும் அளவிற்குச் செல்வம் ஈட்டினர். அத்தகைய தேவாங் கர்கள் இன்று மிகவும் நலிந்து போயுள்ளனர்.

நம் குலத்திற்கு அரம்பையின்சாபம் இருப்பதாகப் புராணக்கதையுண்டு. நம் குலத்திற்கு மூலபுருடனான தேவலன் கலியுகம் 5000 ஆண்டுவரை இந்த குலத்தார் நலிவுற்று போவரென்று ரம்பை சாபம் கொடுத்ததாகத் தேவாங்க புராணம் கூறுகிறது. ஆனால் தேவ யோகத்தினால் அந்த 5000 ஆண்டுகள் கடந்துபோய் புத்துணர்ச்சியுடன் முன்னேறும்காலம் ஆரம்பமாகிவிட்டது. இப்

பொழுது நாம் உள்ளழுக்குகளை நீக்கிக்கொண்டு தூய்மை பெற்று பரமனை வேண்டிக்கொண்டு பிறர்மேல் சுமை ஏற்றாமல் நம் முயற்சியாலும் திறமையாலும் மேன்மையடைந்து ஆரிய மாகாணங்களுக்குப் பயன்படும் அங்கமாக முயல்வோம்.

பெருமை கொண்டவர்களே! இனி இந்த சபையின் விசாரணைக்கு வரத் தகுந்த விஷயங்களை விளக்குகிறேன். முதலில் சொல்லத் தகுந்தது என்னவெனில் நம்நாட்டுச் சக்கரவர்த்தி ஏழாம் எட்வர்ட்மன்னர் காலமான செய்தி இந்த நாட்டிற்கு மிகவும் வருத்தத்தைத் தருகிறது. அவர் தம் தாய் ஸ்ரீ விக்டோரியா மகாராணியாருக்குப் பிறகு ஒம்பது ஆண்டுகளே அரசாட்சி புரிந்தாலும், அதற்குள் மக்களுக்கு உதவிபுரிந்து மக்களை நன்கு ஆட்சி புரியும் வழியே அதிகாரிகளுக்குக் காட்டினார். அன்னாருடைய அகால மரணத்தினால் தோன்றிய வருத்தத்தை அறிவித்துக் கொள்வது இந்த சபையின் முதல் கடமையாகும். சர்க்கார் விஷயத்தில் விரோத மனப்பான்மை நமக்குச் சிறிதளவுமில்லை என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இனி மேலும் நாம் மிகவும் விழிப்புடன் இருக்கவேண்டும்.

இனி நம் முந்தைய இதிஹாஸத்தை (புராண கால வரலாற்றினை) யோசிப்போம். பிரும்மா உலகத்தைத் தோற்றுவித்ததும் சிலகாலம் வரை மக்கள் ஆடையின்றித் திரிந்து கொண்டிருந்தனர். ஒருசமயம் பிரும்மாவின் மனத்தில் அவர்களுக்கு ஆடை இருப்பது தகும் என்ற எண்ணம் தோன்றி தேவலனைப் (தேவாங்கனை) பிறப்பித்து அவனுக்குத் தாமரை நூலைக் கொடுத்து ஆடை நெய்யச் சொன்னான். ஆனால் அதற்கு ஏற்ற கருவிகள் இல்லையே என்று தேவலன் சிந்திக்கும்போது விச்வகர்மா அவனுக்குக் கருவிகளைப் படைத்துத் தந்தான். பிறகு தேவலன் ஆடை நெய்யத் தொடங்கினான். எப்பொழுதும் கிடைக்கக் கூடிய நூல் வகையை அருள வேண்டுமென்று பரமனை வேண்டினான். ஈசுவரன் கூறியதாவது: "பிரும்மாவின் நாபிக்கமலத்தில் இருநங்கைகள் இருக்கின்றனர். அவர்கள் பருத்திச்செடிகளாகத் தோன்றுவர்" என்பது. அவ்வாறே புனிதமான ஹம்பீ க்ஷேத்திரத்தில் ஆமோதம் என்னுமிடத்தில் இரண்டு பருத்திச் செடிகள் தோன்றின. அந்த பருத்தியைக் கொண்டு தேவலன் ஆடை நெய்து உலக மக்களுக்கு வழிகாட்டினான். ஆனால் முதலில் நெசவுத் தொழில் தேவர்களிடையே மட்டும் பரவியிருந்தது. அவர்களின் அழகான ஆடைகளைக் கண்டு அரக்கர்கள் கோபங்கொண்டு தேவர்களுடன் சண்டையிட்டு தேவலனைச் சிறைபிடித்தனர். பிறகு இரண்டு கட்சியினருக்கும் சந்தி உடன்படிக்கை ஏற்பட்டது. அரக்கர் தலைவன் தன்மகளைத் தேவலனுக்குக் கொடுத்துத் திருமணம் செய்வித்தான். அவளுக்கு மூன்று மகன்கள் தோன்றினர். அவர்களால் அரக்கர்களிடையே நெசவுத்தொழில் வளர்ந்தது. மற்றும்

தேவாங்கன் ராமலிங்கஸ்வாமி, வரருசி என்றும் பெயர்களைக் கொண்டு புலவர்களான அந்தணர்களுடன் வாதம் புரிந்து தம் பெருமையை நிலை நாட்டியதாகவும், வீரனாகி ஜைனர்களைப் போரிலும், சாஸ்திரத்திலும் வென்றா னென்றும் புராணம் கூறுகிறது. இதன் கருத்தென்னவெனில் நம் தேவாங்கர்கள் முன்பு கைத்தொழிலில் மட்டும் அல்லாது ஆயுதங்களிலும், சாஸ்திரங்களிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதே. இப்போது நம்மவர்கள் மிகவும் பின்தங்கியுள்ளனர். தற்சமயம் நமக்குக் கெடுதலான காலம் நீங்கி விட்டது. இனிநாம் உயர்நிலையடைய முயலவேண்டும். எந்தத் தொழிலுக்கும் கல்வி முதன்மையான கருவியாகும். நம்மவர்களின் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் கணக்கற்றிருக்கின்றனர். முன்பு நம் தேவாங்ககுலத்தில் குடும்பத்திற்கு ஒருவ னாவது விவகாரங்கள் அனைத்திலும் வல்லவனாக விளங்கி வந்தான். மற்றும் ஒவ்வொரு ஊரிலும் திறமைசாலி ஒருவன் தலைவனாக இருந்து நாள்தோறும் வேலை முடிந்தபிறகு ஓரிடத்தில் சிறிதுநேரம் கூடிஇருந்து ஆடவர், நங்கையர் அனைவருடைய யோசனைகளையும் கேட்டு நன்மை செய்து வந்தான். இந்த வழக்கம் தற்போது காணப்படவில்லை. நம்மவர்களில் தற்காலத்தில் கல்வி கற்றவர்கள் மிகவும் குறைந்த எண்ணிக்கையில் உள்ளனர். தற்காலத்திற்கு ஏற்றவாறு சரியான ஏற்பாடுகளைச் செய்து நம்மிடையே கல்வியைப் பரப்ப வேண்டும். ஒவ்வொருவரும் சிறிது பணம் கொடுத்தாலும் தேவையான அளவு பணம் சேரும். நம்மவர்களில் செல்வர்கள் மிகச்சிலரே இருக்கின்றனர். அவர் களின் குடும்பத்திற்கு ஒருவனாவது ஆங்கிலம் கற்று நாடு முழுவதும் சுற்றி அனைவருக்கும் நலமான வேலைகளைச் செய்ய வேண்டும். அரசாங்க உத்யோகம் அல்லது வக்கீல் தொழில் இவற்றைவிட நம்தொழில் வளர்ச்சி நமக்கு அவசியம். நம் நாட்டில் கல்வி வளர்ச்சி அதிகமாக இருந்தாலும் ஏழ்மை குறையவில்லை. இதற்குக் காரணமென்னவெனில் தற்காலக்கல்வி அரசாங்க உத்யோகம் அல்லது வக்கீல் தொழில் செய்வதற்குத் தகுதி உண் டாக்குகிறது. ஆனால் நாட்டின் செல்வம் வளர இந்த கல்வி பயன்படுவது இல்லை. ஆகவே நாம் நம் தொழில்வளர்ச்சிக்குப் பாடுபட வேண்டும். இப் பொழுது நாம் வெளிநாட்டு ஆடைகள் அதிகமாக இறக்கு மதியானாலும் நாட்டிற்குத் தேவையானவற்றில் பாதி அளவு உற்பத்தி செய்து வருகிறோம். இந்தப் பகுதியில் வாழும் மக்கள் நம்நாட்டு ஆடைகளை அதிகமாக அணி வது கண்டபோது எனக்கு மிகவும் சமாதானமாகியது. நம் பெண்களைப் பாருங்கள். நம் நாட்டில் தொழில் நசிக்காமலிருப்பதற்கு அவர்களே காரணம். மற்றும் கற்றவனென்று சொல்லப்படும் நம்மவர்களிடையே தவறு இருக்கிறது. அவர்களே (வெளிநாட்டு ஆடைகளில் மோகம் கொண்டு) நம்நாட்டுத் தொழில் வலுவிழந்து போகச் செய்து நமக்கு ஏழ்மையை உண்டாக்கினர். இந்த நிலையை மாற்றவேண்டும். நம்தொழிலில் பல முன்னேற்றங்களைச் செய்ய வேண்டும். இதற்கு நான் ஓரளவு பாடுபட்டுள்ளேன். நம் நாட்டு ஆடைகள்

மக்களுக்கு அபிமானம் அங்கங்கு அதிகமாகியுள்ளதனால் எம். ஏ. சாட்டர்டன் அவர்கள் அரசாங்கத்தில் ஆலோசனைக் கேற்றவாறு நம்நாட்டு நெசவுத் தொழிலில் சீர்திருத்தங்கள் கொண்டுவர முயற்சித்தார். நானும் என்னால் முடிந்தவரை பாடுபட்டேன். கூர்ந்த அறிவுள்ள சில நெசவாளர்களைக் கொண்டு விரைவுள்ள சீமை நாடாத்தறிகளை செய்து வேறு வேறு மாதிரி களில் ஆடைகளை நெய்வதற்கு முயற்சித்தேன். இதைப்போல் தறிகளை டச்சு நாட்டவர்கள் இந்நாட்டுக்கு கொண்டு வந்தனர். ஆனால் அவை அப்பொழுது அதிகமாகப் பழக்கத்திற்குக் கொண்டு வரப்படவில்லை. சென்னையில் 1908ம் ஆண்டில் நெசவுக் கண்காட்சி நடந்தது. அதில் பலவகைத் தறிகள் வந்திருந் தன. சில மேல்பகுதியில் இயங்குபவை. சில நிலத்துடன் ஒட்டி இயங்குபவை. சிலவற்றிற்கு நான் சீமை நாடாவைச் சேர்த்தேன். இத்தகைய நாடாவுக்கு 2½ ரூபாய் பிடித்தது. இந்த நாடாக்கள் நம் பழைய தறிகளில் பயன்படுத்தினால் அதனால் 70, 80 ரூபாய்கள் விலை கொண்ட தறிகளில் நடக்கும் வேலை செய்ய முடிவுமென்று சாட்டர்டன் துரையவர்களுக்கு காண்பித்தேன். இப் பொழுது சென்னையில் வரைவுள்ள இத்தகைய சீமை நாடாவைப் பயன்படுத் தும் நிலத்தறிகள் பத்தாயிரம் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். முதலில் ஒரு நாளில் நான்கு முழம் ஆடை நெய்ய இயலாதவன் தற்சமயம் அதற்கு மூன்று மடங்கு அதிகமாக நெசவு செய்கிறான். குண்டூர் ஜில்லா பாபட்ல தாலூகா வேடபாளெம் கிராமத்தில் சில நாட்களுக்கு முன் தேவாங்கர்கள் அங்குள்ள பணக்கார வியாபாரிகளின் கைகளில் சிக்கி அடிமைப்பட்டிருந்தனர். இப் பொழுது அவர்களுக்கு இரண்டு மடங்கு மூன்று மடங்கு வருவாய் வருவதால் சுதந்திரர்களாக இருக்கின்றனர். இவ்வாறே தொடர்ந்து நடத்தி வந்தால் நம் தாழ்மை நிலை நீங்கும். எனக்குத் தோன்றியதை நீங்களும் நன்கு யோசிக்க வேண்டுமென்று இவற்றைக் கூறினேன். இப்பொழுது வெய்யில் கொடுமை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. மிஸ்டர் ஸ்மித் தொரையவர்கள் வேறு இடம் போக வேண்டியிருப்பதால் இன்றைய அலுவல் விரைவில் முடிக்க வேண்டி யுள்ளது - என்று கூறினார்.

OOO

## 12. ஆந்திரபத்திரிகா - 15 மார்ச் 1926

## புகழுடல் பெற்ற ஸர். பிட்டி. தியாகராயசெட்டியார்காரு

ஸர். பிட்டி. தியாகராயசெட்டிகாரு 1852-ம் ஆண்டு ஏப்ரல் 27ந் தேதியன்று தோன்றினார். பிட்டி வம்சம் தான தருமங்களுக்கு மிகவும் பெயர் பெற்றது. இவர் மூவர் சகோதரர்கள். அண்ணா பிட்டி முனுசுவாமி செட்டியார் மிகவும் பெயர் பெற்ற கொடை வள்ளல். தாது ஆண்டில் கொடிய பஞ்சம் தோன்றிய போது 64 கிராமங்களில் வசித்த ஏழைகளுக்கு அன்னமிட்டுக் காத்தவர். அன்னாரின் பெயரைத் தம்பிகளாகிய பெத்த தியாகராயசெட்டி - சின்ன தியாக ராய செட்டியும் மேலும் விளங்கச் செய்தனர். பெத்த தியாகராய செட்டியார் மறைந்தார். பிறகு ஏறக்குறைய ஒரு வருஷத்திற்குள் இந்த தியாகராய செட்டி யாரும் இயற்கை எய்தினார்.

இவர் 1876 ஆண்டு பி.ஏ. பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றார். அண்ணா அவர் கள் வியாபாரத் தொழிலைக் கவனித்து வந்தார். அந்தக் காலத்தில் பட்டம் பெற்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. அரசாங்க உத்யோகத்தில் புகுந் தால் வெகு விரைவிலேயே உயர்ந்த பதவியை அடையும் வாய்ப்பு இருந்தது. ஆயினும் முதலிலிருந்து சுதந்திரத்தில் ஆர்வமும் ஏதோ ஒரு வகையில் மக்கள் சமுதாயத்திற்குத் தொண்டு செய்ய வேண்டுமென்ற விருப்பமும் உடையவர் ஆகையினால் உத்யோகத்தை நாடாமல் சுயேச்சையாக இருக்க வேண்டு மென்று முடிவு செய்தார். அந்நாள் முதல் இறுதிவரை சென்னையில் நடக்கும் எல்லா இயக்கங்களிலும் ஏதோ ஒரு வகையில் இவருக்குத் தொடர்பு இருந்து வந்தது.

### கார்பொரேஷன் அங்கத்தினராகுதல்

சென்னை கார்ப்பபொரேஷனில் தண்டையார்பேட்டைக்குச் சார்ந்த அங்கத்தினராக ஏறக்குறைய நாற்பது ஆண்டுகள் பணியாற்றினார். தம் தலை வரைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரம் சென்னை கார்ப்பொரேஷனுக்குக் கொடுக் கப்பட்ட பின் முதன்முதலில் இவரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு நான் காண்டுகள் வரிசையாகத் தலைவராக விளங்கினார். மிண்டோமார்லே சீர் திருத்தங்களையொட்டி ஏற்படுத்தப்பட்ட சாஸனசபை (சட்டசபை)யில் 1910

முதல் 1912 வரை அங்கத்தினராக இருந்தார். மான்டேகு - ஷெம்ஸ்பர்டு திருத்தங்களையொட்டி ஏற்பட்ட சட்டசபையில் சென்னை அங்கத்தினராக 1920 ஆண்டிலும் மறுமுறை 1923 ஆண்டிலும் தேர்ந்தெடுக்கப்பட்டார். தென்னிந்திய வர்த்தக சங்கத்தை நிறுவி வளர்ச்சி பெறச் செய்தவர்களில் இவர் ஒருவர். கல்வி விஷயத்தில் இவருக்குள்ள ஊக்கம் மிகச் சிறந்தது. பச்சையப்பர் அறக்காவலராக (தர்மகர்த்தா)வும், செங்கல்வராயர் டெக்னிகல் இன்ஸ்டியூட் செயற்குழுவில் முக்கிய அங்கத் தினராகவும், நிலச்சுவான்தார்களின் சங்கத்தில் முக்கிய அங்கத்தினராகவும் பல ஆண்டுகள் பணியாற்றினார். இவர் காஸ்மா பாலிடன் கிளப், சென்னபுரி ஆந்திர சபை இவற்றிற்குத் தலைவர்.

## பிராமணரல்லாதார் இயக்கம்

1916ல் டாக்டர் நாயர் அவர்களுடன் கலந்து பிராமணரல்லாதார் இயக்கத்தை நிறுவினார். பிராமணரல்லாதார் கல்வியில் பின்தங்கியிருந்தனர். அரசாங்க உத்யோகங்களிலும் பிராமணரல்லாதார் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே இருந்தது. எனவே பிராமணரல்லாதார் வளர்ச்சிக்கும், அவர்களுடைய உரிமைகளைக் காப்பதற்கும் இந்த இயக்கம் தோன்றியது. டாக்டர் நாயர் அவர்களும், அவருக்குப்பின் தியாகராயசெட்டியார் அவர்களும் இந்த இயக்கத்திற்கு முக்கிய தலைவர்களாக இருந்தனர். இந்த இயக்கம் நன்கு வளர்ந்து 1920ல் நடந்த தேர்தலில் மிக அதிக எண்ணிக்கையில் பிராமணரல்லாதார் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிராமணர் அல்லாதவர்களின் தலைவரான தியாகராயசெட்டியாரை வெல்லிங்கடன் பிரபு வரவழைத்து மந்திரியாக இருக்கவேண்டுமென்று கேட்டார். அதற்கு இவர் ஒப்புக்கொள்ளாமல் தன் கட்சியைச் சேர்ந்தவர்களின் பெயர்களைக் குறிப்பிட் டார் என்பன போன்ற செய்திகள் அனைவருக்கும் தெரிந்தவையே. 1923 தேர்தலில் அந்தணரல்லாதார் சமூகத்தில் பல கருத்து வேற்றுமைகள் தோன்றி னாலும் தியாகராயசெட்டியாரின் செல்வாக்கோ, தலைமையோ சிறிதும் குறைபட வில்லை. தம் குலத்தைப் பற்றிய அபிமானம் இவருக்கு அதிகமாக இருந்தது. குலத்தொழிலாகிய நெசவுத் தொழிலை வளர்ச்சி பெறச்செய்ய இவர் மிகவும் பாடுபட்டார். 1903ஆம் ஆண்டு நேஷனல் பண்ட் இண்டஸ்டிரியல் அசோசி யேஷன் தலைமையில் இவர் நெசவுப் போட்டியில் பங்கு பெற்றார். நம் நாட்டில் எல்லா பகுதிகளிலிருந்தும் நெசவாளர்கள் பங்கு கொண்டனர். தண்டையார்பேட்டையில் தம் மாளிகைக்கு அருகில் ஒரு நெசவுத் தொழிற் சாலையை நிறுவினார். இந்த சாலையில் தயாரான ஆடைகள் சில போட்டிக் கண்காட்சிகளில் வெகுமானம் பெற்றன.

வயது முதிர்ந்தவரானாலும் இவருடைய ஊக்கம், பிடிவாதம் இணையற் றவை. பிராமணரல்லாதார் இயக்கத்திற்குத் தலைவரானலும் அந்தணர்களிடம்

இவருக்கு வெறுப்பு இருந்ததில்லை. தன் வாழ்நாளில் ஒருவருக்கு அபகாரம் செய்து அறியாதவர். அரசியல் விஷயங்களிலும், உத்யோக விஷயங்களிலும், நியாய ஸ்தானங்களிலும் சிக்கலிலகப்பட்டுக் கொண்டவர்கள் பலர், இவரை யண்டி சகாயம் வேண்டுவார்கள். அந்த சமயங்களில் எந்தப் பாகுபாட்டையும் பாராமல் தம் செல்வாக்கைப் பயன் படுத்தி சிக்கல் நீங்கசெய்வதில் பாடுபட்டு வந்தார். வண்ணாரப்பேட்டையில் ஒரு உயர்நிலைப் பள்ளியை இவர் நடத்தி வருகிறார். தம் இல்லத்தில் திருமணம் நடைபெறுமாயின் அந்த முகூர்த்தத்தில் இருநூறு. முன்னூறு ஏழைக்குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்குத் திருமணம் நடத்தி வைத்து முழுச் செலவையுமே தாமே ஏற்று வருவது வழக்கம். இந்தக் குடும்பத்தின் உதாரத்தன்மைக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இவர் 1925-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இயற்கை எய்தினார். சென்னை நகருக்கே அல்லாது நம் பாரத நாட்டிற்கே இவருடைய மறைவு பெரு நஷ்டமென்றே கருத வேண்டும்.

## 13. பாரதி - மே - 1925 சம்புடம் 2 இதழ் 2

## சிறப்புக் கருத்துகள்

## புகழுடலெய்திய ஸர். பிட்டி. தியாகராய செட்டியார்

புகழுடம்பெய்திய விலியம்ஸ்டெட் என்னும் பெரியர் ஒரு சிறிய நூல் எழுதினார். அதன் பெயர் "நீ அவனுடைய நிலையிலிருப்பதாக எண்ணிக் கொள்" (Put yourself in his place). பிறருடைய நடத்தை, குணங்களைக் கண்டனம் செய்பவர்களுக்கு இந்த நூல் நல்லறிவு புகட்டக்கூடியது. பிறரின் தன்மைகளை நன்றாக அறிந்து கொள்வது மிகவும் கடினம். தன் இயற்கையான நல்லவையும், தீமையுமான குணங்களுக்கு ஏற்றவாறு பிறரிடம் குணநலன், குற்றங்களைக் காண்பது உலகத்தினருக்கு வழக்கமாகிவிட்டது. பிறருடைய நிலையில் தான் இருந்தபோதுதான் அவர்களுக்கு உள்ள சாதக - பாதகமான விஷயங்களை உணர்வது சுலபமாகும். புகழுடம்பெய்திய ஸர். பிட்டி. தியாகராய செட்டியாரின் வாழ்க்கை இந்த நெறியை விளக்குகிறது. தன் நலம் மற்றும் ஆடம்பரம் என்பன இல்லாமல் 73 ஆண்டுகள் வாழ்க்கையை நடத்தி மக்களின் கௌரவத்திற்குப் பாத்திரமான தியாகராய செட்டியார் பிறவிப் பயனைப் பெற்றவர். தியாகராய செட்டியாரின் சுதந்திர உணர்வு, தொண்டில் ஈடுபட்டிருக்கும் தன்மை, தன் சமுகத்தினிடைக் கொண்டிருந்த அபிமானம், செயலாற்றும் திறமை மிகவும் புகழத்தக்கன. ஆயினும் பிராமணரல்லாதார் இயக்கத்திற்குத் தலைமை தாங்கியது அவர்பால் தவறான கருத்துக்கள் கொள்ள இடம் வகுத்தது வருந்தத்தக்கது. தியாகராயசெட்டியாரின் சுதந்திர விருப்பத்திலும் தம் குலத்திடை கொண்ட அபிமானத்திலும், குலத் தொழிலில் அபிமானத்திலும் அவர் பெருமைக்கு ஆணிவேர் போன்ற பிராமணர் அல்லாதார் இயக்கத் தலைமை தாங்குவதற்கான விதைகள் உள்ளன.

தியாகராய செட்டியார் பட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றவராயினும் அரசாங்க வேலையை விரும்பவில்லை. ஆங்கிலத்தில் புலமை கொண்டு இருந்தும் குலத்தொழில், தம் வேஷம், பாஷை, ஆசாரம் முதலியவற்றை எள்ளித் தூற்றாமல் கௌரவித்துத் தலைவருக்குரிய தகுதியைப் பெற்றார். அரசாங்கத் தொழிலே பிறவிப்பேறாக நம்பிய நாட்டில் ஐம்பதாண்டுகளுக்கு முன் பட்டப் படிப்பில் வெற்றியடைந்த தியாகராய செட்டியார் அரசாங்க உத்யோகம்

என்னும் பொன்விலங்கால் கட்டுப்படாதவராக இருந்தது; அன்னாரின் பரந்த மனப்பான்மைக்கு எடுத்துக்காட்டு. அரசாங்க வேலைகளில் சமீபகாலத்தில் தேசபக்தர்களுக்கு உண்டான வெறுப்பு செட்டியார் அவர்களுக்கு ஐம்பதாண்டு களுக்கு முன்பே தோன்றியது. அன்னாரின் உதார குணத்தை விளக்குகிறது. அரசாங்கத் தொழிலை வெறுத்தும். இடைவிடாது உழைத்து வாழ்க்கை முடிவு வரை தொண்டாற்றக் கங்கணம் கட்டிக்கொண்டு கல்வியிற் சிறந்தவர்களுக்குத் தொண்டின் பெருமையை விளக்கிய தியாகராயசெட்டியார் மிகவும் புகழத் தக்கவர். தன்நாட்டு வியாபாரம், தொழில் அதில் முக்கியமாக நெசவுத் தொழிலை முன்னேறச் செய்ய மிகுந்த செலவு உடல்சிரமம் என்பனவற்றிற்குட் பட்டுச் செட்டியார் செய்த தொண்டு அவருடைய செயல் திறமையை விளக்குகிறது. தியாகராய செட்டியாரின் பரந்த வாழ்க்கையே பிராமணரல்லாதார் இயக்கத்தின் தலைமைக்குத் தகுதியை உண்டாக்கியது. குல அபிமானத்திற்கும் இருப்பிடமான தென் நாட்டில் பிராமணரல்லாதார் இயக்கத்தினாலும் வாழ்க்கை யின் சிறந்த லட்சியத்தை விளக்கியுள்ளார். வித்யா-குல-உத்யோக அபிமானங்கள் வாழ்க்கை என்னும் அரங்கத்தைக் குறுகலாகச் செய்கின்றன. சமூகத்தில் குல அபிமானம் வெகுவாக வளர்ந்துவிட்டது. கல்வியில் அபிமானம் எல்லையைக் கடந்தது. உத்யோக அபிமானமே வாழ்க்கை இலட்சியமாகி விட்டது.

ஆங்கிலக் கல்வியின் தொடர்பிற்குப் பலனான இந்த அபிமானங்கள் மூன்றையும் ஒழிப்பதற்கு ஆங்கில வித்தையினால் பண்பட்ட தியாகராய செட்டியாருக்குத் தகுதி உண்டாயிற்று. காந்திமகான் தியாகத்தினால் சாதனை புரிய நினைத்த பிரயோசனங்களைத் தியாகராயசெட்டியார் எளிய சாமானிய மக்களின் ஆசனத்திற்குப் பாத்திரமான லாபத்தை விளைவிக்கும் சாதனங் கொண்டு சாதனை புரிய எண்ணினார். தியாகராயசெட்டியாரின் முயற்சிகள் நிந்தைகளுக்கும். கெட்ட எண்ணங்களுக்கும். கெட்ட அபிமானத்திற்கும் உள்ளானாலும் பிராமணரல்லாதரிடையே முன்னேற்றத்திற்குச் சாதனமான சுயகௌரவம் - தன்னம்பிக்கைகளை வளர்த்து அதனால் நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவின. உயர்ந்த இலட்சியங்களையும் தன்னலம் தலைதூக்கி வெறுப்பு, பொறாமைகள் வளர்ந்து விடுவது இயற்கையே. தன் நலத்திலேயே அக்கறையுள்ளவர்களான - அன்னாரைப்பின்பற்றி நடந்தவர்களிடையே வளர்ந்துவிட்ட ஆசை - வெறுப்பு - உணர்ச்சியின் உத்வேகம் என்பனவற்றிற்குச் செட்டியாரைப் பொறுப்பாக்குவது தகாது. பல சமூகத்தினரும் சாதி - மத - குல வேற்றுமைகளின்றி தியாகராய செட்டியாருக்குச் சமர்ப்பித்த ஸ்தோத்திர அஞ்சலிகள் அவருடைய பெருமையை விளக்குகின்றன.

ஆயிரக்கணக்கான மக்களிடையே தியாகராயசெட்டியாரின் தோற்றம் காண்பவரின் கண்களை ஈர்த்து வந்தது. ஒரு முறை கண்டவர்கள் அவரை என்றும் மறக்க முடியாது. வெள்ளை வெளேர் என்று மின்னும் தூய ஆடை, சந்தனம், ஊக்கம் பொங்கும் தன்மை, புன்சிரிப்பு, சாது நடத்தை, செயலாற்றும் திறமை, கல்வி, செல்வம், சுதந்திர விருப்பம், தொண்டாற்றும் விருப்பம் ஸர்.பிட்டி. தியாகராயசெட்டியாருக்குச் சென்னையிலும், மற்ற இடங்களிலும் இணையில்லாத மிகுந்த கௌரவத்தை விளைவிக்கக் காரணங்களாயின. தியாகராயசெட்டியாரின் வாழ்க்கையின் முக்கிய இலட்சிய உபதேசங்களை நிறைவேற்ற பிராமணரல்லாதாரும், பிராமணர்களும் அவர் செய்தவைகளைத் தாமும் செய்யப்புகுந்து நிலையாக அன்னாரின் நினைவை நிலைநாட்டி தம் வாழ்க்கைப் பயனைப் பெறுவார்களாக.

Original Telugu, Bharathi Translated
into Tamil
By
Vidvan N. Vijayaragharacharya
18, Rajagopalan Street, Madras - 33.

## 14. சமதர்சினி

முதல் உகாதி (தெலுங்கு வருஷப்பிறப்பு) மலர்
விபவ ஆண்டு

---

புகழுடலெய்திய திவான் பகத்தர். ஸர். பிட்டி
தியாகராய செட்டி கே.டி. அவர்களின்
புனித நினைவிற்காக வெளியிடப்பட்டது

இதில்
பலர் தெலுங்குப்புலவர்கள் எழுதிய மத - சமுதாய -
அரசியல் - இலக்கியம் முதலியவற்றைப் பற்றிய
பலகட்டுரைகளும், நாட்டுத் தலைவர்கள்,
பெரியவர்கள் முதலியவர்களின்
சித்திரப் படங்களும் அடங்கியுள்ளன.

சென்னை
பத்திரிகை உரிமையாளர்
ஸ்ரீயுத பிஞ்சல சுப்பிரமணியம் செட்டியார்
தம் சொந்த 'சமதர்சினி' அச்சகத்தில்
அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

ஆசிரியர்: பண்டித கானால இராமமூர்த்தி
அவர்களால் பரிசோதிக்கப்பட்டது.
1928-29.

| விலை சந்தாதார்களுக்கு | தபால் செலவு தனி | சந்தாதார் அல்லாதவர்களுக்கு |
|---|---|---|
| ரூ. 0-12-0 | | ரூ.1-0-0 |

# பிராமணரல்லாதார் இயக்கம்

சங்கரர், இராமானுஜர், மத்வாசாரியர் முதலிய மதத்தலைவர்களும், அவதார புருஷர்களான போதுலூரி வீரப்ரம்மம், வேமனயோகி, தூதேகுல சித்தப்பா முதலிய ஞானிகளுக்கும், ஆழ்வார்கள், நந்தனார் முதலிய பக்தர்களுக்கு பெற்ற தாயாக விளங்கிய தென்னிந்திய நாடு தற்போது பிராமணர், பிராமணரல்லாதார் என்னும் வாதங்களால் திணறிக் கொண்டிருந்தது. மதம் - சமூகம் இவற்றில் அதிகாரம் தாங்கிய புரோகித வழியைச் சார்ந்த பிராமணர்கள் முன்பு இந்து மன்னர்களின் ஆட்சியில் மந்திரி பதவி முதலிய பொறுப்பான அதிகாரமுள்ள உத்யோகங்களில் நிலை பெற்று இந்திய சமுதாயத்தைத் தம் இஷ்டப்படி அரசர்களின் பெயரால் (தடங்கலின்றி) அதிகாரம் செலுத்தி வந்தனர். வெளி நாட்டவராகிய ஆங்கிலேயர்களின் ஆட்சியிலும் இம்முறையே தொடர்ந்து வருவதைக் கவனித்த நாயர் அவர்களும், ஸர். பிட்டி. தியாகராயசெட்டியாரும் இந்த பிராமணரல்லாதார் இயக்கத்தை நிறுவினர். மாண்டேகு, செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களுக்குப் பின் இந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் மிகுந்த எண்ணிக்கையில் சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதால் சென்ற இரண்டு முறைகளிலும் மந்திரி வர்க்கத்தை நியமிக்கும் பொறுப்பு இந்தக் கட்சியினரிடம் இருந்து வந்தது. ஆனால் இம்முறை இக்கட்சியினர் தேர்ந்தெடுக்கப்படாததால் மந்திரி பதவிகள் பிறர் கைவசமாயின. இந்தக் கட்சியைச் சார்ந்தவர்கள் அதிகாரம் தாங்கியிருந்த காரணத்தால் சென்ற ஆறு ஆண்டுகள் வெளிப்படையாக மக்களின் கருத்தைச் சீர்திருத்தும் பணியில் இக்கட்சியினர் பாடுபடுவதற்குத்தக்க அவகாசம் கிடைக்காமற் போய்விட்டது. உத்யோகங்கள் கைநழுவிப் போனது ஒரு வகையில் நல்லதே ஆயிற்று. இந்த மாறுதலால் இக்கட்சியினரின் முக்கிய நோக்கம் முழுமையாக மாறிவிட்டது. இதற்கு கோயமுத்தூர் சபை தீர்மானமே (முடிவே) எடுத்துக்காட்டு. அரசாங்கத்தினர் பேரில் சார்ந்திருப்பதைவிட மக்களின் துணை கொண்டே நாட்டுக்குத் தொண்டு செய்ய இயலும் என்னும் நம்பிக்கை இப்பொழுதாவது ஏற்பட்டுள்ளது இக்கட்சியினரின் வருங்காலச் சுபத்திற்குச் சூசகமாக நினைக்க வேண்டியுள்ளது.

அரசியல் விஷயங்களிலிருந்து வேறு விஷயங்களைக்காணும் போது நாட்டின் முன்னேற்றம் மிகவும் வருந்தத்தக்கதாக உள்ளது. மிகவும் இளமை வயது கொண்டவர்களுக்குத் திருமணம் முடித்தல் .................. கடந்தகாலத்தில் பெரும்புகழ் கொண்டிருந்த சென்னபுரி ஆந்திரமகாசபையை ஏறக்குறைய

எழுபதாண்டுகள் சரித்திரமுள்ள சென்னபுரி ஆந்திர மகா சபையை நினைத்ததுமே அன்று இந்த நகரத்தில் புகழ் பெற்றிருந்த தெலுங்கு அதிரத - மகாரதர்களான பெரியோர்கள் பலர் நினைவிற்கு வருகின்றனர். சென்னை ஏதோ ஒரு பாஷையைச் சார்ந்த நிலப் பகுதிக்கு மட்டுமல்லாது மொத்தமான தென்னிந் தியாவிற்கு அரசியல் - பொருளாதாரம் - சமூகம் - பண்பாடு இவ்வனைத் திற்கும் முக்கிய நகரமாக விளங்கிய நாட்கள் அவை. இந்த நகர நிர்மாணம் - முன்னேற்றம் இவற்றின் சரித்திரத்தில் தெலுங்கர்களுக்கு ஏனைய மொழியினரைக் காட்டிலும் சிறந்த பங்கு உண்டு என்பது சரித்திரம் கண்ட உண்மை. மதராஸ் கார்ப்பரேஷன் அலுவலகம் உள்ள ரிப்பன் மாளிகைக்கும், சென்னை ஸென்ட்ரல் ரெயில்வே ஸ்டேஷனுக்கும் நடுவில் உள்ள செங்கல் கட்டடம் விக்டோரியா பப்ளிக்ஹால் இதற்கு ஒரு எடுத்துக்காட்டு.

ஸர். பிட்டி. தியாகராயசெட்டியார் தலைமையில் 1916ல் நடந்த ஒரு கூட்டத்தில் பனகல் ராஜா நாயனி வெங்கடரங்காராவ், கடப்பை வேணு கோபாலநாயுடு, ஆசண்ட சுப்பாராயுடு, வாராணாசி சூரியாராவ், ரங்காவஜ்சல ஸ்ரீராமசாஸ்திரி, ஹோதா சூரியநாராயண, காடிசர்ல ஹரிஸர்வோத்தமராவ்ச, உன்னவலஷ்மீநாராயண பந்துலு, பிஞ்சால சுப்பிரமணியசெட்டி, கோடம் ராஜூ புன்னய்யா, கே. வெங்கடராமசர்மா, ஜம்மலமடுகு வெங்கடரத்னம், நாளம் வெங்கடரத்னம், கொல்லிபர சீதாராமய்யா, அல்லாடி சீதாராம சாஸ்திரி, வெதுருமுடிசேஷகிரிராவ், கத்தெரங்கய்ய நாயுடு, காள்ளகூரி கோபாலராவ், கே. வெங்கடரத்னம் நாயுடு முதலிய தெலுங்கு பெரியார்கள் பலர் கூடி 'சென்னபுரி ஆந்திர மஹாஸபை'யை ஏற்படுத்தினார்.

சர். தியாகராயசெட்டியார் தலைவராகவும், ராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி, ராவ்பகதூர் பி.என். சர்மா, பண்டித டி. கோபாலாசார்லு, ராவ்பகதூர் டி. வரதராஜுலு நாயுடு இவர்கள் உபதலைவர்களாகவும், திவான்பகதூர் வாராணாசி சுப்ரமண்யம் பந்துலு, ராவ்ஸாஹிப் கலவல ராமானுஜம்செட்டி, பொத்தூரி அன்னய்யசெட்டி அறக்காவலர்களாகவும், காடிசர்ஹரிஸர்வோத்தம ராவ், நரசிம்மராவ்நாயுடு செயலாளர்களாகவும் ஒரு மனதாக முதல் காரிய வர்க்கத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பி.எஸ்.ஆர். கிருஷ்ணைய்யா

# 15. தியாகராயர் வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 27.4.1852 | .. | தியாகராயரின் தோற்றம். |
| 1876 | .. | இளங்கலைப் பட்டம் பெறுதல். |
| 1976 | .. | தாது ஆண்டு வறட்சியினால் துன்புற்ற மக்களுக்கு உணவளித்தல். |
| 1882 | .. | சென்னை மாநகராட்சி மன்ற உறுப்பினராதல். |
| 1882-1920 | .. | சென்னை மாநகராட்சி மன்ற உறுப்பினராகப் பணியாற்றுதல். |
| 16.5.1884 | .. | சென்னை மகாசன சபையின் தோற்றம் - 1912 வரை உறுப்பினராக இருத்தல். |
| 1884-1908 | .. | மணியக்காரர் சத்திரத்தின் சிறப்புச் செயலராகப் பணியாற்றுதல். |
| 1885 | .. | அனைத்திந்தியக் காங்கிரசுப் பேரவைத் தோற்றம். |
| 1885-1917 | .. | காங்கிரசின் உறுப்பினராகப் பணியாற்றுதல். |
| 1887 | .. | சென்னையில் நடைபெற்ற மூன்றாவது காங்கிரசு மாநாட்டில் கலந்துகொண்டு ரூ.200/- நன்கொடையும் வழங்குதல். |
| 1887-1924 | .. | பச்சையப்பர் அறக்கட்டளையின் உறுப்பினராகவும், தலைவராகவும் பணியாற்றுதல். |
| 26.3.1889 | .. | இவரது இடைவிடா முயற்சியால் அரசு விக்டோரியா தொழிற் பயிற்சிக் கூடம் நிறுவுதல். |
| 3.12.1897 | .. | தியாகராயர் தொடக்கப் பள்ளி நிறுவப் பெறுதல். |
| 3.12.1898 | .. | சென்னை ஆரியன் கிளப் தோற்றுவித்தல். |
| 1898 | .. | சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினராதல். |

| | | |
|---|---|---|
| 1904 | .. | தியாகராயர் தொடக்கப்பள்ளி உயர்நிலைப் பள்ளியாதல். |
| 1905 | .. | வேல்ஸ் இளவரசர் (ஐந்தாம் ஜார்ஜ்) வருகை - தியாகராயர் இளவரசரைத் தமது வளமனையில் வரவேற்றல். |
| 1905 | .. | செங்கல்வராய நாயக்கர் தொழில் நுட்பப் பயிற்சிப் பள்ளி தொடங்கப் பெறுதல். |
| 1908 | .. | அகில இந்திய நெசவுப் போட்டியில் பரிசுகள் பெறுதல். |
| 1908-1920 | .. | உலகப் பொதுப் பற்றாளர் கழகத்தின் துணைத் தலைவராகவும் தலைவராகவும் பணியாற்றுதல். |
| 1909 | .. | தென்னிந்திய வர்த்தக சங்கம் நிறுவி, 1921 வரை அதன் தலைவராகப் பணியாற்றுதல். |
| 1909 | .. | இராவ் பகதூர் பட்டம் பெறுதல். |
| 1910-1912 | .. | சென்னைச் சட்டமன்ற உறுப்பினராகப் பணி யாற்றுதல். |
| 1912 | .. | சென்னைத் திராவிடர் சங்கத்தின் தோற்றம் - அதில் ஈடுபாடு கொண்டு சொற்பொழிவாற்றுதல். |
| 1912-1918 | .. | சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழகத்தின் உறுப்பினராகப் பணியாற்றுதல். |
| 1912-1925 | .. | கூட்டுறவு வீட்டு வசதி நிறுவனத்தின் தலைவராகப் பணியாற்றுதல். |
| 1914 | .. | கோயமுத்தூர் வேளாண்மைக் கல்லூரியில் சொற்பொழிவாற்றுதல். |
| 21.10.1918 | .. | நீதிக்கட்சியின் சிறப்பு மாநாடு - சென்னை - தியாகராயர் தலைமை தாங்குதல். |
| 1.1.1919 | .. | திவான்பகதூர் பட்டம் பெறுதல். |
| 11.12.1.1919 | .. | நீதிக்கட்சியின் இரண்டாவது மாநாடு - சென்னை - சௌத் பாரோக் குழுவைப் புறக்கனித்துத் தமது மறுப்பைக் கடித மூலம் தெரிவித்தல். |

| | | |
|---|---|---|
| 16.5.1919 | .. | வாக்குரிமைக்குழு அறிக்கை வெளியீடு. |
| 19.6.1919 | .. | டாக்டர். டி. எம். நாயரை இங்கிலாந்துக்கு அனுப்புதல். |
| 17.7.1919 | .. | டாக்டர். நாயரின் மறைவு. |
| 19.9.1919 | .. | நீதிக்கட்சிக் கூட்டம் கூட்டி, வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தை வலியுறுத்தித் தீர்மானத்தை அரசுக்கு அனுப்புதல். |
| 29.9.1919 | .. | நீதிக் கட்சியின் மூன்றாவது மாநில மாநாடு - சென்னை |
| 1.1.1920 | .. | 'சர்' பட்டம் பெறுதல். |
| 27.2.1920 | .. | முதன் முதலில் சென்னையில் மலர்க் கண்காட்சி நடைபெறுதல். |
| 18.3.1920 | .. | மெஸ்டன் குழுவின் முடிவு வெளியீடு. |
| நவம்பர் 1920 | .. | முதல் பொதுத் தேர்தல் - நீதிக் கட்சியின் வெற்றி - அமைச்சரவை அமைத்தல். |
| | | சென்னை மாநகராட்சி மன்றத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுதல். |
| 1920-23.10.23 | .. | சென்னை மாநகராட்சி மன்றத் தலைவராகப் பணியாற்றுதல். |
| 1921 | .. | தொழிலாளர் வேலை நிறுத்தம் - இவரது முயற்சியால் தொழிலாளர் வேலைக்குத் திரும்புதல். |
| 1921 | .. | கானாட் பிரபுவின் வருகை - தியாகராயர் வரவேற்பளித்தல். |
| 1921-1924 | .. | உலகப் பொதுப் பற்றாளர் கழகத் தலைவராகப் பணியாற்றுதல். |
| 13.1.1922 | .. | வேல்ஸ் இளவரசி (எட்டாம் எட்வர்ட்) வருகை - தியாகராயர் துறைமுகத்தில் வரவேற்பளித்தல். |
| 13.1.1922 | .. | சட்டமன்றத்திற்குச் செல்லாதவாறு ஒத்துழையாமை இயக்கத்தினர் தியாகராயரைத் தாக்குதல் - அவரது இல்லத்தையும் சேதப்படுத்துதல். |

| | | |
|---|---|---|
| 9.5.1922 | | சென்னை மாநகராட்சிக்குச் சொந்தமான தென்னை மரங்களில் கள் இறக்குவதற்கு அனுமதிப்பதில்லை என்றும் தீர்மானம் தியாகராயரின் தலைமையில் நிறைவேற்றப் பெறுதல். |
| 1923 | | இரண்டாவது பொதுத் தேர்தல் - நீதிக்கட்சி மீண்டும் வென்று அமைச்சரவை அமைத்தல். |
| 15.4.1915 | .. | உலகப் பொதுபற்றாளர் கழகத்திற்கு வருகை தந்து மகாத்மா காந்தியடிகளுக்கு மாலை அணிவித்து வரவேற்பளித்தல். |
| 1916 | . | சர். வில்லியம் மேயரைச் சந்தித்துத் தொழில் வளர்ச்சி பற்றி உரையாடுதல். |
| 1916-1921 | .. | சென்னபுரி ஆந்திர மகாசபையை நிறுவித் தலைவராகப் பணியாற்றுதல். |
| 1916-1917 | .. | டாக்டர். டி.எம். நாயருடன் இணைந்து தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (நீதிக்கட்சி) தோற்றுவித்து, அதன் பொதுச் செயலாளராகப் பணியாற்றுதல் - தென்னிந்திய மக்கள் சங்கம் தோற்றுவித்து அதன் தலைவராகப் பணியாற்றுதல் - 'ஜஸ்டிஸ்', 'திராவிடன்', 'ஆந்திரப் பிரகாஸிகா' இதழ்களை வெளியிடுதல். |
| 1917 | .. | 'பிராமணரல்லாதாரரின் உரிமைச் சாசனம்' என்றழைக்கப் பெறும் தமது கொள்கை அறிவிப்பை வெளியிடுதல். |
| 19.5.1917 | .. | தமது குடும்பச் சொத்தில் ஒரு பகுதியைக் கல்வி வளர்ச்சிக்காக வழங்குதல். |
| 19.8.1917 | .. | கோயமுத்தூர் - பிராமணரல்லாதார் மாநாடு |
| 27, 28.10.17 | .. | பிக்காவோல் மாநாடு. |
| 3, 4.11.1917 | .. | புலிவெந்தலா மாநாடு. |
| 11, 12.11.1917 | .. | பெசவாடா மாநாடு - தலைமை தாங்குதல். |
| 30.11.1917<br>1.12.1917 | .. | திருநெல்வேலி மாநாடு |
| 15.12.1917 | .. | சென்னை வந்த மாண்டேகு - செம்ஸ் போர்டுக்கு வரவேற்பளித்துக் கோரிக்கையைக் கொடுத்தல். |

| | | |
|---|---|---|
| டிசம்பர் 1917 | .. | சேலம் மாநாடு |
| 22.12.1917 | .. | சென்னை மாகாணச் சங்கத்தின் தோற்றம் - இச் சங்கம் நீதிக் கட்சிக்கு எதிராகத் தோற்று விக்கப் பெற்றது. |
| 28, 29.12.1917 | .. | நீதிக்கட்சியின் முதல் மாநில மாநாடு - சென்னை - தியாகராயர் வரவேற்புக் குழுத் தலைமைப் பொறுப்பேற்று நடத்துதல். |
| 14.9.1918 | .. | இந்தியா அமைச்சருக்கும், அரசப் பிரதிநிதிக்கும் கடிதம் எழுதுதல். |
| 13.10.1918 | .. | மதுரை மாநாடு |
| 20.10.1923 | .. | மருத்துவ மாநாட்டில் வரவேற்புக் குழுத் தலைவ ராகப் பணியாற்றுதல். |
| 23.10.1923 | .. | மாநகராட்சி மன்றத் தலைமைப் பதவியின்றும் விலகுதல். |
| 1923 | .. | பச்சையப்பர் மன்றத்தில் தியாகராயரின் உருவப் படம் திறத்தல். |
| 27.11.1923 | .. | நீதிக்கட்சி அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப் பெற்றுத் தோல்வியுறுதல். |
| 1924 | .. | பெல்காம் பிராமணரல்லாதார் மாநாடு. |
| 1924 | .. | சீனியர் தியாகராயரின் மறைவு. |
| 13.4.1925 | .. | தேவாங்கர் மாநாட்டில் கலந்துகொண்டு, கைத்தறிக் கண்காட்சியைத் தொடங்கி வைத்தல். |
| 27.4.1925 | .. | தமது இல்லத்தில் ஆளுநரைச் சந்தித்து கூவம் சீரமைப்புப் பற்றி உரையாடுதல். |
| 28.4.1925 | .. | தியாகராயரின் மறைவு. |
| 28.4.1925 | .. | தியாகராயரின் நினைவைப் போற்றுமுகமாக, உலகப் பொதுப் பற்றாளர் கழகத்தில் மதுவகை களை அனுமதிப்பதில்லை என்று தீர்மானம் நிறைவேற்றப் பெறுதல். |



சட்டமன்ற உறுப்பினருடன் தியாகராயர்
(1910 – 1912)



நீதிக்கட்சி உறுப்பினர்களுடன் தியாகராயர்
(நீதிக்கட்சி அலுவலகத்தில்)



வேல்ஸ் இளவரசருக்குத் தியாகராயர்
வரவேற்பளித்தல்
(சென்னைத் துறைமுகத்தில்)



தியாகராயர் ஆளுநருக்குத் தேநீர் விருந்தளித்தல்



நீதிக்கட்சி நண்பர்களுடன் தியாகராயர்
(தமது அலுவலகத்தில்)



தியாகராயரின் தலைப்பாகை
இல்லாத எளிய தோற்றம்



தியாகராயரின் முழுவுருவச்சிலை
– சென்னை ரிப்பன் கட்டடத்தின் முன்புறம்



வளமனையில் நண்பர்களுடன் தியாகராயர்



ஜூனியர் தியாகராயர்



சீனியர் தியாகராயர்



தியாகராயரும் பேரர்களும்



தியாகராயரும், துணைவியாரும்



மருத்துவ மாநாட்டுத் தொண்டர்களுடன்
தியாகராயர்



தியாகராயரின் உருவப்படத்தை ஊர்வலமாக
எடுத்துச் செல்லுதல்






தியாகராயரின் வளமனை
– சுண்ணாம்புக்குளம்



தியாகராயரின் கல்லறை

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65. 00 |
| கதிர்வேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600. 00 |
| எண்பத்து மூன்றில் தமிழ், பகுதி–3 | 30. 00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–1 | 50. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–2 | 40. 00 |
| நாட்டிய நன்னூல் | 25. 00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20. 00 |
| கபிலர் | 70. 00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75. 00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழக மேடை நாடகப் பெண் கலைஞர்கள் – குறிப்பேடு | 25. 00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80. 00 |
| Cilappatikaram (மொ.நூ.ம.ப) | 100. 00 |
| காதம்பரி மூலமும் வசனமும் (ம.ப) | 125. 00 |
| Tani pacura togai (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Dedication (மொ.நூ.ம.ப) | 25. 00 |
| Temple chimes (மொ.நூ.ம.ப) | 20. 00 |
| Nala venba (மொ.நூ.ம.ப) | 45. 00 |
| Tamil Heroic Poems (மொ.நூ.ம.ப) | 40. 00 |
| Six Long Poems From Sangam Tamil (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Kurinci-p-pattu-Muttollayiram (மொ.நூ.ம.ப) | 40. 00 |
| Kuruntokai (மொ.நூ.ம.ப) | 110. 00 |
| Landscape And Poetry (ம.ப) | 50. 00 |
| Tamil Culture and Civilization (ம.ப) | 60. 00 |
| Tolkappiyam and Astadhyayi | 110. 00 |
| தமிழக மகளிர் தொடக்க காலமுதல் ஆறாம் நூற்றாண்டு வரை | 50. 00 |
| தொல்காப்பியம் – பொருள் – செய்யுளியல், பகுதி – 1 | 50. 00 |
| தடிவீரசுவாமிகதை வன்னியராயன்கதை (சு.ப) | 55. 00 |
| சடத்தலம் (சு.ப) | 40. 00 |
| காத்தவராய நாடகம் (சு.ப) | 30. 00 |
| மதங்க சூளாமணி (ம.ப) | 40. 00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் (ம.ப) | 32.00 |
| தமிழில் நவீன நாடகம் (தொ.நூ) | 70. 00 |
| இலக்கியத்தில் சோதிடம் | 65. 00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | 80. 00 |